# ஸ்ரீ குருவம்ச காவ்ய ஸங்க்ரஹம்

9-1





ஸ்ரீ சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு.



உ

# ஸ்ரீ குருவம்சகாவ்ய ஸங்க்ரஹம்

(ஸ்ரீ சிருங்கேரி வியாக்யான பீடத்தின்
குரு பரம்பரை வரலாறு)



காசி ஸ்ரீ லக்ஷ்மணகவி இயற்றிய

## குருவம்ச மஹாகாவ்யத்தைத் தழுவியது

டாக்டர் *P. S.* லோகநாதன் அவர்களின்
மதிப்புரையுடனும் குறிப்புகளுடனும் அனுபந்தங்களுடனும்
கூடியது

*K. V.* சுப்பரத்னம்
(அட்வகேட், ஈரோடு)
(அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதி பொது காரியதர்சி)
அவர்களால் மொழி பெயர்க்கப்பட்டது.

1969 — 1.50



श्रीसच्चिदानन्ददिव्यशिवाभिनवपूर्वकः ।
नृसिह्मभारती कालट्युद्धारक उदारधीः ॥

श्रीचन्द्रशेखराभिख्यभारती गुरुसत्तमः ।
जीवन्मुक्तितपश्चर्यादिव्यज्ञानसमुज्वलः ॥





विद्यातीर्थाभिधो योगी विद्याविमलमानसः ।
सर्वत्र शंकराचार्यमूर्तिकीर्तिप्रसाधकः ॥

ஓம்

ஸ்ரீ குருப்யோ நம:

# முன்னுரை

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் ஸ்தாபனம் செய்த நான்கு ஆம்நாய மடங்களில் முதலாவது விசேஷ மகிமையை உடைய சிருங்கேரி பீடம். ஆதிசங்கரர் சிருங்கேரியின் பெருமையைக்கண்டு அதை வித்யாஸ்தானமாக்கி அங்கு தானே சுமார் 12 வருஷங்கள் வசித்து சிஷ்யர்களுக்கு வேதாந்தம் கற்பித்தார் என்பதும், தன் பிரதான சிஷ்யரான ஸுரேசுவராசாரியாரை இங்கு முதல் பீடாதிபதியாக்கினுர் என்பதும் குறிப்பிடத்தக்கது. அது முதல் நாளது வரை சிருங்கேரி பீடத்தில் அவிச்சின்னமாக மஹான்கள் பீடாதிபதிகளாக இருந்து வருகிருர்கள். ஒவ்வொருவரும் அபூர்வ சக்தி வாய்ந்தவர்களாகவும் ஜீவன்முக்தர்களாகவும் விளங்கி வருகிருர்கள். இப்படிப்பட்ட சிருங்கேரி பீடத்தின் குரு பரம்பரையின் விவரங்களை கூடியமட்டும் ஒவ்வொரு சிஷ்யனும் தெரிந்துகொள்ளவேண்டியது முக்கிய கடமையேயாகும்.

19 ஸர்க்கங்கள் கொண்ட குருவம்ச காவியம் சிருங்கேரி பீடத்தில் 27-வது பீடாதிபதியாக (1705-1741) அமர்ந்த ஸகலவித சக்தியும் வாய்ந்தவரான ஸ்ரீஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகளின் ஆக்ஞையின்பேரில் மகாகவி ஸ்ரீ காசிலக்ஷ்மண சாஸ்திரிகளால் எழுதப்பட்டது. கி. பி. 1735 வருஷம் வரை உள்ள சரித்திரமும் நிகழ்ச்சியுமே இதில் அடங்கியது

முதல் மூன்று ஸர்க்கங்களில் ஸ்ரீ ஆதிசங்கரரின் சரித்திரமும் 4 முதல் 11 முடிய ஸ்ரீ சுரேசுவராசாரியார் முதல் 26வது பீடாதிபதிகளான ஸ்ரீ நரஸிம்மபாரதீ ஸ்வாமிகள் வரை உள்ள மஹான்களின் சரித்திரமும், 12 முதல் 19 முடிய 27-வது பீடாதிபதிகளான ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகளின் விஸ்தாரமான சரித்திரம், அவருடைய யாத்திரை விவரங்கள், சிருங்கேரியில் உள்ள கோவில்களில் அவர் நடத்திய உத்ஸவ விவரங்கள் இவைகளும் அடங்கிஉள்ளன. சிருங்கேரியைப் பற்றிய எல்லா விவரங்களும் இந்த காவியத்தில் கொடுத்திருப்பதுபோல் விஸ்தாரமாக வேறு கிரந்தங்களில் கிடையாது.

ஆகவே இதன் சிறப்பையும் முக்யத்வத்தையும் நன்கு தெரிந்து கொள்ளலாம்.

இந்தக்ரந்தத்தில் மண்டனர் என்று இருவர் இருந்தார்கள். அதில் ஒருவருக்கு விசுவரூபர் என்ற பெயரும் உண்டு. அவர்தான் ஸுரேசுவராசாரியாரானுர் என்று கண்டிருக்கிறது. இருவரும் ஒன்றே என்று சிலர் கூறுகின்றனர். அது சரியல்ல இதுதான் சரியானது என்பது விசேஷ ஆராய்ச்சியின் முடிவு மேலும் இதைப்பற்றி ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவ நரசிம்ம பாரதீ ஸ்வாமிகளிடம் தெரிவித்தபோது அவர் "இரண்டு மண்டனர்கள் உண்டு. 'மண்டன' என்பது அக்காலத்தில் மரியாதையைக் காட்டும் பதம். ஒருமண்டனர் கடைசி வரையில் கிருஹஸ்தராகவே இருந்தார். இவரை மண்டன மிச்ரர் என்பார். மற்றவர் மண்டனர் என்ற விசுவரூபர். இவரே சுரேசுவராசாரியாரானுர்" என்று விளக்கிக்கூறி ஸந்தேஹத்தை நீக்கினுர்கள்.

மேலும், இந்த கிரந்தத்தில் வித்யாரண்யர், ஸாயணர், மாதவர் ஆகியவர்கள் வெவ்வேறு என்று கண்டிருக்கிறது. இதுவும் சரித்திர ஆராய்ச்சியாளர்களின் உறுதியான முடிவு.

இந்த க்ரந்தத்தின் கையெழுத்து ப்ரதி தேவநாகரியில் சிருங்கேரி மடம் புத்தகாலயத்தில் உள்ளது. அதில் முதல் ஏழு ஸர்க்கங்களை ஸம்ஸ்க்ருத வியாக்கியானத்துடன் சுமார் 50 வருஷங்களுக்கு முன்பு ஸ்ரீரங்கம் ஸ்ரீ T. K. பாலஸுப்ரமண்யய்யர் தமது ஸ்ரீ வாணீவிலாஸ் ப்ரஸ்ஸில் அச்சிட்டார். 19 ஸர்க்கங்கள் அடங்கிய க்ரந்தம் முழுவதும் மூலம் மட்டும் சமீபத்தில் ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குருவின் அனுகிரகத்தின்பேரில் தேவநாகரியில் அதே அச்சாபீசில் அச்சிட்டு வெளியாயிருக்கிறது. ஆனுல் இந்த ஸம்ஸ்கிருத நூல் ஸம்ஸ்கிருத பாஷையில் பரிசயமில்லாத பலருக்கு படிக்க முடியாமல் இருப்பதால் அவர்களும்இதன் கருத்தை அறியவேண்டி இதன் சுருக்கத்தைத் தமிழில் வெளிப்படுத்த வேண்டும் என்று சில நண்பர்கள் சொன்னதால் இதை ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு அவர்களிடம் விண்ணப்பித்து அவருடைய அனுக்ரகத்தின்பேரில் குருகைங்கர்யமாக எண்ணி இதைத் துவக்கினேன். மூலக்ரந்தத்தில் 15 ஸர்க்கங்களுக்கு க்ரந்த கர்த்தாவே விசேஷமான

அர்த்தங்களை விளக்கக்கூடிய "பாவபோதினி" என்று வ்யாக்கியானத்தை எழுதி இருக்கிறார். அதில் 8-வது ஸர்க்கம் முதல் 15 வது ஸர்க்கம் வரை உள்ள மூலத்தின் வியாக்கியானம் அச்சாகவில்லை அந்த வியாக்கியானம் சிருங்கேரி மடம் புத்தகாலயத்தில் ஏட்டுச்சுவடிகளிலிருக்கிறது. அது எனக்குக் கிடைத்ததால் அதில் கூறியுள்ள பல விஷயங்களை இதில் காட்டி இருக்கிறேன்.

மேலும் ஸ்ரீ வாணீ விலாஸ்ப்ரஸ்ஸில் அச்சான மூல க்ரந்தத்தில் என் மதிப்புக்குரிய ஸ்ரீ K. R. வெங்கடராமன் அவர்கள் கொடுத்துள்ள சரித்திரசம்பந்தமான குறிப்புகள் எனக்கு மிகவும் பயன்பட்டன. அவைகளும் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு அந்தந்த ஸர்க்கத்தின் முடிவில் சேர்க்கப் பட்டுள்ளன. இதை எழுதும்படி என்னைத் தூண்டிய அந்த நண்பருக்கு என் மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

இந்த க்ரந்தத்தில் பல விவரங்கள் தெளிவாகின்றன. இப்போது சிருங்கேரி பீடாதிபதிகளின் உபயோகத்தி லிருக்கும் கிரீடம், பல்லக்கு குடைகள் முதலிய பிருதுகள் ராஜ சின்னங்கள் இவை சுமார் 650 வருஷங்களுக்கு முன்பே அரசர்களால் குருகாணிக்கையாக அர்ப்பணம் செய்யப்பட்டவை. அதுமுதல் அவை அமுலில் இருக்கிறது. இப்போது புதிதல்ல. மேலும் சிருங்கேரியில் ஸ்ரீ சாரதாம்பாள் ஆலயத்திலும் ஸ்ரீ மலஹானிகரேசுவரர் ஆலயத்திலும் இப்போது நடந்துவரும் நவராத்திரி முதலிய விசேஷ உத்ஸவங்கள், ஹோமங்கள் முதலியவை சென்ற பல நூற்றுண்டுகளாகவே இதே முறையில் நடந்துவருகின்றன. அந்தக்காலம் முதலேயே சிருங்கேரி பீடாதிபதிகள் நவராத்ரியில் இரவு சிம்மாஸனத்தில் அமர்ந்து தர்பார் நடத்தியதும் வித்வத்ஸதஸ்கள் நடத்தியதும் ஸ்ரீவித்யாரண்யர் காலம் முதல் சிருங்கேரி பீடத்துக்கும் விஜயநகரம், கௌதி, மகாராஷ்டிர பீஷ்வாக்கள் முதலிய அரசர்களுக்கும் உள்ள நெருங்கிய சம்பந்தமும் ஆதிகாலத்தில் அரசர்களால் ஸ்ரீ சிருங்கேரி மடத்துக்கு பூமி (விருத்திகள்) குருகாணிக்கை யாகக் கொடுக்கப்பட்ட விவரங்களும் இந்த க்ரந்தத்தில் நன்கு வெளியாகின்றன. இந்த சுருக்கத்தைப் படித்தால் பின்பு ஸம்ஸ்கிருதத்தில் உள்ள விஸ்தாரமான மூல க்ரந்தத்தைப் படிக்க உத்ஸாஹம் வரக்கூடும்.

இந்த குருவம்சசரித்திரசுருக்கத்தை என் சிறிய குருகாணிக்கையாக இப்போது சிருங்கேரி பீடத்தை அலங்கரித்து வரும் ஸ்ரீ ஜகத்குருவின் பாதாரவிந்தங்களில் வினயத்துடன் ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து ஸமர்ப்பிக்கிறேன்.

*K. V* **சுப்பரத்னம்** (வக்கீல்) ஈரோடு.
பொதுக்காரியதரிசி
அகில பாரத சங்கர ஸேவாஸமிதி.

9—1

# மதிப்புரை

டாக்டர் P. S. லோகநாதன்
(Director General
National Council of Applied Economic Research Rtd.)

ஸ்ரீ ஆதி சங்கரர் ஏற்படுத்திய ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீசாரதா பீடத்தில், ஸ்ரீ ஸுரேச்வரர் முதல் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ (2) ஸ்வாமிகள் வரை உள்ள ஆசார்ய பரம்பரையை விளக்கும் ஸ்ரீகுருவம்ச மஹாகாவ்யம் என்ற நூலுக்கு மதிப்புரை எழுதுமாறு ஸ்ரீ சுப்பரத்னம் என்னைக்கேட்டுக்கொண்டார். இதை நான் ஒரு பெரும் பாக்யமாகவே கருதி அதற்கு ஒப்புக் கொண்டேன்.

இந்த ஸ்ரீ குருவம்ச மஹாகாவ்யமானது ஸம்ஸ்கிருத மொழியில் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ (2) ஸ்வாமிகள் காலத்தில் (1705–41) ஸ்ரீ மடத்தின் ஆஸ்தான வித்வானுக இருந்த ஸ்ரீ காசி லக்ஷ்மண சாஸ்திரிகள் என்பவரால் பாடப்பட்டது. இந்த பழமையான, புகழ்பெற்ற ஆனுல் உலகுக்கு தெரியாமல் இருந்த ஸ்ரீ குருவம்ச மஹாகாவ்யமானது சிருங்கேரி ஸ்ரீ மடம் நூலகத்தில் பாதுகாத்து வைக்கப்பட்டிருந்தது நமது அதிர்ஷ்டமே. இந்த காவ்யத்தின் மூலம் நாம் ஸ்ரீ ஸுரேச்வரர் முதல் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகள் வரை, II ஸ்ரீ சிருங்கேரி பீடத்தை அலங்கரித்து வந்த பல பெரியோர்களின் வரலாறுகளை நாம் அறிகிரும். இந்த காவ்யமானது 19 ஸர்க்கங்கள் கொண்டது. முதல் மூன்று ஸர்க்கங்களில் ஸ்ரீ ஆதி சங்கரரின் வாழ்க்கையையும், நான்காவது ஸர்க்கம் முதல் சிருங்கேரி குருபரம்பரையில் வந்துள்ள பல ஆசாரியர்கள் வாழ்க்கையையும் நாம் அறிந்துகொள்ள முடிகிறது.

தற்போது இப்பீடத்தை அலங்கரிக்கும் ஸ்ரீ அபிநவ வித்யா தீர்த்த மஹாஸ்வாமிகள் ஸ்ரீ சிருங்கேரி பீடத்தில் ஸ்ரீ ஆதி சங்கரர் முதல் வந்த பல ஆசார்யர்களைத் தொடர்ந்து 35வது ஆசார்யராக விளங்குவது நாம் யாவரும் அறிந்ததே. இந்த ஆசார்யர்கள் ஸ்ரீ சிருங்கேரி பீடத்தில் சிறந்து விளங்கிய ஸ்ரீ சந்த்ரசேகர பாரதீ மஹாஸ்வாமிகளின் சிஷ்யராவார் நம் அனைவருக்கும் தற்போது விளங்கும் ஆசார்யர்களைப்பற்றித் தெரிந்தாலும் ஸ்ரீ சிருங்கேரி பீடத்தை அலங்கரித்த முன் ஆசார்யர்களைப்பற்றி அநேகமாக தெரியவில்லை. இக்குறை

யைத்தீர்க்க ஸ்ரீ காசி லக்ஷ்மண சாஸ்திரிகள், ஸ்ரீ ஸுரேச்வரர் முதல் ஸ்ரீஸச்சிதாநந்தபாரதீ ஸ்வாமிகள் வரை பீடத்தை அலங்கரித்த பல மஹான்களின் வாழ்க்கையையும், அவர்கள் ஸ்ரீசாரதா பீடம் சிறந்து விளங்கிவரச்செய்த பல கார்யங்களை யும் ஸ்ரீ குருவம்ச மஹாகாவ்யத்தின் மூலம் நாம் நன்கு அறியும் படிசெய்திருக்கிறார்.

இந்த ஸ்ரீ குருவம்ச மஹா காவ்யமானது ஸம்ஸ்கிருத பாஷையில் இயற்றப்பட்டிருப்பதால், நம்மில் பலருக்கு அதில் அடங்கிய பல முக்ய விஷயங்களை அறிய வாய்ப்பில்லாமல் இருந்தது. இந்த காவ்யத்தில் அழகான முறையில் நீர்வளம், நிலவளம், மலைசூழ்ந்த சிருங்கேரி, மைசூரில் சில இடங்கள், ஆந்திராவில் சில இடங்கள் முதலியவைகளைப்பற்றி விளக்கம் கூறி அதற்குப்பின் ஒவ்வொரு ஸ்தலமும் முன் ஆசார்யர்களின் வரவினால் எப்படி சிறப்படைந்தது என்பதும் சொல்லப் பட்டிருக்கிறது. ஆகையால் இந்த காவ்யத்தை தமிழில் மொழி பெயர்ப்பதால் நம்மில் பலரும் படித்து ஸ்ரீ சிருங்கேரி பீடத்தை அலங்கரித்த பல மஹான்களையும் அவர்கள் செய்துள்ள சிறப்புக்களையும் அறிய முடியும் என்பதை உணர்ந்து ஸ்ரீஅபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள் ஸ்ரீ சுப்பரத்னம் அவர்களை மேற்படி காவ்யத்தை தமிழில் மொழி பெயர்க்க உத்தரவிட்டார்.

ஸ்ரீ சுப்பரத்னம் அவர்கள் குருவின் கட்டளைக்கு பணிந்து காவ்யத்தை மொழி பெயர்த்ததுடன். ஸ்ரீஸச்சிதானந்த பாரதீ (II)க்கு பிறகு பீடத்தை இன்றுவரை அலங்கரிக்கும் மகான் களின் சரித்திரத்தையும் சேர்த்து தமிழாக்கத்தை குறை வில்லாமல் நன்கு பூர்த்திசெய்து விட்டார். தமிழாக்கத்தை படிப்பதின் மூலம் ஸம்ஸ்கிருத மூலத்திலுள்ள அழகையும் பக்தி ரசத்தையும் அப்படியே அறிய முடிகிறது.

ஸ்ரீ ஆதிசங்கரர் ஈசுவரனின் மறு அவதாரமே ஆவர் அவர் வாழ்க்கை முழுவதும் பல ஆச்சரியமான சம்பவங்கள் நிறைந்தது. கெட்ட எண்ணமுள்ள ஒரு காபாலிகன் அவரின் உயிரை யாசித்தபோது தயங்காமல் ஒப்புக்கொண்டதும், அவர் தன் அன்னையின் விருப்பப்படி தாயின் கடைசி நேரத்தில் காலடி வந்ததும், சிவ புஜங்கம் விஷ்ணுபுஜங்கம் முதலிய ஸ்தோத்திரங்களை இயற்றியதும் உண்மையிலேயே ஆச்சர்யமான சம்பவங்களாகும்.

இன்றைய இந்தியா உயர்ந்த நிலையில் இருப்பதற்கு ஸ்ரீ ஆதி சங்கரர்தான் காரணம் என்றால் மிகையாகாது. வேதாந்த மில்லாவிடில் இந்தியா இல்லை ஆதிசங்கரர் இல்லாமல் வேதாந்தமில்லை. நம் நாடு, நமது கலாசாரம், பரம்பரை மரபு ஆகியவைகள் மிக உயர்ந்த நிலையில் இன்று இருக்க ஸ்ரீ ஆதி சங்கரர் அருளிய வேதாந்த தத்துவங்களே காரண மாகிறது. ஆனாலும் சங்கரர் பெருமை இன்றைய இந்தியா விலே பெயரளவில் ஒரு குறிப்பிட்ட வர்க்கத்தினரிடையே தான் நிலவுகிறது. ஸ்ரீ சங்கரரின் மதமும் அத்வைத தத்துவமும் சாதாரண மனிதர்களுக்கு விளங்குவது கடின மானதாக இருந்தும் ஒரு காரணமாக இருந்திருக்கலாம். ஆனாலும், அவர் கொள்கையை மக்களிடம் பரவச்செய்ய தக்க முயற்சியை நாம் கைக்கொள்ளவில்லை என்றே நான் நினைக்கிறேன். இந்தியாவில் இன்றைய அரசாங்கம் பலரின் நினைவாக அரசாங்க விடுமுறை அளித்து வருகிறது. ஆனால் இன்னும் சங்கர ஜயந்தியை ஒரு தேசீய பொது விடுமுறை நாளாக அறிவிக்கவில்லை. இன்றைய மதச்சார்பற்ற இந்தியா என்பது மதங்களில் நம்பிக்கை குறைந்த இந்தியா என்று பொருள் படாது என்று திரு. S. ராதாகிருஷ்ணன் கூறியுள்ளார். ஆனால் மதங்களின் மூலம் மக்கள் கடவுளிடம் செல்லலாம் என்று கூறுவதை வரவேற்கிறது.

ஸ்ரீ ஸுரேச்வரர் முதல் சிருங்கேரி பீடத்தை அலங்கரித்த மஹான்கள் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்தும், சுலபமாக யாவரும் அறிந்து கொள்ளுமாறு எளிய முறையில் உபன்யாசம் செய்தும் மக்களின் மனதில் பக்தி மார்க்கத்தை கடை பிடிக்க வழி செய்துகொண்டு விளங்கினார்கள். பீடத்தை அலங்கரித்த மகான்கள் ஒவ்வொருவரும் ஒரு விதத்தில் மகா புருஷர்களாக விளங்கினார்கள். இவர்களில் ஸ்ரீ வித்யாதீர்த்தர் ஓர் பெரியமஹான். இவருக்குப்பின்னால் வந்த ஸ்ரீவித்யாரண் யருடைய அனுக்ரகத்தின்பேரில் சாலிவாகன சகாப்தம் 1258 தாது வருஷம் வைகாசிமாதம் சுக்லபக்ஷம் ஸப்தமி மகா நக்ஷத்ரம் கூடிய ஞாயிற்றுக்கிழமை தினம் விஜய நகரம் என்ற ராஜதானி நிர்மாணம் செய்யப்பட்டு, ஹரிஹரர் என்ற அரசருக்கு மகுடாபிஷேகமும் இவரால் செய்யப்பட்டது. ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதி ஒரு முக்யமான மகான் ஆவார். இவர் பீடத்திலிருந்த காலத்தில் பல கஷ்டங்களுக்கு உட்

பட்டாலும், தன்னுடைய தபசின் மகிமையினுல் எல்லா கஷ்டங்களையும் சமாளித்து ஸ்ரீ சிருங்கேரி பீடத்தை சிறப்பாக ஆக்கினுர். பலகாலங்கள் அவர் மடத்தைவிட்டு வெளியில் இருக்கும்படி ஏற்பட்டது. பல ஆசார்யர்கள் தங்கள் காலத்தில் திக்விஜயம் செய்துள்ளனர். இந்த திக் விஜயத் தினுல் பல அரசர்களும் மக்களும் பயனடைந்தனர்.

ஒரு சில அரசர்களைத்தவிர மற்ற எல்லா அரசர்களும் ஸ்ரீ சிருங்கேரி பீடத்தின் பக்தர்களாகவே இருந்தனர். இவர்கள் மடத்தை பலவகையிலும் பலப்படுத்தினர். இந்த காவ்யத்தின் மூலம் ஹைதர், திப்பு, பேஷ்வாக்கள், சிந்தியா முதலியோர் மடத்தின் பக்தர்களாக இருந்து வந்தது தெரியவருகிறது.

ஸ்ரீ சச்சிதானந்த சிவாபிநவ நரஸிம்ம பாரதீ ஸ்வாமிகள் ஆதி சங்கரரின் மறு அவதாரம் என்பது அவர்களை தர்சித்தவர் களுக்கு நன்கு தெரியும். ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமி களும் ஒரு அவதார புருஷர் ப்ரஹ்மத்தை அறிந்த ஜீவன் முக்தர். இவர்களை குருவாக அடைந்து இன்று பீடத்தை அலங்கரிப்பவர் ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள். பீடத்தை அலங்கரித்த பல மகான்கள் பக்தி மார்க்கத்திலும், தபோ மகிமையிலும் சிறந்து விளங்கினர். பலர் அருளிய பல க்ரந்தங்கள் புத்தக வடிவில் வந்துள்ளன. இன்றைய பீடாதி பதியை தரிசிப்பதே நம்மையெல்லாம் பாக்யவான்களாக செய்கிறது என்ருல், இந்தியாவில், குறிப்பாக தென்னிந்தியா வில் உள்ள நாம், இந்த ஆதிசங்கரர் முதல் ஸ்ரீ அபிநவவித்யா தீர்த்த ஸ்வாமிகள் வரை இடைவிடாத குரு பரம்பரையை அடைந்திருப்பதற்கு மகத்தான ஒரு பாக்யத்தை பெற்றிருக்க வேண்டும்.

ஸ்ரீ சுப்பரத்னம் அவர்கள் இந்த காவ்யத்தை எளிய முறையில் எல்லோரும் அறியும்படி செய்துள்ளார்கள்.

ஒரு யோசனையை நான் இங்கு கூற விரும்புகிறேன் நமது குருபரம்பரையை விளக்கும் ஒரு அட்டவணை பெயர். பீடத்தில் இருந்த காலம் முதலியவற்றை வரிசைக்கிரமமாக வெளியிட்டால், இந்த அட்டவணை வருங்கால சந்ததியினர் ஸ்ரீ சிருங்கேரி பீடத்தில் இருந்த ஆசார்யர்களை நன்ருக புரிந்து கொள்ள சௌகரியமாக இருக்கும்,

## நமது நன்றி

டாக்டர் P. S. லோகநாதன் அவர்களுடைய மதிப்புரையுடன் கூடி இந்நூல் வெளிவருவது மகிழ்ச்சிக்குரியதே. நூலின் சிறப்பை விளக்குவதுடன், சமிதியின் தொண்டர்களுக்கும், சங்கரபகவத்பாதருடைய இதர சிஷ்யர்களுக்கும், பக்திப் பெருக்கையும், ஸேவையில் புது ஆற்றலையும், ஆர்வத்தையும் தந்து உதவியிருக்கிறார். அவர்களுக்கு மனமார்ந்த நன்றி இந்த நூலை அச்சுக்குத்தகுந்தபடி அமைத்து உதவிய 'ஸ்ரீ சங்கர கிருபா' பத்திரிகையின் உதவி ஆசிரியர், வேதாந்த வித்வான், வியாகரண சிரோமணி ஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகளுக்கும், குறிப்பிட்ட காலத்தில் கவர்ச்சிகரமாக அச்சிட்டுத் தந்த ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ அச்சகத்தாருக்கும் நன்றி உரியது.

சென்னை,
ஜனவரி 1969

*வெளியிடுவோர்.*

## பொருளடக்கம்

ஓம்

ஸ்ரீ குருப்யோ நம:

# குருவம்சகாவ்ய ஸங்க்ரஹம்

## முதலாவது ஸர்க்கம்

ध्यायं ध्यायं गणेशं वरदमनुपमां शारदां च प्रसन्नां
वन्दे श्रीशङ्करार्यप्रमुखगुरुमहावंशवार्धौ विवृद्धम् ।
कीर्तिश्रेयस्तरङ्गं महिममणिगणे नित्यलक्ष्मीनिवासे
विद्याज्योत्स्नाप्रसारैर्विबुधहितकरं सच्चिदानन्दचन्द्रम् ॥

ஸம்ஸாரக்கடலில் மூழ்கித் தவிக்கும் மனிதன் அதிலிருந்து வெளிவரவேண்டுமானால் ஸ்ரீ ஸத்குருவின் அனுக்ரஹத்தினால் தான் முடியும். குருவைப் பணிந்து குரு சொல்படி நடந்தால் தான் அவரது அருளைப்பெற முடியும். சுத்த அத்வைத ஸித்தாந்தத்தை உபதேசிக்க வல்லவரே ஸத்குருவாக இருக்கமுடியும். அப்பேற்பட்ட அபூர்வமான அத்வைத ஸித்தாந்தத்தை உலகிற்கு எடுத்துக்காட்டிய ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதருடையவும் அவரால் ஸ்தாபிக்கப்பட்டு அவிச்சின்ன பரம்பரையாக வரும் ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடாதிபதிகளுடையவும் சரித்திரத்தை எடுத்துக்காட்டுவதே இச்சிறு நூலின் நோக்கமாகும்.

ஸ்ரீ கணபதியும், ஆதித்தாய் தந்தையர்களான உமையும் சிவனும், பிரணவத்தின் பொருளை உபதேசித்த முருகப் பெருமானும், மணிமாலை, அமிருதகலசம், ஞானமுத்திரை புத்தகம் ஏந்தி கலையைத் தந்தருளும் ஸ்ரீசாரதாதேவியும் நம்மைக் காத்தனுக்கிரகிக்க வேண்டுவோம்.

உலக க்ஷேமத்தின் பொருட்டு எங்கும் ஸஞ்சாரம் செய்யும் ஸ்ரீ நாரதர் ஒரு ஸமயம் பூலோகத்தில் உலாவி வருகையில் மக்களிடையே உள்ள குறைகளைப் பார்த்து மனம் கசிந்தார். துஷ்டர்கள் பற்பல துர்மதங்களை உண்டு பண்ணிக்கொண்டு தங்கள் மதத்துக்குத் தக்கபடி விபரீதமாக வேத வாக்கியங்களுக்கு அர்த்தம் செய்து வேதத்தைக் கெடுக்கும் கூட்டங்களைக் கண்டார். வேதம் அடியோடு

போய்விடுமோ என்று அஞ்சி ஸத்ய லோகம் சென்று தமது தந்தையான பிரம்மரிடம் முறையிட்டார். "ப்ரபோ! பூவுலகில் வேதவிருத்தமான செய்கைகளைக் கொண்ட துஷ்டர்களால் பற்பல துர்மதங்கள் ஏற்பட்டு அவை எங்கும் பரவி வருகின்றன இந்த துஷ்டர்கள் எல்லோரையும் நன்கு சிக்ஷிப்பதற்குத் தக்க உபாயம் தேடவேண்டும்" என்று பிரார்த்தித்தார். பிரஹ்மாவும் அதை ஏற்றுக்கொண்டு நன்கு ஆலோசித்து உடன் கைலாஸம் சென்று பரமசிவனைத் துதித்து, பூலோக விருத்தாந்தத்தைச் சொல்லவே "பூவுலகில் சிவகுருவுக்கு குமாரனாகப் பிறந்து துர்மதங்களைத் தொலைத்து வேத மதத்தை ஸ்தாபித்து உமது கோரிக்கையை நிறைவேற்றுகிறேன்" என்று மஹேசர் அனுக்ரஹம் செய்தார்.

[ஸ்ரீ ஆதிசங்கரர் அவதரித்த காலத்தில் 72 துர்மதங்கள் இருந்தன. அவைகளை ஒழித்தவர் சங்கரர் என்று காட்டுகிறது அஷ்டோத்தர சதநாமாவளியிலுள்ள द्विसप्ततिमतोच्छेत्रे नमः என்ற நாமா.]

நீர்வளம் நிலவளம் கூடிய தென்னாட்டிலே வாழை, தென்னை, பனை, மா, பலா, பாக்கு, கமுகு, சந்தனம் முதலிய சிறந்த விருக்ஷங்களும், ஏலக்காய் வெற்றிலைக் கொடிகளும் நிறைந்த காடுகள் அடர்ந்த மலையாள தேசமே தான் அவதரிப்பதற்கு யோக்கியமான தேசமென்று ஸ்ரீ பரமசிவன் கருதினார்.

இம்மலையாள நாட்டில் ஆசாரசீலர்கள் வாழும் காலடி என்ற கிராமத்தில் வித்யாதிராஜகுமாரரான சிவகுரு என்னும் அந்தணர் 18 வித்யைகளையும் கற்றுத் தெளிந்து தயை தாக்ஷிண்யம் முதலான நற்குணங்கள் நிறைந்து ஸ்வதர்மங்களை சரிவர அனுஷ்டித்துக்கொண்டும் ஏராளமான சிஷ்யர்களுக்கு வித்யாப்யாஸம் செய்வித்துக்கொண்டும் யாவரும் போற்றும் வண்ணம் வாழ்ந்து வந்தார். அடிக்கடி யாகங்கள் செய்து தேவர்களுக்கு ஹவிர்பாகம் கொடுத்து அமிருதத்தையே மறக்கும்படி செய்தார். எல்லாச் செல்வங்களும் நிறைந்திருந்தும் புத்ரன் இல்லாததால் இவர் மிகவும் வருந்தினார். ஒருநாள் தன் மனைவி, "உபமன்யு, மார்க்கண்டேயர், அர்ச்சுனன், குபேரன், ராவணன், பாணாசுரன் முதலிய பல பக்தர்கள் சிவனை உபாசித்துத் தம் இஷ்டபூர்த்தி பெற்றார்கள் அவர் அருள் இருந்தால் எதையும்

பெறலாம்" என்று கூறிய வார்த்தையைக்கேட்டு தானும் மனைவியுடன் விருஷாத்ரியில் பரமசிவனை வழிபடலுற்றார். புலித்தோல் ஆஸனத்திலமர்ந்து மிக்க உறுதியுடன் ஜப பூஜாத்யானங்களைச் செய்தார். ஆஹார நியமங்களை ஏற்று கந்தமூலாதிகளையும் இலைகளையுமே உணவாக உண்டார். இத்தவத்தைக்கண்டு மெச்சிய ஸ்ரீ பரமசிவன் ஸ்ரீசிவகுருவின் கனவில்தோன்றி "என்ன வேண்டும்" என்று கேட்க "எனக்கு புத்திரபாக்யத்தை அளிக்கவேண்டும்" என்று சிவகுரு வேண்டினார். உடனே பரமசிவன் "உனக்கு சிரஞ்ஜீவிகளான புத்தியில்லாத 100 புத்ரர்கள் வேண்டுமா, அல்லது அல்பாயுசு உள்ள ஸர்வஜ்ஞனை ஒரு புத்திரன் வேண்டுமா" என்று வினவ தனக்கு ஸர்வஜ்ஞனை புத்திரனே போதும் என்றார் சிவகுரு. அப்படியே ஆகட்டும் எனச்சொல்லியருளி ஈசுவரன் மறைந்தார்.

சிவகுருவும் வீடு சென்று தன் பிரிய பத்னியாகிய ஆர்யாம்பாளிடம் இச்சுப செய்தியைத் தெரிவித்தார். அவளும் சந்தோஷமடைந்தாள். பிராஹ்மணர்களுக்கு ம்ருஷ்டான்ன போஜனம் செய்வித்து தம்பதிகள் விரதத்தைப் பூர்த்தி செய்தார்கள். காலக்ரமத்தில் ஆர்யாம்பாள் கர்பவதியானாள் சாஸ்திர விதிமுறை அறிந்த சிவகுரு உரிய காலத்தில் பும்ஸவனம், ஸீமந்தம் முதலான கர்மாக்களைச் செய்தார். ஒன்பதாவது மாதம் பூர்த்தியானதும் ஆர்யாம்பாள் சுப கிரஹங்கள் சுபஸ்தானத்தில் அமையப்பெற்று, சுபயோகங்கள் கூடிய சுப லக்னத்தில் உத்தமமான புத்திரனைப் பெற்றாள். கடக லக்னத்தில் ஜனித்த புண்ய குமாரனுக்கு நான்கு கிரஹங்கள் உச்சமாக இருந்தன. கடகத்தில் குரு, துலாத்தில் சனி, மகரத்தில் செவ்வாய், மேஷத்தில் சூரியன். இதன் பலன் :— லக்னத்தில் சந்திரன் விசேஷமான இந்திரிய நிக்ரகத்தையும், லக்னத்தில் குரு விசேஷ வித்யா பலத்தையும், நான்காமிடமாகிய துலாத்தில் சனி விஷயசுகமில்லாமையையும் மகரத்தில் செவ்வாய் வாதத்தில் திறமையையும் மேஷத்தில் சூரியன் ஸந்நியாஸ யோகத்தையும் காட்டுகிறது.

புத்ரோத்ஸவம் ஏற்பட்ட சந்தோஷத்தைத் தெரிவித்த எல்லோருக்கும் வஸ்திரம், தனம், பூஷணங்களை சிவகுரு வழங்கினார். மகானின் அவதாரத்தை வெளிக்காட்டுவது போல் மெல்லிய தென்றல், சூரிய வெப்பத்தைக்குறைக்கும்

மேகங்கள், மரங்கள் பழங்களுடனும், புஷ்பங்களுடனும் தோன்றுவது ஆகிய இயற்கை வளமும் காணப்பட்டன. குழந்தையின் அழகைக்கண்டு எல்லோரும் களித்தார்கள். சாஸ்திரப்படி செய்யவேண்டிய ஜாதகர்மநாமகரணாதிகளை உரிய காலத்தில் தகப்பனார் செய்தார். குழந்தைக்கு சங்கரன் என்ற பெயரையும் இட்டார்,



# இரண்டாவது ஸர்க்கம்

குழந்தைக்கு 2 வயது ஆகும்போதே எல்லா எழுத்துக்களும் தெரியும்படியான மேதா விலாஸம் தோன்றியது. மூன்றாவது வயதில் காவ்யங்களையும் கலைகளையும் கற்று கலாநிதியாய் விளங்கினான். தந்தை சிவகுரு, தனயனுக்கு விதிப்படி சௌள கர்மாவை செய்து வைத்தார். குழந்தைக்கு மூன்றாவது வயது நடந்துகொண்டிருக்கும்போதே பூர்வ கர்ம வசத்தால் தந்தை சிவகுரு கிருதகிருத்யராக உத்தமலோகம் சென்றுவிட்டார். பந்துக்கள் பர்த்ருவியோகத்தால் துன்பப்படும் ஆர்யாம்பிகையை ஆச்வாஸனம் செய்து 5வது வயதில் குழந்தைக்கு உபநயனம் செய்துவைத்தார்கள்: "புத்தி தீக்ஷண்யமுள்ள குழந்தைக்கு மிகுந்த ப்ரஹ்மவர்சஸ் ஏற்பட ஐந்தாவது வயதிலேயே உபநயனம் செய்யலாம்" என்று தர்ம சாஸ்திரம் கூறுகிறது. ப்ரஹ்மசர்ய நியமத்துடன் குருகுலவாஸம் செய்து விரைவிலேயே பதினெண் வித்தைகளையும் கற்றுத்தெரிந்துகொண்டார்.

அச்சமயம் கேரளத்தில் ராஜ்யமாண்ட ராஜசேகர மன்னன் சங்கரனுகிய சிறுவனின் விசேஷ வித்யையைப்பற்றிக் கேள்விப்பட்டு தான் இயற்றிய நாடகங்களை சங்கரனிடம் சமர்ப்பித்து கிருதார்த்தனுனன்.

தன் சிறுவயதிலேயே ஸ்ரீ சங்கரன் யோக சக்தியைக் காண்பித்தார். வீட்டிலிருந்து வெகுதூரம் நடந்துசென்று நதியில் ஸ்நானம் செய்யத்தன் தாய்க்கு சக்தியில்லை என்று தெரிந்து, சங்கரன் நதியைத் தன் வீட்டுக்குப்பக்கத்தில் வரும்படி செய்தார். மகான்களின் சக்தியை என்னவென்று சொல்லமுடியும் அதுமுதல் இந்நதிக்கு அம்பா என்ற பெயரும் ஏற்பட்டது. கிராமத்திலுள்ள கிருஷ்ணன் கோவிலுக்கருகில் நதி பிரவஹித்து அதனுல் கோவிலுக்கு ஆபத்து ஏற்படவே அங்கு உள்ள கிருஷ்ணமூர்த்தியை பிரவாஹ ஆபத்துவராதபடி வேறொரு இடத்தில் ஸ்தாபித்தார்.

ஸ்ரீ சங்கரன் ஒருநாள் இந்த நதியில் ஸ்நானம் செய்துகொண்டிருக்கும்போது முதலை அவனுடைய காலைப்பற்றியது. தனக்கு முதலையினுல் முடிவுகாலம் சமீபித்துவிட்டது என்று கூறிய சங்கரன் இந்த ஆபத்து நீங்குவதற்கு தான்

சந்நியாஸம் பெற அனுமதிகொடுக்கவேணும் என்று தன் தாயாரைப் பிரார்த்தித்தான் அவள் அனுமதிபெற்று ஸந்யாஸ ஸ்வீகாரத்திற்காக ப்ரைஷோச்சாரணம் செய்தார். உடனே சாபம் தீர்ந்து முதலேயின் ரூபம் மாறி கந்தர்வருபத்துடன் ஆகாயத்தில் தோன்றி "தங்கள் பாதஸ்பர்சத்தால் எனக்கு முன்போல் திவ்யசரீரம் கிடைத்தது நான் செய்த குற்றங்களை மன்னிக்கவேணும்" என்று பிரார்த்தித்தான். அவனுக்கு அனுக்ரகம் செய்துவிட்டு தான் ஸந்நியாசம்பெற அனுமதி கொடுத்ததாயாரைப்பார்த்து சங்கரன் "நான் இனி வெளியூர் போய் விடுவேன் ஆனல் நீ என்னை எப்பொழுது நினைத்த போதிலும் அப்பொழுதே உன்னுடைய ஸமீபத்தில் நான் இருப்பேன்" என்முன்.

இவ்விதம் தாயின் அனுமதியால் சந்நியாஸ நிலை அடைந்த சங்கரர் சந்நியாஸிகளுக்கு ஏற்பட்ட குருவம்சத்தை தியானிக்கலானார் தாரகமந்திரத்தை உபதேசித்து மோக்ஷத்தை அளிக்கும் தக்ஷிணமூர்த்தியான பரமசிவனே ஆதிகுரு. அவருக்குப்பின் விஷ்ணு அவருக்கு அடுத்தால் ஏற்பட்டவர் பத்மத்தில் தோன்றிய பிரும்மா. பிரும்மாவின் சிஷ்யர் வசிஷ்டர். அவருடைய சிஷ்யர் சக்திமுனிவர் பராசரமகரிஷி சக்தி முனிவரின் சிஷ்யர் பராசரரிடம் உபதேசம் பெற்ற சிஷ்யர் வ்யாஸ மகரிஷி இவர் வேதங்களைப்பிரித்துக் காட்டியதால் இவரை வேதவ்யாஸர் என்பார்கள் பதினெட்டு புராணங்களையும் மஹாபாரதத்தையும் உலகுக்கு அளித்த உத்தமர். இவர் எப்போதும் உலககுருவாக விளங்குகிருர்.

இவர் இயற்றிய கிரந்தங்களில் பிரும்மத்தை எடுத்து விளக்கிக்காட்டிய நூல்கள் பல உள. பிரும்மசூத்ரம் பதஞ்சலி யோகசூத்ரபாஷ்யம் முதலிய க்ரந்தங்கள் இவரால் இயற்றப் பட்டவை. கல்பகவிருக்ஷம் போன்ற இவருடைய க்ரந்தங்களி லிருந்து விளைந்த ஞானப்பழங்களைச் சாப்பிடுவதற்காக உண்டான சுகர் (கிளி) என்ற மகரிஷி ஸ்ரீவியாஸரின் சிஷ்யர் களில் பிரதானமானவர். அப்ஸரஸ்திரீகளையும் மதிக்காத ஜிதேந்திரியர் ஸ்ரீ சுகர். இதனல் இவரை சுகபிரும்மம் என்று சொல்வதுண்டு.

ஸ்ரீ சுகபிரும்மத்தின் சிஷ்யர் ஸ்ரீ கௌடபாத முனிவர் இவர் கௌடதேசத்தவர். தத்துவவிளக்கம் செய்யும் பல நூல்களை இவர் இயற்றினர். இவர் பல பிரபல பண்டிதர்களை

வாதத்தில் வென்றவர், ஸ்ரீசுகமகரிஷி வரையில் புத்திர பரம்பரையாக வந்த குருவம்சத்தில் அது மாறி கௌடபாதர் முதல் சிஷ்யபரம்பரை ஆரம்பித்தது. இதில் முதலாவது ஆசார்யர் இவர். இவருக்கு கோவிந்தபாதர் என்ற சிஷ்யர் ஏற்பட்டார். இவருக்கு கம்பீரமான வாக்கும் எல்லையற்ற மேதையும் உண்டு. இவருடைய மேன்மையான ஞானம் புத்தி, வைராக்யம் கீர்த்தி இவைகளைப்பார்த்து இவரை [1] பகவத்பாதர் என்று அழைத்தார்கள். இவருக்கு கோவிந்த பகவத்பாதர் எனப்பெயர்.

இதை திவ்யத்ருஷ்டியால் தெரிந்து கொண்ட நமது பால யோகியான ஸ்ரீ சங்கரர் அந்த கோவிந்த பகவத்பாதரையே தான் குருவாக அடையவேண்டும் என்று தீர்மானித்து அவர் இருக்குமிடம் தேடிச்சென்று அவரை வணங்கி அவரிட மிருந்து உபதேசம் பெற்றார். உயர்ந்த வைராக்கியமும், கூர்மையான புத்தியும் கொண்ட சங்கரர் வ்யாஸபகவானால் இயற்றப்பட்ட ஸூத்ரங்களின் அர்த்தங்களையும் உபநிஷத் ரஹஸ்யங்களையும் தன் குருவினிடம் தெரிந்துகொண்டார். தன் உத்தம குருவான ஸ்ரீ கோவிந்தபகவத்பாதர் முன்னிலையிலேயே நமது சங்கரர், ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாம பாஷ்யம் பிரும்மசூத்ரபாஷ்யம், உபநிஷத்பாஷ்யம், பகவத்கீதா பாஷ்யம் ஸனத்ஸுஜாதீய பாஷ்யம் உபதேசஸாஹஸ்ரீ முதலான வேதாந்தக்ரந்தங்களையும், ப்ரபஞ்சஸாரம், ஸுபகோதயபத்ததி முதலிய மந்த்ரசாஸ்திரக்ரந்தங்களையும் எல்லா தெய்வங்களின் குணங்களை வர்ணிக்கும் ஸௌந்தர்ய லஹரீ முதலான ஸ்தோத்திரக்ரந்தங்களையும் இயற்றினார்.

தன் குருவின் அனுமதி பெற்று அவ்விடமிருந்து புறப்பட்டு ஸ்ரீ சங்கரர் தீர்த்த யாத்திரையாக பதரிகாசிரமம் சென்றார். அங்கு வெடவெடக்கும் குளிரிலும் மிகக் குளிர்ந்த ஜலத்தில் தினமும் இந்த பாலன் ஸ்னானம் செய்வதைக்கண்டு கருணையால் ஈசுவரன் உஷ்ண நீர்ப்பெருக்கை உண்டுபண்ணினார். அதை இப்பொழுதும் காணலாம்.

அங்குள்ள மகரிஷிகளுக்கு வேதாந்த சாஸ்திரத்தை வெகு தெளிவாக ஸ்ரீ சங்கரர் சொல்லுகிறார் என்று ஸ்ரீவ்யாஸபகவான்

---

1. भग: என்ற பதத்துக்கு ஐசுவரியம், வீர்யம், கீர்த்தி, லக்ஷ்மீ விலாஸம், ஞானம் வைராக்யம் ஆகிய லக்ஷணங்கள் எனப்பொருள்

கேள்விப்பட்டு இவர் இருக்குமிடம் வந்து சேர்ந்தார். ஸ்ரீ வ்யாஸரின் வரவைக்கேட்ட ஸ்ரீசங்கரர் தன் சிஷ்யர் கூட்டத்துடன் சென்று ஸ்ரீ வ்யாஸபகவானை எதிர்கொண்டு அழைத்து அவருக்குத்தகுந்த மரியாதைகளுடன் வந்தனங்களைச் செய்து அவரை உயர்ந்த ஆசனத்தில் வீற்றிருக்கச் செய்து வினயத்துடன் தானும் கீழே பக்கத்தில் உட்கார்ந்து விஷயங்களைக் கேட்கலானார். "ஸ்வாமின்! தங்களின் தரிசனத்தால் க்ருதார்த்தனானேன். உலகத்தைக் கை தூக்கிவிடக் கருணையுடன் அவதரித்த தங்களைக்கண்டதும் சூரியனைக்கண்ட தாமரைபோல் என்மனம் மலர்ந்திருக்கிறது. தங்கள் வரவால் ஜனங்களின் மனதிலுள்ள த்வைத பாவனை எல்லாம் விலகிவிட்டது. தாங்கள் வந்த காரணத்தை அறிய மனம் விரும்புகிறது. அருள் புரியவேணும்" என வினவினார் ஸ்ரீசங்கரர்.

இதைக்கேட்ட ஸ்ரீவியாஸபகவான் "நீ சந்திரனைப்போல் உலகத்தாரால் சந்தோஷமாய் தரிசிக்கத்தக்கவன். என் மனதில் இருக்கும் ரகசியங்களையும் வெளிப்படுத்திக்காட்டும் சக்தி உனக்கு உண்டு என்னுடைய பிரும்ம சூத்திரங்களுக்கு நீ இயற்றிய பாஷ்யத்தைப்பார்க்க வந்தேன்" என்றார் ஸ்ரீ சங்கரரும் மிகவும் விநயத்துடன் தான் செய்த பாஷ்யத்தை ஸ்ரீவ்யாஸபகவானிடம் காட்டினார். அதைப்பார்த்த ஸ்ரீவ்யாஸர் அந்தந்த சூத்ரங்களுக்குத்தான் என்ன என்ன தத்துவங்களை மனதில் கொண்டாரோ அதையே பாஷ்யத்தில் விளக்கிக்காட்டி இருப்பதைக்கண்டு மிகவும் மகிழ்ந்து "என் அபிப்ராயத்தை நீ நன்கு வெளிப்படுத்தி இருக்கிறாய். வேறொருவராலும் இது செய்யமுடியாத காரியம் நீ ஸாக்ஷாத் சங்கரனே அத்வைத சாஸ்திரத்தை உலகில் பரப்ப வேண்டி உனக்கு ஆயுள் இன்னும் அதிகரிக்கட்டும்" என்று ஆசிகூறி உடனே மறைந்தார். ஸ்ரீசங்கரர் தன் சிஷ்யர்களுக்கு மிகுந்த உத்ஸாகத்துடன் பாஷ்யபாடங்கள் சொல்லி வந்தார்.

இப்படியிருக்கையில் ஒருநாள் ஒரு சிறுவன் ஸ்ரீசங்கரரை வணங்கி "ப்ரபோ, நான், சோளதேசத்தில் பிறந்தவன் என்னைக்கடைத்தேற்ற உங்களை சரணமடைந்திருக்கிறேன்" என்றான் அவனுடைய விசேஷகுணங்களைக்கண்டு ஸ்ரீசங்கரர் அவனுக்கு ஸந்யாசாச்ரமத்தையும் ஸநந்தனன் என்ற யோக

பட்டத்தையும் கொடுத்து அவனுடைய வைராக்யத்தைமெச்சி அவனுக்கு ப்ரம்ம சூத்ரபாஷ்யம், உபநிஷத் பாஷ்யம் இவைகளை மும்முறை சொல்லிக்கொடுத்தார் ஸநந்தனனுக்குக் காட்டும் விசேஷ அனுக்கிரகத்தைப்பார்த்து இதர சிஷ்யர்கள் அசூயை கொண்டார்கள் இது கண்ட ஸ்ரீசங்கரர் ஒருநாள் கங்கையின் மறுகரையில் இருந்த ஸநந்தனனைக் கூப்பிட்டார்; குருவே சரணம் என்று கொண்ட ஸநந்தனர் எவ்விதயோசனையும் செய்யாமல் கங்கையின் மேல் காலை வைத்து நடக்க ஆரம்பித்தார். இதுகண்ட கங்காதேவி சிஷ்யனின் பெருமையைக்காட்ட அவன் கால் வைத்த ஒவ்வொரு இடத்திலும் ஒரு தாமரை மலரை உண்டு பண்ணினாள். இதுகண்ட மற்ற சிஷ்யர்கள் வெட்கித் தலைகுனிந்தனர். சிஷ்யனின் குருபக்தியை எடுத்துக்காட்டவேண்டி ஸநந்தனனுக்கு பத்மபாதர் என்ற பெயரை ஸ்ரீசங்கரர் இட்டார்.

தன் சிஷ்யர்களுடன் பலதேசங்களில் ஸ்ரீசங்கரர் சஞ்சாரம் செய்துகொண்டு த்ரிவேணி க்ஷேத்திரத்துக்கு (இலாகாபாத்) வந்துசேர்ந்தார். அங்கு கங்கைக்கரையில் துஷாக்னியில் (உமியைத் தணலாக்கி எரிக்கசெய்து) தன் தேகத்தை தியாகம் செய்துகொண்டிருக்கும் பட்டபாதரை சந்தித்தார். உடனே ஸ்ரீபட்டபாதரிடம் ஸ்ரீசங்கரர் தான் இயற்றிய பிரும்ம சூத்ரபாஷ்யத்தைக் காட்டினார். மிகவும் சந்தோஷமடைந்த ஸ்ரீபட்டபாதர் "இது ரொம்பவும் நன்றாக இருக்கிறது. என் ஆயுளை முடித்துக்கொள்ள எண்ணிவிட்டேன். ஆகையால் இதற்கு வ்யாக்யானம் எழுதும் பாக்கியமற்றவனானேன். மகத தேசத்தில் என் சிஷ்யன் விஸ்வரூபன் இருக்கிறான். அவன் நல்ல உத்தம குணமுடையவன். எல்லா சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தவன். அவனுக்கு உபயபாரதி என்ற பார்யை உண்டு அவளும் எல்லாக் கலைகளையும் கற்றவள் அவள் ஸ்ரீ ஸரஸ்வதியின் அவதாரம். முன்னொரு காலத்தில் ப்ரஹ்ம லோகத்தில் ப்ரஹ்மஸபையில் வேதத்தை உச்சரிக்கும்போது ஸ்ரீதுர்வாஸமகரிஷி ஸ்வரம் பிசகிச் சொன்னதைக்கேட்டு பிரும்மாவின் பத்னியான ஸரஸ்வதி சிரித்தாள். இது கண்ட துர்வாஸமுனிவர் ஸரஸ்வதியைப்பார்த்து " நீ கர்வமடைந்து என்னைப்பார்த்து சிரித்ததனால் மனுஷ்ய லோகத்தில் நீ பிறந்து ஸ்ரீ சங்கரரை தரிசிக்கும் வரையில் பூலோகத்தில் வசிப்பாயாக " என்று சபித்தார். அதனால் ஸ்ரீ ஸரஸ்வதி விசுவரூபனுடைய பத்னியாகத்தோன்றி அவன் வீட்டில்

வசித்து வருகிருள். நீ அங்கு போய் எப்படியாவது விசுவ ரூபனை ஜெயித்து விட்டால் அவன் உ ன் வ ச ம ா கி உன் பாஷ்யத்துக்கு உரை (வார்த்திகம்) எழுதுவான் என்றுகூறினுர்

இதைக்கேட்டு ஸ்ரீசங்கரர் அந்த இடத்தைவிட்டுப் புறப்பட்டு போய் கொண்டிருக்கையில் மண்டனமிச்ரர் என்ற ஒரு யோகி சிரேஷ்டரை வழியில் சந்தித்தார். ஸ்ரீபட்ட பாதரிடம் 21 தடவை ஜைமினிசூத்ர பாஷ்யத்தைப்படித்துக் கற்ற வித்வானுன மண்டனமிச்ரரும் ஸ்ரீசங்கரரை பணிவுடன் வணங்கி " தங்களை தரிசித்ததினுல் நான் தன்யனுகி விட்டேன் என்னைத்தங்களுடன் அழைத்துச்சென்று என்னை சம்சார ஸாகரத்தினின்றும மீட்டு உத்தாரணம் செய்ய வேண்டும் " என்று பிரார்த்தித்தார். அவரைப்பார்த்து ஸ்ரீ சங்கரர் " நல்ல கர்மாக்களைச்செய்ததால் சித்த சுத்தி பெற்ற நீ விரைவில் ஆத்ம ஞானம் பெற்று மோக்ஷரூபமான ஸெளக்கியத்தை அவசியம் அடைவாய் " என்று ஆசி கூறி பண்டிதர்களாலும் போற்றப்படும் விசுவரூபனுடைய வீட்டை நோக்கிசென்ருர்.

ஸ்ரீ விசுவரூபர் ஸ்ரீசங்கரரை தகுந்த மரியாதைகளுடன் வரவேற்று அவருக்கு பிக்ஷை அளித்தார். உபயபாரதி ஸ்ரீசங்கரரின் கையில் தீர்த்தத்தை வார்த்தாள். ஆனுல் ஸ்ரீசங்கரர் தீர்த்தத்தை உட்கொள்ளவுமில்லை. கீழே விடவு மில்லை. என்ன காரணம் என்று விசுவரூபர் கேட்க "நம்முள் யாராவது ஒருவருக்கு நன்ருக ஜயம் ஏற்படும் வரை என்னுடன் வாதம் செய்வதாக நீ ஒப்புக்கொண்டால்தான் ஹஸ்தோதகத்தை உட்கொள்வேன் " என்று கூறினுர். விசுவரூபரும் இதற்கு ஒப்புக்கொண்டார். பிறகு "நான் தோல்வி அ டை ந் த ா ல் சந்நியாசியாவேன் " என்று விசுவரூபரும் " நான் தோற்ருல் கிருஹஸ்தனுவேன் " என்று ஸ்ரீசங்கரரும் பந்தயம் பேசி ஒப்புக்கொண்டு விவாதத்தை ஆரம்பித்தனர். இப்படி ஏழு நாட்கள் இருவருக்கும் வாதங்கள் நடந்தன. உபயபாரதீ இவர்களுக்குள் நடக்கும் வாதத்துக்கு சாக்ஷியாக அமைக்கப்பட்டாள். ஏழாம் நாள் முடிவில் "இருவரும் பிக்ஷைக்கு வரவேண்டும் " என்று உபய பாரதீ பிரார்த்தித்தாள். ஸ்ரீசங்கர தர்சனத்தால் தன் சாபம் நீங்கியவளாகி உபயபாரதி அங்கேயே மறைந்தாள்.

விசுவரூபரும் ஸ்ரீசங்கரரிடம் சந்நியாஸாசிரமம் மஹா வாக்ய உபதேசம்பெற்று குருவிடம் சரணமடைந்தார், இந்த

சிஷ்யனுக்கு ஸ்ரீசங்கரர் எல்லா பாஷ்யங்களையும் பாடம் சொல்லிக்கொடுத்து இவரை வேதாந்த சாஸ்திர தத்துவத்தில் கரைகண்டவராக்கினர். பின் அவரைப்பார்த்து " நான் செய்திருக்கும் பிரும்ம சூத்ரபாஷ்யத்துக்கும், தைத்திரீய உபநிஷத்பாஷ்யத்துக்கும் வார்த்திகம் எழுதுவாயாக" என்று கட்டளை இட்டார் இதைக்கேட்ட இதர சிஷ்யர்கள் " இவர் பூர்வாசிரமத்தில் கர்மமார்க்கமே சிரேஷ்டம் என்று சொல்லும் ஜைமினியின் மதகிரந்தங்களைப்படித்து அனுஷ்டித்தவர். சந்நியாசிகளின் மதத்துக்கு அது எதிரிடையானமதம். வ்யாஸபகவான் ஞானத்தை போதித்தார். ஜைமினிகர்மாவை போதித்தார். இவ்விருவருக்குள் மிகுந்த வித்யாஸம் உண்டே! இவரைக்கொண்டு வேதாந்த சாஸ்திரத்துக்கு விளக்கம் எழுதச்சொல்கிருரே இவர் உள்ளபடி சரியாக எழுதுவாரா" என்று சந்தேகித்துத்தடுத்தார்கள். இவர்களின் சந்தேகத்தை தீர்க்கவேண்டி வேறு ஒரு அத்வைத கிரந்தத்தை இயற்றும்படி விச்வருபருக்கு ஆக்ஞை செய்துவிட்டு ஸநந்தனரைக்கொண்டு பிரஹ்மஸூத்ர பாஷ்யத்திற்கு டீகை எழுதச்செய்தார். அவரைக்கொண்டே அது முழுவதையும் படிக்கச்சொல்லி சிஷ்யர்களுடன் அதைக்கேட்டார்,

விசுவருபாசாரியரும் உடனே ஜீவபிரும்மைக்கியத்தை நன்கு விளக்கிக்காட்டுகின்ற நைஷ்கர்ம்யசித்தி என்ற கிரந்தத்தை எழுதி தன் குருவிடம் சமர்ப்பித்தார் இதை முழுவதும் பார்த்து மிகவும் ப்ரீதியடைந்த குருவின் அனுமதியின்பேரில் வார்த்திகங்களையும் எழுதி அவைகளையும் தன் குருவிடம் அர்பணம் செய்தார். இந்த கிரந்தங்களைப் பார்த்து ஸ்ரீ சங்கரர் பரமானந்தமடைந்து விசுவருபாசாரியருக்கு ஸுரேசுவரர் என்ற யோகபட்டம் அளித்தார்.

ஸ்ரீ ஸுரேசுவரரைப்பார்த்து ஸ்ரீ சங்கரர் "உன் வார்த்திகம் உலகில் ப்ரக்யாதியை அடையும் பத்மபாதரின் பாஷ்யஉரை மங்கிவிடும் ஆனுலும் 'பஞ்ச பாதீ' மட்டும் மிஞ்சி நிற்கும்" என்று சொன்னர்.

நக்ஷத்திரங்களுடன் கூடிய சந்திரனைப்போல் ஸ்ரீ சங்கரர் அழகிய ரேவா (நர்மதா) நதிக்கரையில் சிலகாலம்

1. ஸுரேசுவரர் என்ற பதத்துக்கு தேவர்களின் ஆசாரியரான ப்ருஹஸ்பதி எனப்பொருள்.. ப்ருஹஸ்பதியைப்போன்ற புத்தியை உடையவர் என்று குறிப்பிட இப்பெயர் இவருக்கு கொடுக்கப்பட்டது என்று தெரிகிறது.

வசித்தார். அப்போது விருத்தையான மாதா ஆர்யாம்பாள் தன் புத்திரரான சங்கரரை ஸ்மரித்தாள் "நீ நினைக்கும்போது நான் உன்னிடம் வந்து சேருவேன்" என்று தன் தாயாருக்கு கொடுத்த வாக்கு ஸ்ரீ சங்கரருக்கு ஞாபகத்துக்கு வந்தது உடனே தன் சிஷ்யர்களை அங்கேயே விட்டு விட்டு யோக சக்தியால் வேகமாய் தன் ஜன்ம தேசமான காலடிக்கு வந்து சேர்ந்தார். வெகு வருஷங்களுக்குப் பின் தன் மைந்தனைக் கண்ட தாயின் சந்தோஷம் எல்லையற்றதாயிற்று ஸ்ரீ சங்கரர் தன் தாயை வணங்கினார்.

தன் தாயின் மரணகாலம் சமீபித்து விட்டது என்பதை அறிந்து ஸ்ரீசங்கரர் தனக்கு பிரியமான நிர்குண பிரும்மதத்வத்தை தன் தாய்க்கு உபதேசித்தார். ஆனால் நிர்குண பிரும்ம உபாஸனையை செய்ய சக்தியில்லாதவளான தாயார் "அப்பா நிர்குணத்தை என்னால் உபாஸிக்க முடியவில்லை ஸகுண மூர்த்தியை ஸ்தோத்திரம் செய்" என்றாள் (நிர்குணபிரும்ம ஞானம் எலலோருக்கும் எளிதில் ஏற்படக்கூடியதல்ல ஸகுண பிரும்மமே சாமானியர்களால் உபாசிக்க முடியும்) இது கேட்ட ஸ்ரீ சங்கரர் அங்கேயே சிவ புஜங்கம், விஷ்ணு புஜங்கம் இரண்டு ஸ்தோத்திரங்களையும் அப்பொழுதே இயற்றி தன் தாய்க்குச்சொன்னார். ஸ்தோத்திரங்களில் வர்ணிக்கப்பட்ட மூர்த்திகளையே மனதில் தியானித்துக் கொண்டு ஸ்ரீ ஆர்யாம்பாள் உத்தமயோகிகள் செல்லும் அர்ச்சிராதிமார்க்கம் வழியாக உத்தம ஸ்தானம்அடைந்தாள்.

ஸ்ரீ சங்கரர் தன் தாயின் அந்திமகிரியைகளை செய்ய ஆரம்பித்தார். ஆனால் இவருடைய பந்துக்கள் ஒருவரும் உதவிக்கு வர மறுத்து விட்டார்கள் ஸ்ரீ சங்கரரை மூடன் என்று சொன்னார்கள் தாயின் சடலத்தைச்சுடுவதற்கு அக்னியும் கொடுக்க மறுத்தார்கள். ஸ்ரீ சங்கரர் தன் கமண்டலு தீர்த்தத்தால் தாயின் சடலத்தைப்ரோக்ஷித்து வலது கையிலிருந்து அக்னியை உண்டுபண்ணி தாயின் சரீரத்தை தீயிலிட்டார். தன் தாயின் ஈமக்கடமைகளை முடித்துவிட்டு யதீசுவரர் அந்ததேசத்தவர்கள் பேரில் கோபம் கொண்டு நீங்கள் சிஷ்டர்களில்லை உங்கள் வீட்டில் சந்நியாசிகள் பிக்ஷை வாங்கிக்கொள்ள மாட்டார்கள் உங்கள் வீட்டிலேயே இறந்தவர்களின் சரீரங்களை தஹனம் செய்யுங்கள் என்று சபித்தார்.

தன்தேசத்துக்கு ஸ்ரீ சங்கரர் வந்திருப்பதைக் கேள்விப் பட்ட ராஜசேகரமன்னன் வேகமாக வந்து அவரை தர்சித்து வணங்கினான். அரசனைப்பார்த்து "உன் மூன்று நாடகங் களும் உலகில் பிரசித்தி அடைந்து விட்டனவா" என்று ஸ்ரீ சங்கரர் கேட்டார். அதற்கு அரசன் 'பிரபோ என் கவனமற்ற தன்மையால் அவைகள் தீயினால் எரிந்து போய்விட்டன" என்று சொல்ல, கருணைவள்ளலான ஸ்ரீ குருநாதர் தான் பால்யத்தில் ஒரேதடவை படிக்கக்கேட்டு ஞாபகத்திலுள்ள அந்த மூன்று நாடகங்களையும் தானே சொல்லி அரசனை எழுதி கொள்ளச்செய்தார். இதைக்கண்டு வியப்புக்கொண்ட அரசன் "நான் செய்யவேண்டியதை கட்டளை இடவேண்டும்" என்று பிரார்த்திக்க ஸ்ரீ சங்கரரும் ' இந்த கிராமவாசிகளை நான் சபித்திருக்கிறேன். அந்த சாபத்தின்படி நடப்பதை நீ கவனிப்பாயாக " என்றார். இப்போதும் அந்த சாபம் அந்த தேசத்தில் அமுலில் இருக்கிறது மஹான்களின் வாக்கு எப்போதும் உலகில் பொய்யாகாதே!

காலடியை விட்டு ஸ்ரீ சங்கரர் கிளம்பி ஸுப்ரஹ்மண்யர் முதலான பலதேவதைகளின் ஆலயங்களுக்குச் சென்று தரிசித்து தௌலவம் (துளுநாடு) முதலிய தேசங்களில் ஸஞ்சரித்துக்கொண்டு அங்கு எல்லோருக்கும் அனுக்ரஹம் செய்து இவர்தான் லோககுரு என்று எல்லோராலும் ஸ்தோத்தரிக்கப்பட்டார்.

---

## 2-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

பக்கம் 6. :—கௌடபாதர் குருக்ஷேத்ரத்திற்கு அருகிலுள்ள ஹிராவதி நதி தீரத்தில் வஸித்து வந்த கௌட பிராஹ்மண வம்சத்தில் பிறந்தவர். இவர் நூறு வருஷங்களுக்கு மேலாக பதரீ க்ஷேத்திரத்தில் தவம் செய்தார். இவர் முதன் முதலில் ஈசுவரகிருஷ்ணருடைய ஸாங்க்ய காரிகைகளுக்கு பாஷ்ய மியற்றினார். சைன தேசத்தில் "டங்" (T'ang) வம்சத்தைச் சேர்ந்த அரசர்களின் ஆட்சிகாலத்தில் இந்நூல் சீன பாஷையில் மொழி பெயர்க்கப்பட்டது. A. D. 780வது வருஷத்தில் கௌடபாதர் "மாண்டூக்யகாரிகை" என்னும் நூலை இயற்றினார் என்று டாக்டர் S. ராதாகிருஷ்ணன் கூறியுள்ளார்கள்.

பக்கம் 9. :—மகத தேசத்தில் விச்வரூபரை சந்தித்து ஸ்ரீசங்கரர் அவருடன் விவாதம் செய்தார் என்று இந்நூலில் கூறப்பட்டுள்ளது. இந்த விச்வரூபர் மைதில வம்சத்தில் பிறந்தவர். இவருடைய தந்தை ஹிமமித்ரர் காஷ்மீரதேசத்தில் ராஜஸபையில் ஆஸ்தான வித்வானாக விளங்கினார். 'விஹார' (Bihar) ராஜ்யத்திலுள்ள தர்பங்கா நகரின் அருகிலிருக்கும் 'ஸஹர்ஸா' என்ற கிராமத்தில் விச்வரூபர் உபயபாரதியுடன் வஸித்து வந்தார். நர்மதாநதீதீரத்தில் "மாஹேச்வரீ" என்றும் 'மஹேச்வர்' என்றும் இப்பொழுது கூறப்படும் மாஹிஷ்மதீ நகரில் விவாதம் நடந்ததாக சிலர் அபிப்ராயப்படுகிறார்கள்.

பக்கம் 10. :—ஸ்ரீ சங்கரபகவத்பாதர் குமாரிலபட்டரை சந்தித்துவிட்டு அவர் சொல்லியபடி விச்வரூபருடன் விவாதம் நடத்துவதற்காக அவரைச் சந்திக்கச் செல்லும்பொழுது நடுவழியில் மண்டனமிச்ரர் என்ற ஒரு பண்டிதர் பகவத்பாதரை வணங்கி தனக்கு அனுக்ரஹம் செய்யவேணுமென்று பிரார்த்தித்ததாகவும் அவருக்கு அநுக்ரஹம் செய்துவிட்டு பின்னால் விச்வரூபரை சந்திக்க மகத தேசம் சென்றதாகவும் இந்நூலில் தெளிவாகக்கூறப்பட்டுள்ளது. இதிலிருந்து ப்ரஹ்ம ஸித்தியை இயற்றிய மண்டனமிச்ரரைக்காட்டிலும் நைஷ்கர்ம்ய ஸித்தியை இயற்றிய மண்டனமிச்ரர் வேறு என்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. முதலில் விசுவரூபராக விளங்கி பிறகு பகவத்பாதரிடம் ஸுரேசுவரர் என்ற யோகபட்டத்

துடன் ஸந்யாஸ தீக்ஷை பெற்றவர் தான் நைஷ்கர்ம்யஸித்தி இயற்றியவர். மேலும் இருநூல்களிலும் கூறப்பட்ட விஷயங்கள் ஒன்றுக்கொன்று விருத்தமாக இருப்பதாலும் ஒருவரே இருநூல்களையும் இயற்றியிருக்கமுடியாது. அக்கால வழக்கப்படி மஹாராஜ ஸபையில் " மண்டன " என்ற விருது இருவருக்கும் கிடைத்திருக்கலாம்.

பக்கம் 13:—இப்புத்தகம் சுமார் 1735ல் எழுதியது 1910ம் வருஷத்தில் ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சச்சிதானந்த சிவாபிநவ நரசிம்மபாரதீ ஸ்வாமிகள் காலடி க்ஷேத்திரத்தில் ஸ்ரீ ஆர்யாம்பாளின் ஸமாதியைக் கண்டு பிடித்து அதிஷ்டானத்தை ஏற்படுத்தி பக்கத்தில் ஸ்ரீ சாரதாதேவியையும் ஸ்ரீ சங்கரரின் மூர்த்தியையும் பிரதிஷ்டை செய்தபோது அத்தேசத்தவர்களின் பிரார்த்தனைக்கு இணங்கி ஆதி ஆச்சாரியாளின் சாபம் அன்றுடன் நீங்கட்டும் என்று ஆசாரியாளை பிரார்த்தித்து எல்லாமக்களையும் ஆசீர்வதித்தார்கள்.

---

## மூன்றாவது ஸர்க்கம்

தங்கள் குருவைக்காணுமல் தேடிவந்த சிஷ்யர்கள் ஸ்ரீ சங்கரரை மறுபடி தரிசித்தவுடன் சந்தோஷமடைந்தவர்களானுர்கள். அவர்களில் பத்மபாதர் வருத்தத்துடன் "தாங்கள் சென்றதும் நான் தீர்த்த யாத்திரை சென்று திரும்பி வரும்போது என் பூர்வாசிரம தாய்மாமன் வீட்டில் தங்கினேன் நான் செய்த பிரும்மசூத்ர பாஷ்யடீகாவை அவரிடம் காண்பித்தேன். சந்தோஷப்பட்டவர் போல் காட்டிவிட்டு மாத்ஸர்யத்தால் நான் இல்லாதபோது அதை கொளுத்தி விட்டார். கிரந்தம் நஷ்டமாகிவிட்டது என் பிக்ஷையில் புத்திமாந்த்யத்தைக் கொடுக்கும் விஷத்தைக்கலந்து கொடுத்தார் என்ன செய்வேன்" என்று சொல்லி கதறினுர். இதைக்கேட்ட ஸ்ரீ சங்கரர் தான் முன்னமே ஒரு தடவை பத்மபாதரால் முதல் 5 பாதங்கள் மட்டும் படிக்கக்கேட்டிருந்ததால் அதை தன் ஞாபகத்திலிருந்தே திரும்பவும் சொல்ல பத்மபாதர் அதை எழுதிக்கொண்டார். இதுவே உலகில் பஞ்சபாதிகா என்று இப்போதும் விளங்குகிறது.

தன் சிஷ்யர்களுடன் ஸ்ரீ சங்கரர் திக்விஜயம் செய்ய புறப்பட்டு அத்வைத ஸித்தாந்தத்தை ஸ்தாபித்துக்கொண்டு யாத்திராமார்க்கமாய் மத்யார்ஜுன க்ஷேத்திரம் (திருவிடைமருதூர்) வந்து சேர்ந்தார். அங்கு ஈசுவரனைப் பூஜித்து ஸ்ரீ சங்கரர் சபைநடுவில் "தத்துவம் எது" எனக் கேட்டார். ஸ்ரீ சிவன் பிரத்யக்ஷமாகி "அத்வைதமே ஸத்யம்" என்று மூன்று தடவை அருள் புரிந்தார். உடனே அங்கு பலர் ஸ்ரீ சங்கரரிடம் சிஷ்யர்களானுர்கள், இப்படி சிஷ்யர் கூட்டத்துடன் ஸ்ரீ சங்கரர் அனந்தசயனம் முதலான பல நகரங்களுக்குச்சென்று அங்கு பலரை வாதத்தில் ஜயித்தார். அங்கிருந்து ராமஸேதுவுக்குச்சென்று தனுஷ்கோடியில் ஸ்நானம் செய்து தீர்த்தராஜரைப்பூஜித்து ராமேசுவரத்தில் ஸ்ரீ ராமனுதரைப்பூஜித்தார்.

பிறகு கன்னடதேசத்தில் தௌலவர்களுடைய 32 கிராமங்களில் முக்யமான ரௌப்யபீடம் என்ற ஊரை அடைந்து அங்கு அனந்தேசுவரரை பூஜித்தார். பரமசிவனுல் சாபம் பெற்ற சந்திரன் இங்கு அனந்தேசுவரரை பூஜித்ததால் சாப

விமோசனம் பெற்றுன் என்ற [1] பிரஸித்தி இந்த க்ஷேத்திரத்திற்கு உண்டு அங்கு கோவிலில் ஸ்ரீ சங்கரர் விச்ராந்தி செய்து கொண்டிருப்பதைக்கண்டு ஒரு பிராமணன் பிறவிமுதல் ஊமையாக இருக்கும் தன் குமாரனை அழைத்து வந்து அவன் விருத்தாந்தத்தைத் தெரிவித்தார். கருணமூர்த்தியான ஸ்ரீ சங்கரர் அந்த பாலகனைப்பார்த்து "நீ யார்? எங்கிருந்து வந்தாய்?" என்று கேட்டார். அந்தப்பாலன் உயர்ந்த வேதாந்தக்கருத்துக்கள் அடங்கிய வாக்குகளால் பதில் சொன்னுன் அபூர்வமான புத்தியை உடைய அச்சிறுவனை தன் சிஷ்யனுக ஏற்றுக்கொண்டு அவனுக்கு ஸந்யாஸம் கொடுத்து ஹஸ்தாமலகர் என்ற யோகபட்டத்தையும் அவனுக்கு அருளினுர்.

அங்கிருந்து ஸமுத்ரக்கரையோரமாக ஸஞ்சாரம் செய்து வருகையில் வெயிலின் தாபத்தினுல் ஸ்ரீசங்கரருக்கு பகந்தரம் என்ற வியாதி ஏற்பட்டது. அப்போது ஒரு சிஷ்யன் குருவுக்கு மிகப்பணிவுடன் கைங்கர்யம் செய்தான். வியாதியுடன்கூடிய சரீரத்தைக்கண்டு சிறிதும் வெறுப்புக்கொள்ளாமல் எப்பொழுதும் அருகிலேயே இருந்து பிரீதியுடன் குருவிற்கு சுச்ருஷை செய்து வந்தான். குருஸேவா ப்ரபாவத்தால் மஹா மூடனுன இவனுடைய வாக்கிலிருந்து ஒரு தடவை அவனையும் அறியாமல் தோடக வ்ருத்தத்தில் அமைந்த சுலோகங்கள் வெளிவந்தன. இதைக்கேட்ட குரு அவனுக்கு ஸந்நியாஸம் கொடுத்து அவனுக்கு தோடகாசார்யர் என்ற யோகபட்டத்தையும் கொடுத்தார். பகந்தர வியாதிக்கு வைத்தியம் செய்ய மனுஷ்யர்கள் யாரும் பூவுலகில் இல்லை. ஆதலால் தாங்களே தபோ பலத்தால் நிவர்த்தி செய்துகொள்ளவேண்டும் என்ற சிஷ்யர்களின் பிரார்த்தனைக்கு இணங்கி ஸ்ரீ சங்கரர் மந்திர பலத்தால் அச்வினீ குமாரர்களை வரவழைக்க அவர்களால் வியாதியும் குணமடைந்தது.

அங்கிருந்து புறப்பட்டு கோகர்ண க்ஷேத்திரம் சென்று தர்சித்து யாத்திரையாக ஸஹ்யாத்ரியை (மேற்குத்தொடர்ச்சி மலை) அடைந்து துங்கபத்ரா நதியின் உத்பத்தி ஸ்தானம் சென்று ஸ்நாந ஆஹ்நிகங்களை முடித்துக்கொண்டு துங்கபத்ரா நதிக்கரையில் ஸ்ரீ ரிஷ்யச்ருங்க மகரிஷியின் ஆசிரமத்தையும் கண்டார். அங்கு பிரஸவித்துக்கொண்டிருக்கும் தவளைக்கு

1. ஸஹ்யாத்ரி கண்டத்தில் இதன் விபரத்தைக்காணலாம்,

வெயிலின் தாபம் ஏற்படாமல் இருக்க ஒரு பாம்பு தன் படத்தை விரித்து மறைத்துக்கொண்டிருப்பதைப் பார்த்து வியப்புற்ருர். இதுவே விரோத மனப்பான்மையற்ற சாந்தி ஸ்தலம் என்று தீர்மானித்து இதுவே தன் தபசுக்கு யோக்கியமான இடம் என்று முடிவு செய்தார். பின்பு அங்கிருந்து ஸ்ரீ சைலம், சேஷாசலம், நரசிம்மகிரி, ஜகன்னுதம் முதலிய க்ஷேத்திரங்களுக்குச் சென்ருர். பின்பு காசி க்ஷேத்திரத்தை அடைந்து அங்கு சில தினங்கள் தங்குவதற்காக தனக்கும் நான்கு சிஷ்யர்களுக்கும் த்யான அனுஷ்டான யோக்கியமான ஐந்து குடிசைகளை கட்டிக்கொண்டு சில நாட்கள் அங்கு வசித்தார்.

பிறகு அங்கிருந்து புறப்பட்டு காச்மீர தேசம் (காஷ்மீர்) சென்ருர். அங்கு ஸ்ரீ சாரதாம்பாள் ஆலயம் ஒன்று உள்ளது. இதன் நான்கு புறங்களிலும் நான்கு வாசல்கள் உள்ளன. ஒவ்வொரு வாசலிலும் மிகச்சிறந்த மேதாவிகளான பண்டிதர்கள் வாதம் செய்யத் தயாராக இருக்கிருர்கள். இவர்களை வாதத்தில் ஜயித்தால்தான் உள்ளே நுழையலாம். இந்த விபரங்களையெல்லாம் கேள்விப்பட்டு அங்கு சென்று, தெற்கு வாசலில் இருந்த வித்வான்களை சாஸ்திர வாதத்தில் ஜெயித்து எல்லோராலும் மஹா வித்வான் என்று அங்கீகரிக்கப்பெற்று தெற்கு வாசல் வழியாக ஸ்ரீ சாரதா தேவியின் ஆலயத்துள் சென்ருர். அங்கு ஸர்வஜ்ஞ பீடத்தில் ஏறப்போகும்போது "எல்லா வித்யைகளிலும் பரீக்ஷை கொடுத்து அதில் தேர்ச்சி பெற்ருல்தான் ஸர்வஜ்ஞ பீடத்தில் ஏறலாம் இல்லையேல் முடியாது" என்று அசரீரி வாக்கு கேட்டது. ஸ்ரீ சங்கரர் வாத பரீக்ஷை கொடுக்கத் தயாராக இருப்பதைக் கண்ட வித்வான்கள் அதற்கு ஏற்பாடு செய்து ஸ்ரீ சங்கரருக்கும் ஸ்ரீ தேவிக்கும் மத்தியில் ஒரு திரையை தொங்கவிட்டார்கள். ஸ்ரீ தேவி எல்லா சாஸ்திரங்களிலும் ஸ்ரீ சங்கரரை பரீக்ஷித்து கடைசியில் வாத்ஸ்யாயனரின் காம சாஸ்திரத்தில் கேள்விகளைக் கேட்கலானுள். இதற்கு விடையளிக்க சில நாட்கள் அவகாசம் தேவை என்று யதீசுவரர் தேவியைக் கேட்டுக் கொண்டு அமருகன் என்ற அந்த தேசத்தின் அரசனுடைய இறந்த சரீரத்திற்குள் தான் பரகாய ப்ரவேச சக்தியைக் கொண்டு உட்புகுந்து காமசாஸ்திர நுணுக்குகளை அறிந்து அமருகம் என்ற க்ரந்தத்தையும் இயற்றினுர்.

சில நாட்கள் சென்றதும் ராஜமஹிஷிக்கு "இவர் தன் பர்த்தாவல்ல. யாரோ ஒரு யோகி தன் பர்த்தாவின் சரீரத்தில் புகுந்திருக்கிருர்" என்ற ஸந்தேகம் தோன்றிட ஸ்ரீ சங்கரர் அந்த சரீரத்தை விட்டு விட்டு தன் பூர்வ சரீரத்தில் புகும் போது ராணியின் உத்தரவுப்படி அது அக்னி பாதைக்குட் படுத்தப்படுவது கண்டு ஸ்ரீ நரஸிம்மமூர்த்தியை கராவலம்ப ஸ்தோத்ரம் மூலமாய் துதித்து அனுக்ரகம் பெற்று மறுபடி ஸ்ரீ தேவி முன் வந்து வாதத்தைத்துடங்கி ஸ்ரீ தேவியினுல் கேட்கப்பட்ட காமகலா சாஸ்திரக்கேள்விகளுக்கும் தகுந்த பதிலை அளித்தார். இது கேட்டு மிகுந்த சந்தோஷம் அடைந்த ஸ்ரீதேவி "நீ வேண்டிய வரத்தைக்கேள்" என்று சொல்ல, "கருணைபுரிந்து என்னுடன் ஙிஷ்யச்ருங்கபுரத்துக்கு வர வேணும்" என்று யதீசுவரர் பிரார்த்தித்தார். "அப்படியே ஆகட்டும்" என்று சொல்லி ஸ்ரீ தேவியும் ஸ்ரீ சங்கரருடன் வர துங்கபத்ரா நதிக்கரையில் சிருங்கேரியில் ஸ்ரீதேவியை யதீசு வரர் பிரதிஷ்டை செய்து பூஜித்தார். ஸ்ரீ சங்கரர் தன் நான்கு சிஷ்யர்களுடன் அங்கேயே பலகாலம் தங்கி வேதாந்த வித்யா ப்ரவசனம் செய்துவந்தார். தன் சிஷ்யரான விசுவரூபரிடம் ஸ்ரீசந்த்ரமௌளீசுவர லிங்கத்தையும் ஸ்ரீ ரத்னகர்ப்ப கணபதி மூர்த்தியையும் கொடுத்து 'இவற்றைப் பூஜை செய்வதுடன் ஸ்ரீ சாரதா தேவியையும் பூஜித்து வா' என்று ஸ்ரீசுரேசுவரருக்கு ஆக்ஞை கொடுத்துவிட்டு மற்ற சிஷ்யர் களுடன் காஞ்சி க்ஷேத்திரம் சென்ருர்.

அங்கு சிவகாஞ்சி விஷ்ணுகாஞ்சி என்ற நகரங்களை அமைத்து ரமணீயமான காமாக்ஷி தேவியின் மூர்த்தியையும் ஸ்தாபித்தார். இங்கே சைவர்கள், வைஷ்ணவர்கள், தேவி உபாஸகர்கள், சூர்ய உபாஸகர்கள், காபாலிகர்கள் கணபதி உபாஸகர்கள் ஆகிய எல்லா கோஷ்டியினரும் ஸ்ரீ சங்கரரை வணங்கி அவருடைய அனுக்ரகம் பெற்று தங்கள் இருப்பிடம் சென்றனர்.

அங்கிருந்து சிஷ்யர்களுடன் புறப்பட்டு ஸ்ரீ சங்கரர் இமையத்தில் உள்ள பதரீவனம் சென்று சில தினங்கள் அங்கு தங்கினுர். ஒருநாள் இவருடைய கனவில் ஸ்ரீவிஷ்ணு தோன்றி "என் மூர்த்தி அலகநந்தாவில் ஜலத்தில் மூழ்கிக்கிடக்கிறது அதை எடுத்து பிரதிஷ்டை செய்வாயாக" என்று சொல்ல அப்படியே அங்கு ஸ்ரீமந் நாராயணனை பிரதிஷ்டை செய்து

பூஜித்தார். இங்கு ஒரு ஆலயத்தைக் கட்டும்படி ஸ்ரீ பத்மபாதருக்கு உத்திரவு கொடுத்துவிட்டு ஸ்ரீ சங்கரர் காசிக்குச் சென்றார். குருவின் கட்டளையை சிரசால் வகித்து ஸ்ரீ பத்மபாதரும் ஸ்ரீமந்நாராயணனுடைய ஆலயத்தை சீக்கிரம் கட்டி முடித்தார்.

ஒருநாள் ஸ்ரீ பத்மபாதர் அரசனின் அரண்மனையில் பிக்ஷை கேட்கப் போனார். அரசனுடைய மூத்த மனைவி இவரைக் கண்டதும் தன் மனதிற்குள் ஆலோசித்தாள் "இவர் ஓர் மஹாத்மாவாகத் தெரிகிறது, இவரை வரவேற்று உபசரிக்க நம் பர்த்தா கிருஹத்தில் இல்லை. நம் கிருஹத்தில் சிராத்த காரியம் நடக்கப்போகிறது. இதற்காக நம் பர்த்தா ஸ்னானம் செய்ய நதிக்குப் போயிருக்கிறார். இவரையும் நதிக்குப் போகச்சொன்னால் அங்கு இவரை நேரில் கண்டு நம் கணவர் பிக்ஷைக்கு ஆஹ்வானம் செய்வார்" இவ்வாறு எண்ணி பத்மபாதரைப் பார்த்து "நதிக்குச் சென்று ஸ்னானம் செய்துவிட்டுத் திரும்பி வரவேணும்" என்று பிரார்த்தித்தாள். மிகவும் பசியினால் வாடும் ஸ்ரீ பத்மபாதர் வெளியில் வந்து நதி வெகுதூரம் இருப்பதை அறிந்து தன்னுடைய தண்டத்தினால் உயரமான மலைப்பிரதேசத்தில் இரண்டு தடவை தட்ட அந்த இரண்டு இடங்களிலிருந்தும் ஜலப்ரவாகம் ஏற்பட்டது. அதில் ஸ்நானம் செய்துவிட்டு யோகீசுவரரான ஸ்ரீ பத்மபாதர் விரைவில் அரண்மனைக்கு வந்து பிக்ஷைக்குத் தயாராக உட்கார்ந்தார். இந்த ஆச்சரிய சம்பவத்தைப் பார்த்து ராணியும் சிராத்தத்துக்காக தயாரிக்கப்பட்ட உணவுகளால் பத்மபாதருக்கு பிக்ஷை செய்வித்தாள். இதற்குள் ஸ்நானம் செய்துவிட்டு சிராத்தத்துக்கு வரிக்கப்பட்டிருந்த பிராம்மணர்களுடன் அரசன் அரண்மனைக்கு வந்து சேர்ந்தான். மூத்த மனைவியிடம் த்வேஷம் கொண்ட இரண்டாவது மனைவியின் மூலம் நடந்த விருத்தாந்தத்தைக் கேட்டு அரசன் கோபங்கொண்டு பத்ம பாதரை வெட்டுவதற்குக் கத்தியை ஓங்கினான். உடனே ஸ்ரீ பத்ம பாதர் ஸ்ரீ நரசிம்ம மூர்த்தியின் ரூபத்துடன் அரசனுடைய கையை அசையாதபடி செய்துவிட்டார். இதைக் கண்டு பயமடைந்த அரசன் ஸ்தோத்ரம் செய்து அவரருளால் கை ஸ்வாதீனமாகப் பெற்றான். நரஸிம்ம உருக்கொண்ட இந்த யதியின் ப்ரீதிக்காக தனது அரண்மனையை நரஸிம்ம

மந்திரமாகச் செய்து தன் ராஜ்யம் முழுவதையும் அதன் நிர்வாகத்துக்காகக் கொடுத்தான்.

அதே சமயத்தில் காசிக்குச் சென்றிருந்த ஸ்ரீ சங்கரரிடம் பைரவ உபாஸகனுன ஒரு துஷ்ட பிராமணன் வந்து ஸ்ரீசங்கரரின் தலையை பைரவ மூர்த்தியான தன் தெய்வத்திற்கு பலிகொடுப்பதற்காக யாசித்தான். இவன் செய்த சுச்ரூஷை யால் சந்தோஷம் அடைந்த ஸ்ரீ சங்கரரிடம் இந்த பிரார்த் தனைக்கு சம்மதமும் பெற்ருன். தன் திக்விஜயம் முடிந்து விட்டது என்று ஸ்ரீ சங்கரர் எண்ணி தன் சரீரம் பரோபகாரத் திற்கு ஏற்படட்டும் என்று சம்மதம் அளித்தார். காபாலிகன் ஸ்ரீசங்கரரை தன்னுடைய பைரவரின் கோவிலுக்கு அழைத்துச் சென்று ஒருவரும் இல்லாத இடத்தில் ஸ்ரீ சங்கரரின் தலையை வெட்ட கத்தியை ஓங்கினுன். இதே சமயத்தில் பதரியில் ஸ்ரீ நரசிம்ம மூர்த்தியை தியானித்துக்கொண்டிருந்த ஸ்ரீபத்மபாதர் திடீரென தன் குருவை ஸ்மரித்தார். தன் யோக பலத்தால் காசியில் நடக்கும் செய்கைகளை உணர்ந்து, நரசிம்ம ரூபத் துடன் திடீரென காபாலிகன் முன் தோன்றி அவனுடைய கத்தியைப் பிடுங்கி அதனுல் காபாலிகனுடைய கழுத்தை வெட்டி எறிந்து கோலாகலத்துடன் அங்கு நர்த்தனம் செய்தார். ஸமாதியிலிருந்து கலைந்த ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ நரஸிம்ம மூர்த்தியை

'लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम्'

என்ற கராவலம்ப ஸ்தோத்ரத்தால் துதித்தார். ஸ்ரீபத்ம பாதரின் ஆச்சரியகாரியத்தைகேட்டு மற்ற சிஷ்யர்கள் அவரை புகழ எல்லோரையும் அழைத்துக்கொண்டு ஸ்ரீ சங்கரர் பதரியில் கட்டப்பட்டிருக்கும் ஸ்ரீ நாராயண மூர்த்தியின் கோவிலைப் பார்க்கப் புறப்பட்டார்கள்.

அங்கு ஸ்ரீமன் நாராயணனைப் பூஜித்துப் பத்மபாதரின் விசேஷ கைங்கர்யத்தைப் பாராட்டி இந்த இடத்தில் எப்போதும் கேரள தேசத்திலிருந்து அழைத்து வரப்படும் அர்ச்சகரே பூஜை செய்யட்டும் என்று ஸ்ரீ சங்கரர் ஆக்ஞை செய்தார். இப்போதும் இந்த ஆலயத்தில் கேரள தேசத்தி லிருந்து வந்த அர்ச்சகர்களே பூஜை செய்து வருகிருர்கள். பதரியாத்ரை போனுல் இந்த நாராயண மூர்த்தியையும் அதை மலையாள தேசத்தவர் பூஜை செய்து வருவதையும்

காணலாம். அரசனின் அரண்மனையில் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீ நரஸிம்ம மூர்த்தியின் ஆலயத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட ஸ்ரீ சங்கரர் அங்கு சென்று அரசனையும் அவன் குடும்பத்தவரையும் அனுக்கிரஹித்தார். அரசனின் உபசாரத்தாலும் பக்தியினாலும் திருப்தி அடைந்த ஸ்ரீ சங்கரர் அங்கு ஸ்ரீ சக்ர வடிவமான நகரத்தை நிர்மாணம் செய்யச் சொல்லி அதில் அந்த அரசனுக்கு பட்டாபிஷேகத்தை நடத்திவைத்தார். பின் அரசனிடம் விடைபெற்று ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ பத்மபாதரிடம் "கிழக்கு திசையில் நீ ஸம்பிரதாயப்படி பூஜைகளை நடத்திக் கொண்டு அங்கு உலக குருவாக இரு" என்று ஆக்ஞையிட்டார். அந்த கட்டளைப்படி ஸ்ரீ பத்மபாதாசார்யாள் ஜகந்நாத க்ஷேத்திரத்தில் தனக்கு ஒரு மடத்தை ஏற்படுத்திக் கொண்டு வாஸம் செய்தார்.

ஸ்ரீ சுரேசுவரர் முன்பு சொன்னபடி ஸ்ரீ சிருங்கேரியில் இருந்து கொண்டு ஸ்ரீ மடத்தை கவனித்து வந்தார். ஸ்ரீ ஹஸ்தாமலகரை மேற்கு திக்கில் மடத்தை ஸ்தாபிக்க ஸ்ரீகுருநாதர் ஆக்ஞைசெய்ய அதன்படி அவரும் துவாரகைக்கு சென்று அங்கு ஒரு மடத்தை நிர்மாணித்து வஸித்தார். ஸ்ரீதோடகாசாரியாரை வடதிசையை பரிபாலிக்க ஸ்ரீ சங்கரர் அனுப்ப அவரும் பதரீ வனத்துக்குப் பக்கத்தில் ஜ்யோதிர் மடத்தை ஸ்தாபித்து அங்கு வசித்து வந்தார்

இப்படி நான்கு திக்குகளிலும் தன் நான்கு சிஷ்யர்களைக் கொண்டு மடங்களை ஸ்தாபித்துவிட்டு நேபாள தேசத்தில் உள்ள சித்தர்களால் வணங்கப்படும் ஸித்தேச்வரியை தரிசனம் செய்ய புறப்பட்டார். அங்கு சென்று ஸ்ரீ தேவியை ஸ்ரீசங்கரர் வணங்கவும் பரம ப்ரீதியுடன் ஸ்ரீ தேவி ஸ்ரீ சங்கரரை தன் மைந்தன் ஸ்கந்தனைப்போல தன் மடியில் உட்கார வைத்தாள். இதைக்கண்டு துவேஷத்தால் கோபங்கொண்ட அங்குள்ள ஸித்தர்கள் தங்கள் யோக மகிமையால் கல்மழையை ஸ்ரீ சங்கரர் பேரிலும் ஸ்ரீ தேவியின் பேரிலும் பெய்யச்செய்தார்கள். ஸ்ரீ சங்கரர் தன் யோக பலத்தால் இக்கல்மழையைத் தடுத்தார். சித்தர்கள் இதுகண்டு வெட்கி ஓடிவிட்டார்கள். இப்போதும் அங்கு சென்று பார்த்தால் இந்த சம்பவம் கல்லில் சித்தரித்திருப்பதைக் காணலாம். ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ தேவியை வணங்கி தன் தாகத்தைத் தீர்க்க தக்ரம் (மோர்) வேண்டும் என்று கேட்டார். ஸ்ரீஸித்தேசுவரியும்

கருணை புரிந்து அப்படியே ஆகட்டும் என்று சொல்லி அங்கு தக்ர நதியை ப்ரவகிக்கச் செய்தாள். இப்போதும் அது ஓடிக் கொண்டிருக்கிறது.

தான் செய்ய வேண்டிய அத்வைத ஸ்தாபன காரியங்களை முடித்துவிட்டோம் என்று எண்ணங்கொண்ட ஸ்ரீ சங்கரர் மகான்களின் தரிசனம் பெறவேண்டி தத்தாத்ரேயரின் ஆசிரமம் போய்ச் சேர்ந்தார். சாஸ்திர புத்தகங்களை விட்டாயிற்று. சிஷ்யர்களையும் விட்டாயிற்று. இந்த தண்டம் கமண்டலு இவை இரண்டும் எதற்கு என்று சொல்லி அங்கு ஸ்ரீசங்கரர் தன் சந்நியாஸ தண்டத்தையும் கமண்டலுவையும் தியாகம் செய்தார். உடனே மகானின் அனுக்கிரகத்தால் தண்டம் மரமாகவும் கமண்டலு நதியாகவும் மாறிவிட்டன. பின்பு ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ தத்தாத்ரேயரை தரிசனம் செய்து தான் செய்த காரியங்களையும் சிஷ்யர்களை நியமனம் செய்த விருத்தாந்தத்தையும் அவரிடம் தெரிவிக்க ஸ்ரீ தத்தாத்ரேய முனிவரும் ஸுரேசுவரர் முதலான சிஷ்யர்களுக்கு அனுக்ரஹம் செய்ய ஸ்ரீ சங்கரரும் ஸ்ரீ தத்தாத்ரேயரும் வெகுகாலம் அங்கு ஸம்பாஷணை செய்துகொண்டு வஸித்தார்கள்.

---

## 3-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

பக்கம் 17. :—ஏன் ஜடன் போல் இருக்கிருய் என்று ஆசார்யாள் கேட்டதற்கு பாலன்,

‘ नाहं जडः किं तु जडः प्रवर्तते मत्संनिधानेन न संदिहे गुरो ’

என்று கூறிவிட்டு மேலும்

‘ निमित्तं मनश्चक्षुरादिप्रवृत्तौ ’

என்று ஆரம்பிக்கும் 12 சுலோகங்களால் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ஆத்மதத்வத்தை விளக்கி பதில் கூறியதால் அன்வர்த்தமான ‘ஹஸ்தாமலகர்’ என்ற யோக பட்டத்தைக் கொடுத்தார். மேலும் இந்த 12 சுலோகங்களுக்கும் ஆசார்யாளே பாஷ்யமியற்றியுள்ளார். இதுவே ஹஸ்தாமலகீய பாஷ்யம் என்பது.

பக்கம் 17 :— இதுதான் "தோடகாஷ்டகம்" என்பது. இதுதவிர "ச்ருதிஸார ஸமுத்தரணம்" என்ற ஒரு வேதாந்த நூலும் இவரால் இயற்றப்பட்டுள்ளது. இது வ்யாக்யானத்துடன் ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் ப்ரஸ்ஸில் அச்சிடப் பட்டிருக்கிறது.

பக்கம் 18 :— ஸ்ரீ சங்கர பகவத் பாதர் நான்கு சிஷ்யர்களுடன் காசிக்குச் சென்று தனக்கும் நான்கு சிஷ்யர்களுக்குமாக ஐந்து மடங்களை ஏற்படுத்தி சில நாட்கள் அங்கு வஸித்தார் என்று கூறப்பட்டுள்ளது. பாடசமயம் தவிர மற்ற காலங்களில் பகவத் பாதரும் நான்கு சிஷ்யர்களும் வெவ்வேறான இடத்தில் தனித்தனியாக ஏகாந்தமாக இருந்து த்யானம் அநுஷ்டானம் முதலியவைகளைச் செய்வதற்காகத் தான் காசியில் ஐந்து மடங்கள் ஏற்படுத்தியது. ஆகையால் இதைக்கொண்டு ஐந்து ஆம்னாய மடங்களை ஆசார்யாள் ஸ்தாபித்ததாகக் கூறமுடியாது. யதிகள் பலர் சேர்ந்து ஒரே இடத்தில் வஸிக்கக்கூடாது என்றும் தனித்தனியாக வெவ்வேறு இடத்தில் வஸிக்கவேண்டுமென்றும் இதன் மூலம் தெரியவருகிறது. மேலும் நான்கு திசைகளில் நான்கு ஆம்னாய மடங்களை ஸ்தாபித்தது, அங்கு தம் நான்கு சிஷ்யர்களை நியமித்தது முதலிய வரலாறு இதே ஸர்க்கத்தின் முடிவில் காணப்படுகிறது.

பக்கம் 19 :— துங்கா நதீ தீரத்திலுள்ள பாவனமான நிர்வைரமான சிருங்ககிரி க்ஷேத்திரத்தில் ஸ்ரீ சாரதா தேவியை ஸ்தாபித்து தாமே பூஜித்துக்கொண்டு வெகு காலம் அங்கு வஸித்தார் என்று கூறப்பட்டுள்ளது. சித்விலாஸீய சங்கர விஜயத்தில் 14 வருஷங்கள் வஸித்ததாக கூறப்பட்டிருக்கிறது. மற்றொரு நூலில் 12 வருஷங்கள் வஸித்தார்கள் என்று உள்ளது.

பக்கம் 19. :— ஸித்தரால் கொடுக்கப்பட்ட சந்திரமௌளீசுவர லிங்கத்தையும் ரத்னகர்ப்ப கணபதி மூர்த்தியையும் ஸ்ரீ சங்கராசார்யார் விசுவரூபருக்கு கொடுத்தார் என்று உள்ளது. "பரமசிவனிடமிருந்து குருபரம்பரையாக தமக்குக் கிடைத்த சந்திரமௌளீசுவர லிங்கத்தையும் ரத்னகர்ப்ப கணபதி மூர்த்தியையும் ஸுரேசுவரருக்குக் கொடுத்தார்" என்று சித்விலாஸீயத்தில் தெளிவாகக் கூறப்பட்டிருப்பதால் இங்கு ஸுஸித்தர் என்பது கோவிந்த பகவத்பாதரைக்

குறிக்கிறது. ரேவா (நர்மதா) நதீதீரத்தில் வஸித்ததால் ரேவண பதமும் இவரையேதான் குறிக்கிறது. நர்மதைக்கு 'ரேவா' என்று மற்றொரு பெயர் கோசத்தில் உள்ளது. ஆராத்யர்களாலும் வீர சைவர்களாலும் போற்றப்படும் ரேணுகாசார்யர் என்ற பெயர் கொண்ட ரேவணர் 12வது நூற்றாண்டிலிருந்தவர்; ஸ்ரீ சங்கர பகவத்பாதரின் சமகாலத்தவரல்ல. ஆகையால் அவரை இங்கு குறிப்பிட முடியாது. மேலும் அவரைப்பற்றி இந்த காவ்யத்தில் மேலே 5வது ஸர்க்கத்திலும் 6வது ஸர்க்கத்திலும் வர்ணிக்கப்படுகிறது.

பக்கம் 20 :— இந்தக்கதை இமயமலை ப்ராந்தங்களில் வஸிக்கும் ஜனங்களிடம் இப்போதும் ப்ரஸித்தமாக உள்ளது. இதில் வர்ணிக்கப்பட்ட ஸ்ரீநகரம் பதரிக்குப்போகும் வழியில் அளகநந்தா தீரத்தில் இருந்தது. இப்பொழுது காச்மீரத்திலுள்ள ஸ்ரீநகரம் இங்கு கூறப்பட்டதல்ல.

---



## நான்காவது ஸர்க்கம்

ஸ்ரீ சங்கரரின் ஆஞ்ஞையை மேற்கொண்ட ஸ்ரீஸுரேசுவராசாரியார் துங்கபத்ரா நதிக்கரையில் இருக்கும் சிருங்கேரி மடத்தில் சிறப்பாக வெகு காலம் விளங்கினர். மானஸோல்லாஸம் முதலிய விசேஷமான வேதாந்த க்ரந்தங்களை இயற்றிய இவர் பிருஹஸ்பதிக்கு ஸமானமான விசேஷ யோக்யதை உள்ளவர் என்று எல்லோராலும் சிலாகிக்கப்பட்டு வசித்து வந்தார். வர்ணாசிரம தர்மங்களை நன்கு ஸ்தாபித்து வெகு காலம் உபதேசங்கள் செய்து சிஷ்யர்களைக் கடைத்தேறச் செய்து, இம்முனிவர் போதகனர் என்பவரை சிஷ்யராக ஏற்படுத்தினர்.

பராசரருக்கு வியாஸர் தோன்றியதுபோல் போதகனாசாரியாரும் மிகவும் மேன்மையுடன் விளங்கினர். சிஷ்யர்களை அனுக்ரகிக்கும் விஷயத்தில் அபாரமான திறமை வாய்ந்த போதகனாசாரியார் பல ஆண்டுகள் பீடத்தில் விளங்கி தனக்கு ஞானகனன் என்ற சிஷ்யரை அமைத்துக்கொண்டார். இவருக்குப்பின் ஞானோத்தமர் இவருக்கு ஸர்வஜனங்களின் மனதைக்கவரும் கருணையையும் கீர்த்தியையும் கொண்ட ஞானகிரி சிஷ்யராக அமைந்தார். அவருக்குப்பின் வந்த ஸிம்ஹகிரி ஆசாரியார் வனத்தில் மிருகேந்திரன் போல் பண்டிதவர்க்கத்தில் சிரேஷ்டராக விளங்கி தனக்கு ஈசுவர தீர்த்தரென்று பெயர் கொண்டவரை சிஷ்யராக அமைத்துக் கொண்டார். இவருக்கு ஏற்பட்ட சிஷ்யரின் பெயர் நரசிம்ம தீர்த்தர். இவர் வாதத்தில் எல்லா எதிர்க்கக்ஷியினர்களையும் ஜெயித்து அத்துவைத மதத்தை உலகில் நன்றாக பரப்பி சிஷ்ய மண்டலத்துடன் வெகு கீர்த்தியுள்ளவராக விளங்கினர்.

இவருடைய சிஷ்யர் வித்யாதீர்த்தர் எல்லா சாஸ்திரங்களிலும் திறமை பெற்ற இவர் யோகராஜாவாக பலகாலம் வாழ்ந்தார். பல வித்வான்களால் இவர் ஸபை நிறைந்திருந்து இதர மதங்களைச்சேர்ந்த மஹாவித்வான்களாலும் போற்றப்பட்டவரான இவர் குரு பூமண்டலாதிபதியாக விளங்கினர்

ஏகசிலா (வரங்கல்) நகரத்தில் ஒரு பிராமணனுக்கு மிகவும் புத்திசாலிகளான இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். இவர்கள் குணங்களாலும் ஆசாரஅனுஷ்டானத்தாலும் மிகுந்த

கீர்த்தி வாய்ந்தவர்கள். அவ்விருவர்களும் ஒருவருக்கொருவர் மிகவும் சிநேஹ பாவத்துடன் வளர்ந்துவந்தார்கள் எனினும் இளையவனுக்கு வைராக்யம் அதிகமாக ஏற்பட்டு தீர்த்த யாத்திரையாகச் சென்று ஸ்ரீ வித்யாதீர்த்தர் இருக்கும் இடத்துக்கு வந்துசேர்ந்து அவரை வணங்கினார். மனிதனுக்கு ஏற்பட்ட ஆறு விரோதிகளான காமம், குரோதம், லோபம், மோஹம். மதம், மாத்ஸர்யம் இவைகளை ஜெயித்தவரும், ஸுகித்திருப்பவரிடம் ஸ்நேகம், துக்கப்படுகிறவர்களிடம் கருணை காட்டல், புண்யம் செய்தவர்களிடம் ஸந்தோஷம் பாபிகளைக் கண்டால் அலக்ஷியம் இந்நான்கு உத்தம மனோ பாவங்களை உடையவரும், அவித்யை, அஹங்காரம், ராகம், துவேஷம், அபிமானம் முதலிய துர்க்குணங்களற்றவரும் தத்துவமஸி முதலிய மஹா வாக்கியங்களின் தாத்பரியத்தை நன்கு தெளிவாக அறிந்தவருமான ஸ்ரீ வித்யாதீர்த்தரைக் கண்டார்.

இவர் அந்தந்த காலத்தில் அந்தந்த ஆசிரமத்திலுள்ளவர்களை அவரவர்களின் கர்மாக்களைச் செய்யும்படி கவனித்தும் தான் இடைவிடாது பரப்ரும்மத்தை தியானம் செய்து கொண்டும் எப்போதும் சாந்தராக இருப்பதையும் கண்டு "ஏ ப்ரபோ தங்களை சரணமடைந்தேன் என்னைக் கடைத்தேற்ற நீங்கள்தான் வழிகாட்டவேணும்" என்றார். இது கேட்டு வித்யாதீர்த்தரும் "நீ யாரப்பா, இங்கு வந்த காரணம் என்ன, உனக்கு என்னால் என்ன தேவை" என்று ப்ரியமாகக் கேட்டார். வந்தவர் "எனக்கு ஸம்ஸார வாழ்க்கையில் பற்று இல்லை எனக்கு ஸந்நியாஸாச்ரமம் கொடுக்கவேணும்" என்று கேட்டார். ஸந்நியாஸாச்ரமத்துக்கு இவரே லாயக்குள்ளவர் என்று கண்டு ஸ்ரீ வித்யாதீர்த்தர் இவருக்கு மஹாவாக்ய உபதேசம் செய்து பாரதீ கிருஷ்ண தீர்த்தர் என்ற யோக பட்டமும் இவருக்குக் கொடுத்தார். இவரை சிருங்கேரியில் தன்னுடனேயே இருக்கச்செய்தார்.

ஏகசிலா நகரத்தில் இருந்த மூத்த சகோதரர் தன் தம்பியைக் காணாமல் பல இடங்களில் தேடிவந்து அவர் சிருங்கேரியில் ஸந்நியாஸியாக இருக்கக்கண்டு தனக்கு இந்த ஸந்நியாஸாசிரமம் கிடைக்கவில்லையே என வருந்தினார். இவர் ஸ்ரீ வித்யாதீர்த்தரை தரிசித்து தனக்கும் ஸந்நியாஸாச்ரமம் கொடுக்கவேணும் என்று பிரார்த்தித்தார். விநயம், வித்யை,

சுறுசுறுப்பு முதலிய நல்ல குணங்களுடன் இப்படி பிரார்த்திக்கும் ஏகசிலா நகரவாசியைப் பார்த்து தீர்க்க தர்சியான ஸ்ரீ வித்யாதீர்த்தர் "இவன் மிகவும் சிலாக்கியமான ஸந்நியாசியாவான்". என்று தீர்மானித்து இவருக்கும் சந்நியாஸாசிரமத்தைக் கொடுத்து இவருக்கு வித்யாரண்யர் என்ற யோகபட்டத்தையும் வழங்கினர். வேதவ்யாஸரைப் போல் பல சிஷ்யர்களைக்கொண்டவரும் எல்லா சாஸ்திரங் களிலும் சிறந்த பாண்டித்யமுள்ளவருமான ஸ்ரீ வித்யாரண்யர் வேதங்களுக்கு பாஷ்யங்களை இயற்றி அதை தன் குருவிடம் காட்ட வித்யாதீர்த்தர் மிகவும் சந்தோஷமடைந்தார் இது உலகில் முழுதும் பரவி எல்லோருக்கும் மங்களத்தை உண்டு பண்ணும் என்று ஆசி கூறினர். இதை வித்வான்களைக் கொண்டு பரிசீலனை செய்ய எனக்கு அனுக்ரகிக்கவேணும் என்று ஸ்ரீவித்யாரண்யர் வேண்ட அவரைப்பார்த்து ஸ்ரீ வித்யா தீர்த்தர் "அப்பா, நீ போகும் இடத்தில் எங்கு அசரீரி வாக்கு கேட்கிறதோ உடனே அங்கிருந்து என்னிடம் திரும்பி வந்துவிடு" என்று ஆக்ஞை இட்டார்.

க்ரந்தத்தை எடுத்துக்கொண்டு ஸ்ரீ வித்யாரண்யர், ஏலேசுவரர் முதலான பல பிரபல வித்வான்களிடம் காட்டி அவர்களின் அங்கீகாரம் பெற்றும் திருப்தியடையாமல் பெரிய முனீசுவரர்கள் வாழும் காசீ க்ஷேத்ரம் போகத் தீர்மானித்துச் செல்லும் வழியில் விந்த்ய பர்வதத்தின் பக்கம் வந்து சேர்ந்தார். அங்கு மரத்தில் இருந்த பிரும்மரக்ஷஸ் ஒன்றைக் கண்டார். "நீ யார் ஏன் உனக்கு இந்த கொடிய உருவம் வந்தது ஏன் இங்கு வசிக்கிருய் விவரம் சொல்லு" என்று கருணையுடன் வித்யாரண்யர் கேட்டார். அதற்கு பிரும்மரக்ஷஸ் "முனிசிரேஷ்டரே, த்ரேதாயுகத்தில் ஸ்ரீராமன் எனக்குத் துலாபார தானம் செய்தார். துரதிருஷ்டவசமாக நான் அதற்கு ப்ராயச்சித்தம் செய்துகொள்ளவில்லை. அதனுல் இந்த ரூபம் அடைந்தேன். பசியினுல் வருந்துகிறேன். எனக்கு அன்னம் கொடு" என்றது. இதுகேட்ட வித்யாரண்யர் "சந்நியாசி யான எனக்கு அன்னம் கொடுக்க அதிகாரமில்லை. நான் காசி நகரம் செல்கிறேன். நீ மற்றவர்களிடம் யாசிப்பாய்" என்றார்.

அதற்கு பிரும்மரக்ஷஸ் "நானும் தங்களுடன் காசிக்கு வருகிறேன். அங்கு வியாஸபகவானுடைய கடாக்ஷத்தால்

உங்களுடைய எல்லா மனோபீஷ்டங்களும் நிறைவேறும். பிரதிதினம் காசி க்ஷேத்திரத்தில் ஸ்ரீ விசுவேச்வரரை தரிசிக்க வேண்டி ஸ்ரீ வ்யாஸபகவான் ச்வபச வேஷம் பூண்டு கள்குடம் தாங்கினவராய் நான்கு வேதங்களையும் நான்கு நாய்களாகக் கொண்டு மிகவும் வெறுக்கத்தக்க வேஷத்துடன் ஒருவருக்கும் தெரியாமல் பதரீவனத்திலிருந்து அங்கு வருகிறார். அவரைத் தரிசித்து அவர் தடுத்தாலும் விடாமல் அவருடைய பாதங்களை கெட்டியாக நீங்கள் பிடித்துக்கொள்வீர்களேயானால் உங்களுடைய மனோபீஷ்டம் முழுதும் நிறைவேறிவிடும். எனக்கும் அங்கு அன்னம் கிடைக்கும்படி நீங்கள் செய்யலாம்" என்று சொல்லிற்று. உடனே இருவரும் வேகமாக காசீநகரம் சென்றார்கள்.

வித்வான்கள் நிறைந்த அந்த க்ஷேத்திரத்தைக்கண்ட ஸ்ரீ வித்யாரண்யர் மிகவும் சந்தோஷமடைந்தார். சுருதி ஸ்மிருதி புராணங்கள் எல்லாம் இந்த க்ஷேத்திரத்தை புகழ்கின்றன. சந்நியாசிகளும், வ்ரதங்களை அனுஷ்டிக்கும் கிருஹஸ்தர்களும் இந்த க்ஷேத்திரத்தை நாடுகிறார்கள். தேவர்களில் முக்யமானவர் விசுவேச்வரர். நதிகளில் முக்யமானது கங்கை. க்ஷேத்திரங்களில் முக்கியமானது காசி. இம்மூன்று பெருமைகளையும் இங்கு ஒருங்கே காணலாம். அப்பேற்பட்ட க்ஷேத்திரத்தில் ஸ்ரீவித்யாரண்யர் ஸ்ரீவ்யாஸ பகவானை தரிசிக்க காத்துக்கொண்டிருந்தார்.

---

## 4-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

பக்கம் 26. ஸ்ரீஞானகனசார்யார் :—இப்பொழுது சிருங்ககிரியில் உள்ள மிகவும் ப்ராசீனமான ஜநார்தனர் ஆலயம் ஸ்ரீஞானகனசார்யார் காலத்தில் கட்டப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. ப்ரகாசாத்ம முனிவர் இயற்றிய விவரண கிரந்தத்தில் கூறப்பட்டுள்ள ஸித்தாந்தத்தைத் தழுவிய 'தத்வ சுத்தி' என்னும் நூல் இவரால் இயற்றப்பட்டுள்ளது.

பக்கம் 26. ஞானோத்தம சிவாசார்யார் :— கௌட தேசத்திலிருந்து தக்ஷிண தேசத்திற்கு வந்த இவர் 'வித்யா ஸ்ரீ' என்னும் க்ரந்தத்தை இயற்றிவர். இஷ்டஸித்தி, நைஷ்கர்ம்ய ஸித்தி இவைகளுக்கு வியாக்யானம் எழுதிய மஹா

மஹோபாத்யாய ஞானோத்தமமிச்ரர் என்பவர் இவரல்ல. அவர் வேறொருவர். சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ ஞானோத்தம சிவாசார்யாருடைய காலத்திலிருந்து சுமார் 150 வருஷங்களுக்குப் பின் கொள்ளிட (உத்தர காவேரி)க் கரையிலுள்ள மங்களமென்னும் கிராமத்தில் வஸித்த கிருஹஸ்தர் அவர். வெவ்வேறு காலத்தில் இருந்துவந்த இருவரையும் ஞானோத்தமர் என்ற பெயர் ஸமானமாக இருப்பதைக் கொண்டு சிலர் இருவரையும் ஒருவராகக் கருதுகிறார்கள். இந்தக்கொள்கை ஏற்றுக்கொள்ளத்தக்கதல்ல.

பக்கம் 26 ஸ்ரீ வித்யாதீர்த்தர் :— இவர் மத்வாசார்யாருடன் சாஸ்திரங்களில் வாதம் செய்தார்.

பக்கம் 26 ஏகசிலாநகரம் :— இதைத்தான் இப்பொழுது "வாரங்கல்" என்று கூறுகிறார்கள்.

ஸ்ரீ வித்யாதீர்த்த ஸ்வாமிகளிடமிருந்து ஸந்யாஸ ஆச்ரமத்தையும் மஹா வாக்யோபதேசத்தையும் பெற்றுக் கொண்ட ஸ்ரீ பாரதீ தீர்த்தரும் ஸ்ரீவித்யாரண்யரும் ஸந்யாஸ ஸ்வீகாரத்திற்கு முன் சிறுவர்களாயும் ப்ரஹ்மசாரிகளாகவும் இருந்தார்களே தவிற இவர்கள் கிருஹஸ்தர்களல்ல என்பது நன்கு கவனத்துக்குரியது.

# ஐந்தாவது ஸர்க்கம்

ஸ்ரீ வித்யாரண்யர் காசியில் இருக்கும்பொழுது ஒருநாள் வியாஸரைக் கண்டுவிட்டார். பதரீவனத்திலிருந்து நான்கு வேதங்களாகிற நாய்கள் சூழ ஸ்ரீ விசுவநாதரின் கோவிலுக்கு போய்க்கொண்டிருந்தவரை வித்யாரண்யர் கண்டு வியாஸர் எனத்தீர்மானித்து அவர் பாதங்களில் வணங்கி பாதங்களை பிடித்துகொண்டார். "என்னைத் தொடாதே" என்று மாறு வேடம் பூண்ட வ்யாஸர் தடைசெய்தும் "நீங்கள் வ்யாஸ பகவான் என்று எனக்கு நன்ருய் தெரியும் உங்களை நான் சரணமடைந்திருக்கிறேன்" என்று வித்யாரண்யர் சொன்னுர். "என்னுடைய ரூபத்தை உனக்கு யார் சொல்லிக்கொடுத் தார்கள்" என்று ஸ்ரீ வ்யாஸர் கேட்க பிரும்மரக்ஷஸால் தான் தெரிந்துகொண்ட விவரங்களை ஸ்ரீ வித்யாரண்யர் சொன்னுர். "நீங்கள் இருவரும் சீக்கிரம் பதரீவனம் வந்து சேருங்கள்" என்று சொல்லி ஸ்ரீ வ்யாஸ பகவான் உடனே மறைந்து விட்டார்.

இருவரும் பதரீவனம்போய் சேர்ந்து ஜடைகளுடன் விளங்கிவரும் ஸ்ரீ வ்யாஸ பகவானை தரிசித்தார்கள். வித்யாரண்யர் ஸ்ரீ வ்யாஸரைப் பார்த்து "பிரும்மாவிடமிருந்து வந்த வேதத்தை உலகுக்கு தாங்கள் பிரித்துக்கொடுத்தீர்கள். மோக்ஷமார்க்கத்தை நன்கு எடுத்துக்காட்டும் பிரஹ்மஸூத்ர மென்னும் வேதாந்த சாஸ்திரத்தை தாங்கள் இயற்றி இருக் கிறீர்கள். பதஞ்ஜலி மகரிஷி இயற்றிய யோகசூத்ரத்துக்கு நீங்கள் செய்திருக்கும் உரையைப்போல வேறு யார் செய்ய முடியும்? பல ஜன்மாக்களில் செய்த புண்யவசத்தால் தங்களின் தரிசனம் எனக்கு கிடைத்தது. நீங்கள் உலகத்தை ரக்ஷிக்கவே உருவம்கொண்ட ஸ்ரீமத் நாராயணனே" என்று ஸ்தோத்தரித்தார்.

இதுகேட்ட வ்யாஸ பகவான் "நீங்கள் யார்? எதற்காக இங்கு வந்திருக்கிறீர்கள். என்னுல் உங்களுக்காகவேண்டிய காரியம் என்ன" என்று கேட்டார். வித்யாரண்யர் "நான் ஏகசிலாநகரவாசி. இரு ஸஹோதரர்களில் நான் ஜ்யேஷ்டன். சிஷ்ட வைதிக குடும்பத்தில் பிறந்தவன். என் ஸஹோதரன் சிருங்கேரியில் ஸ்ரீவித்யாதீர்த்த ஸ்வாமியிடம் சந்நியாஸம் பெற்ருன். அவனைக்காணுமல் நான் மனம் வருந்தி வாகீசுவரி

மந்திரத்தைத் ஜபித்தேன். ஸ்ரீ வல்லப கணபதியை உபாசித்தேன். பலன் கிடைக்கவில்லை. ஸாஹஸமான காரியத்தைச் செய்ய எண்ணினேன். உடனே ஒரு ஸ்திரீ என் முன் தோன்றி "அப்பா, ஸாஹஸ காரியம் செய்யாதே. நீ செய்த ஜபத்தால் நாசமடைந்தும் நாசமடைகின்றதுமான பாப மலைகள் அதோ காண்கின்றன பார். நன்மைகளை யடைவதற்காக மேலும் தபஸ் செய்" என்று சொல்லி அந்த ஸ்திரீ மறைந்தாள்.

ஸகோதரனின் பிரிவைத் தாங்காமல் நான் மனம் நொந்து என் மாதா பிதாக்களிடம் விடைபெற்றுத் தம்பியை தேடலானேன். அவன் சிருங்கேரியில் சந்நியாசியாக இருக்கக் கண்டேன். நானும் சந்நியாசியானேன். நான் எழுதியிருக்கும் வேத பாஷ்யங்களை முழுவதும் தாங்கள் பார்த்துப் பரிசோதித்துத் தரவேண்டும். இதற்காகவே குருவின் அனுமதி பெற்றுத் தங்களைத் தேடி வந்திருக்கிறேன் சிருங்கியின் வார்த்தைகளால் இங்கு தங்களைத் தர்சிக்கும் படியான பாக்யமும் கிடைத்துவிட்டது" என்றூர். இதுகேட்டு ஸ்ரீ வ்யாஸ பகவான் "இவனுக்கு அதிகமான பிரயோஜனத்தைக் கொடுக்க எனக்கு எண்ணமிருக்க இவன் அல்பத்தைக் கேட்கிருனே என்னுடைய உபதேசங்களைப் பெறுவதற்கு இவனே யோக்கியதை உடையவன். புண்ய வசத்தால் என்னையும் தரிசித்தான். இவன் சீக்கிரம் ஸர்வஜ்ஞனுக்கும் வழியை இவனுக்குக் காட்டிவிடுகிறேன்" என்று மனதில் தீர்மானித்து வித்யாரண்யருக்கு ஸ்ரீவித்யாமந்த்ர, தந்த்ர ரகஸியங்களை நன்கு உபதேசித்து "இந்த தேவதா உபாஸனத்தால் பிருச்னி முனிவர்கள் ஸிம்ஹாஸனம் பெற்று தேவேந்திரனுக்குத் தந்தனர். நீயும் உபாஸனையால் அப்படியே செய்து பிரும்மரக்ஷஸ்ஸுக்கும் அன்னம் கொடுத்து வேண்டிய மனோபீஷ்டங்களை மேலும் மேலும் அடைவாயாக" என்று சொல்லி அனுக்ரஹம் செய்து வ்யாஸர் மறைந்தார்.

உடனே வித்யாரண்யரும் சருங்கி என்ற பிரம்ம ரக்ஷஸ்ஸுடன் புறப்பட்டு மதங்க பர்வதத்திற்குப் போனூர். வழியில் விருபாக்ஷேச்வரரை வணங்கி ஸ்தோத்தரித்தார். பின் வித்யாரண்யரைப் பார்த்து சருங்கி 16 முக்ய க்ஷேத்ரங்களில் ஒன்றுன மதங்க பர்வதத்தில் இரண்டு யோஜனை விஸ்தாரமுள்ள விஜயநகரம் முன் காலத்தில் மிகவும் செழிப்

பாக இருந்தது. கால தோஷத்தால் அது அழிந்துவிட்டது. அதை மறுபடியும் ஸ்தாபித்து அங்கேயே எனக்கும் அன்னம் கொடுத்துக் காப்பாற்றவேண்டும்" என்று சொல்ல இருவரும் அந்த பர்வதத்திற்குச் சென்றார்கள்.

அங்கு மாதவர், ஸாயணர் என்ற இரு மந்திரிகள் வந்தார்கள். வந்தவர்கள் வித்யாரண்யரை வணங்கி விநயத்துடன் "எங்களுக்கு ஸந்ததி ஏற்பட அருள் செய்யவேணும்" என்று பிரார்த்திக்க ஸ்ரீ வித்யாரண்யர் "உங்கள் இருவருக்கும் இப்பிறவியில் ஸந்ததி ஏற்படாது" என்றார். இதைக்கேட்ட ஸாயணரும் மாதவரும் "எங்களுக்கு ஏராளமான தனமிருக்கிறது. அதை அனுபவிக்க புத்திரனை அடையும்படி அனுக்ரகம் செய்யவேணும்" என்றார்கள். அவர்களின் பிரார்த்தனைக்கு இணங்கி வித்யாரண்யர் தான் செய்திருக்கும் வேதபாஷ்யம், தாதுவிருத்தி, நியாயமாலா முதலான க்ரந்தங்களுக்கு ஸாயணீயம் மாதவீயம் என்று பெயர் கொடுத்துஅவைகளையே அவர்களுடைய ஸந்ததிகளாகச்செய்து அவர்களை திருப்தி அடையும்படி செய்தார்.

யது வம்சத்தில் ஸங்கமன் என்ற ஒரு அரசன் இருந்தான். இவன் குணத்திலும் கீர்த்தியிலும் சிறந்தவன். இவனுக்கு ஐந்து குமாரர்கள் உண்டு. அவர்களுக்கு 1. ஹரிஹரன், 2. புக்கன், 3. கம்பன், 4. மாரப்பன், 5. முத்தப்பன் எனப் பெயர். ஹரிஹரன், புக்கன் இருவரும் யுதிஷ்டிரர், அர்ச்சுனன் போல் தர்மசீலர்கள், சூரர்கள். எப்போதும் நியாயத்துக்கு மாறாக நடக்காதவர்கள். வீரருத்ரன் என்ற ஒரு மன்னன் மிகுந்த தர்மிஷ்டனாகவும் எல்லோராலும் புகழப்பட்டவனாகவும் இருந்தான். ஹரிஹரன், புக்கன் இருவர்களுக்கும் பூமி அதிகம் இல்லாததால் வீ ர ரு த் ர னி ன் பொக்கிஷ இலாகாவில் பரிபாலகர்களாக இருந்து சேவை செய்தார்கள். துரதிருஷ்ட வசத்தால் வீரருத்ரந்ருபதிக்கு தில்லி சக்ரவர்த்தியிடம் தோல்வி ஏற்பட்ட பிறகு ஹரிஹரன் புக்கன் இருவரும் ஏகசிலா நகராதிபதியான ராமனுதரிடம் வேலைக்கு அமர்ந்தார்கள்.

தில்லி சக்ரவர்த்தி ராமனுதரை யுத்தத்தில் ஜயித்துவிட்டான். அவனுடைய வீரர்கள் ஹரிஹரன், புக்கன் இருவர்களையும் பிடித்து கைதியாக்கி அச்வபதியான தில்லி அரசனின்

அரண்மனை வாசலில் நடு இரவில் வைத்தார்கள். ஆனால் இவ்விருவர்களும் திருட்டுத்தனமாக தப்பித்துக்கொள்ள பிரயத்தனம் செய்யவில்லை. இவர்களின் ஸத்ய புத்தியையும் உத்தம ஸ்வபாவத்தையும் கண்டு மெச்சி சக்ரவர்த்தி இவர்களுக்கு தக்ஷிணதேசத்தில் ராஜ்யத்தையும் ஸைன்யத்தையும் கொடுத்தான். ஹரிஹரரும், புக்கரும் அநேகம் யுத்த வீரர்களுடன் கிருஷ்ண நதியைத்தாண்டி வந்தார்கள். துரதிருஷ்ட வசத்தால் வல்லாள மகாராஜாவால் யுத்தத்தில் ஜயிக்கப்பட்டு ஒருவருமறியாமல் பெரிய காட்டிற்குச்சென்று தனியான இடத்தில் சிரமபரிகாரம் செய்துகொண்டு தம்பியான புக்கனின் மடியில் தலையை வைத்துத் தூங்கும்பொழுது ஹரிஹரன் ஸ்வப்னத்தில் ரேவண ஸித்தரைக் கண்டான்.

---

## 5-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

பக்கம் 32. :— ஹயக்ரீவர் அகஸ்த்யருக்கு உபதேசித்தது போல் வேதவியாஸர் வித்யாரண்யருக்கு ஸ்ரீ வித்யாரஹஸ்யங்களையும் தேவீ மந்திர தந்திரங்களையும் உபதேசித்தார்.

பக்கம் 33 :— ஸாயணர், மாதவர் என்று பெயருள்ள இரு மந்திரிகள் தங்களுக்கு ஸந்ததி ஏற்படுவதற்காக வித்யாரண்யரை பிரார்த்தித்தார்கள் என்று கூறப்பட்டிருப்பதால் வித்யாரண்யர் மாதவர் அல்ல, வித்யாரண்யர் வேறு, மாதவர் வேறு என்பது ஸ்ப்ஷ்டமாகத்தெரிகிறது.

பக்கம் 33 :—வித்யாரண்யர் தாம் எழுதிய வேதபாஷ்யம், தாதுவிருத்தி, ந்யாயமாலா முதலான கிரந்தங்களையே ஸந்தானமாக ஸாயண மாதவர்களுக்குக்கொடுத்தார். உத்யானவனம், நிதி, தடாகம், கிரந்தம், தேவாலயம், பிள்ளை, பிராஹ்மண குடும்ப ப்ரதிஷ்டை என்ற ஏழு வகையான ஸந்தானங்களில் ஒன்றான கிரந்தம் என்ற ஸந்தானம் கிடைத்துவிட்டபடியால் அவ்விருவர்களும் ஸந்தோஷம் அடைந்து தங்கள் அபீஷ்டம் நிறைவேறியவர்களாய் இந்த கிரந்தங்களை பிரசாரம் செய்தார்கள். இதனால் தான் வித்யாரண்யர் இயற்றியபோதிலும் ஸாயணீயம், மாதவீயம் என்றே இந்நூல்கள் பிரசித்தியடைந்துவிட்டன.

பக்கம் 33 வீரருத்ரந்ருபதி :— இவர் காகதீய வம்சத்தைச் சேர்ந்த இரண்டாவது ப்ரதாபருத்ரதேவர். ஹரிஹரரும் புக்கரும் இந்த மஹாராஜரின் உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து அரசாக்ஷியில் உதவி செய்தார்கள். A. D. 1323ல் முகமதியர்களுடன் நடந்த சண்டையில் இவர் தோல்வியடைந்தார்.

பக்கம் 33 :— இங்கு கூறப்பட்ட ராமநாதர் சரித்ரப்ரஸித்தரான கம்பிலி ராமநாதராகத்தான் இருக்கவேண்டும். 1327ல் நடந்த கம்பிலிநகரப் படையெடுப்பில் ஹரிஹர புக்கர்களை சிறைப்படுத்தி எதிரிப் படை வீரர்கள் தில்லி சக்ரவர்த்தியிடம் அழைத்துச் சென்றார்கள்.

பக்கம் 34 :— போசல (ஹோய்ஸால) வம்சத்தைச் சேர்ந்த மூன்றாவது வல்லாளனோடு நடந்த முதற் சண்டையில் ஹரிஹர புக்கர்கள் தோல்வியடைந்தனர்.

பக்கம் 34 :— ரேணுகாசார்யர் என்ற ரேவணஸித்தர் வீர சைவர்களின் ஐந்து ஆசார்யர்களில் ஒருவர். இவர் பஸவரின் (1125–1165 A. D.) ஸமகாலத்தவராகவோ அல்லது அவருடைய காலத்துக்கு சற்று முன்பாகவோ, பின்பாகவோ இருக்கலாம்.

---



# ஆருவது ஸர்க்கம்

நடுக்காட்டில் ஹரிஹரன் நித்ரை செய்யும்பொழுது அவன் ஸ்வப்னத்தில் ரேவண ஸித்தர் தோன்றி இவ்வாறு உபதேசித்தார்:—

"ஸ்ரீவித்யாரண்யரைச் சரணமடைந்து ஸ்ரீ சந்த்ர மௌளீசுவரரை தரிசனம் செய்து உன்னுடைய ராஜ்யத்தை மறுபடி பெறுவதற்கு யத்தனம் செய்தால் அனுகூலம் பெறுவாய் நீ ராஜ்யத்தை ஸ்தாபித்த பின்பு உன்னிலிருந்து 33 தலை முறையாக 33 அரசர்கள் அந்த நகரில் அரசு புரிவார்கள்" என்று. உடனே விழித்தெழுந்து ஹரிஹரன் தன் ஸ்வப்னத்தை தன் சகோதரனை புக்கனிடம் தெரிவிக்க இருவர்களும் ஸ்ரீ வித்யாரண்யரை சரணம் அடைந்து அவருடைய அனுக்கிரகத்தைப்பெற்று வல்லபூபாலனை யுத்தத்தில் ஜயித்து ஸ்வர்ண சிம்ஹாஸனத்துடன் கூடிய ராஜ்யத்தை மீண்டும் பெற்று ஹரிஹரன், புக்கர் இரு மன்னர்களும் சுகமாக பரிபாலனம் செய்துவந்தார்கள்.

ஒரு சமயம் துங்கபத்திரா நதிக்கரையில் உள்ள ஹஸ்தி கோணம் (அனேகுந்தி) என்ற நகரத்துக்கு சமீபத்தில் ஹரிஹரனும், புக்கனும் வேட்டையாடச் சென்றபோது அங்கு இருந்த ஒரு முயல் தன்சக்தியினுல் வேட்டைக்குவந்த நாய்களை விரட்டிவிட்டன. இது மிக்க ஆச்சரியகரமான விஷயம் என்று எண்ணி அந்த அரசர்கள் இந்த விசேஷத்தை ஸ்ரீ வித்யா ரண்யரிடம் தெரிவித்தார்கள். உடனே ஸ்ரீ வித்யாரண்யர் "அப்படியானுல் நாயை முயல் துரத்திய இடத்தில் ஏதோ விசேஷ சக்தி இருக்கவேண்டும் என்று சொல்லி தானே அந்த ஸ்தலத்துக்குச் சென்று அந்த இடத்தை ஹரிஹர, புக்க மன்னர்களுக்கு ராஜதானியாக ஏற்படுத்திக்கொள்ளும்படி சொல்லி அந்த இடத்தில் சாலிவாஹன சகாப்தம் 1258 தாது வருஷம் வைகாசி மாதம், சுக்லபக்ஷம், ஸப்தமி மகா நக்ஷத்திரம் கூடிய ஞாயிற்றுக்கிழமை தினம் விஜயநகரம் என்ற ராஜதானியை நிர்மாணம் செய்துவைத்தார்.

இந்நகரம் ஸ்ரீ சக்ரம் போன்ற உருவங்கொண்டு ஒன்பது கோட்டை வாசல்களுடனும் ஆகாயமளாவும் பெரிய கட்டிடங்கள், ஸ்ரீ விருபாக்ஷரின் தேவாலயம், தனிகர்கள்

கொண்ட கடைவீதிகள், யாகசாலைகளில் யாகங்களை நடத்தும் பிராம்மணர்கள், சந்தோஷத்துடன் வசிக்கும் நகரவாசிகள் இவர்களுடன் கூடியதாக விளங்கிற்று. இது ஸ்ரீ வித்யாரண்யரின் விசேஷ அனுக்கிரகத்தால்தான் ஏற்பட்டது என்று எல்லோரும் புகழ்ந்தார்கள்.

உடனே விசேஷமான ஏற்பாடுகளுடன் ஹரிஹரனுக்கு ஸ்ரீ வித்யாரண்யஸ்வாமி விஜயநகரத்தில் பட்டாபிஷேகத்தை நடத்திவைத்தார். சுற்றிலுமுள்ள அரசர்களை ஹரிஹர ராஜனுக்கு வணங்கும்படி செய்து, அவரை சக்ரவர்த்தியாக்கி, ஸ்ரீ வித்யாரண்யர் அனுகிரகித்தார். சக்ரவர்த்தி பட்டாபிஷேக சமயத்தில் ஸ்ரீ வித்யாரண்யர் ஹரிஹர மகாராஜாவை பூர்ணமாக ஆசீர்வதித்தார். அப்போது ஹரிஹரராஜா சத்ரம், சாமரம் முதலிய எல்லா ராஜ சின்னங்களையும் பிருதுகளையும் ஸ்ரீ வித்யாரண்யரிடம் காணிக்கையாக, சமர்ப்பித்தார். ஸ்ரீ வித்யாரண்யர் தன் தபஸ் சக்தியினால் விஜயநகரத்தில் ஸுவர்ண மழை பொழியச்செய்து எல்லோரையும் தனிகர்களாகச் செய்தார். சிருங்கிக்கும் தனியாக நிவாஸஸ்தானம் ஏற்படுத்தி அங்கு விசேஷ பூஜைகள் நடக்கும்படி ஏற்பாடு செய்தார்.

இப்படி ஹரிஹர மஹாராஜாவை சிம்ஹாஸனத்தில் அமர்த்திவிட்டு "உனக்கு எப்போதும் க்ஷேமத்தைக் கொடுக்கக் கூடியவர் என் குருநாதர் ஸ்ரீ வித்யாதீர்த்தர். ஆகையால் உன் ராஜ்யத்தின் க்ஷேமத்தைக் கருதி சிருங்கேரி சென்று அவருடைய அனுக்கிரஹத்தைப் பெறுவாய்" என்று சொல்லிவிட்டு ஸ்ரீ வித்யாரண்யர் உத்தர தேசத்துக்கு தீர்த்த யாத்திரை சென்றார். தீர்த்த யாத்திரைக்கு புறப்பட்டவுடன் சமீபத்தில் ஓர் இடத்தில் மகாமாரி என்ற துர்க்கையின் உக்கிர சக்தியைத் தணிக்கவேண்டி அதற்குத் தகுந்த திக்பந்தனத்தைச் செய்துவிட்டு கேதாரநாத் போய்ச் சேர்ந்தார். அங்கு கொஞ்ச காலம் தங்கி தவம் செய்த பின்னர், ஸ்ரீ வித்யாரண்யர் காசிக்கு வந்துசேர்ந்தார். அப்போது டில்லியில் ஆட்சி புரிந்த அசுவபதி மகாராஜாவின் குமாரன் ஊமையாக இருந்தவனை பேசும்படி செய்ததற்காக அந்த அசுவபதி மகாராஜா பல சொத்துக்களை காணிக்கையாக சமர்ப்பித்தான். வைராக்கியத்தின் காரணமாகத் தனக்கு அவை ஏதும் தேவை இல்லை என்று ஸ்ரீ வித்யாரண்யர் சொல்லி

விட்டு காசியில் கங்கைக்கரையில் மடங்கள் கட்டுவதற்கு வேண்டிய பூமியை மட்டும் பெற்றுக்கொண்டு அங்கு இரண்டு மடங்களைக் கட்டி சில காலம் அங்கு தங்கி வந்தார்.

ஹரிஹர மஹாராஜாவிடம் ஸ்ரீ வித்யாரண்யர் பட்டாபிஷேக காலத்தில் சொன்ன உபதேசத்தை ஞாபகம் வைத்துக்கொண்டு அந்த மன்னன் தன் மருமகன் பல்லபட நாயகனுடன் தனது தம்பி மாரப்பனை சிருங்ககிரிக்கு அனுப்பி அவர்கள் மூலம் விருத்திகளையும் ஸத்காரங்களையும் ஸ்ரீ வித்யா தீர்த்த ஸந்நிதியில் சமர்ப்பித்து சிருங்கேரி குருபரம்பரையின் தொடர்பை நன்கு அமைத்துக்கொண்டான். ஹரிஹர மகாராஜர் காலமானதும் அவன் சகோதரன் புக்க மஹாராஜா பட்டத்துக்கு வந்தான். அவன் கொடிய வியாதியால் பீடிக்கப்பட்டு அதை எந்த வைத்தியராலேயும் தீர்க்க முடியாமல்போக, புக்க மகாராஜா "வித்யாதீர்த்தரிடம்போய் ஸ்வஸ்த்தமடைவாய்" என்று ஸ்வப்னத்தில் சொல்லக்கேட்டு மந்திரிகளுடன் ஆலோசித்து சிருங்கேரிக்குச் சென்று ஊருக்கு வெகு தூரத்தில் தன் சைன்யத்தை நிறுத்திவிட்டு ஸ்ரீ வித்யா தீர்த்தரின் (லிங்கரூப) ஸந்நிதியடைந்து பூஜித்து ஸ்தோத்தரித்தான். அவனுடைய ஸகல ரோகமும் நிவர்த்தியாயிற்று. உடனே ஸ்ரீ வித்யாதீர்த்தரின் பூஜா ஸேவைக்காக மகாராஜா சில வ்ருத்திகளை (பூதானம்) ஏற்படுத்தினான். அங்கு ஸ்ரீவித்யாதீர்த்தரின் சிஷ்யரான ஸ்ரீ பாரதீ கிருஷ்ண தீர்த்தரிடம் ஆசிகளைப்பெற்று ரோகமற்றவராக விஜயநகரம் வந்துசேர்ந்தார்.

இங்கு மேலே சொன்ன ஸ்ரீ வித்யாதீர்த்தரின் மஹிமை அளவிடமுடியாதது இவர் சமஸ்தமான மட நிர்வாகத்தை தன் சிஷ்யரான பாரதீகிருஷ்ண தீர்த்தரிடம் ஒப்பிவித்து விட்டுத் தான் லம்பிகா யோகத்தில் ஈடுபட்டார். துங்காநதிக் கரையில் ஸ்ரீ சாரதா தேவியின் கோவிலுக்கு அருகாமையில் அமர்ந்து மனதில் சிவலிங்க ஸ்வரூபத்தை தியானித்துக் கொண்டு தானும் அந்த ரூபத்தில் மாறவேண்டும் என்ற எண்ணத்துடன் யோகத்தில் ஈடுபட்டார்.

எவ்விதமான சிவலிங்காகாரம் தனக்கு ஏற்படவேணும் என்பதற்கு ஸிம்ஹகிரியில் பல ஸகுண மூர்த்திகளுடன் கூடிய ஒரு லிங்கத்தைச் சில்பிகளைக் கொண்டு ஏற்படுத்தினர் என்று

தெரிகிறது. சில தினங்கள் கழிந்தபின்பு சமாதியில் விக்னம் ஏற்பட்டதில் சிஷ்யரான ஸ்ரீ பாரதீகிருஷ்ண தீர்த்தரின் ஸ்வப்னத்தில் ஸ்ரீ வித்யா தீர்த்தர் தோன்றி "உலக க்ஷேமத்தின் பொருட்டு நான் உள்ளிருக்கும் இடத்துக்குமேலே பூஜைக்கு யோக்யமான சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்வாயாக" என்றார். இந்த விவரத்தைத் தன் ஸ்ரீமுகத்துடன் ஸ்ரீ பாரதீகிருஷ்ண தீர்த்தர் புக்க மகாராஜனுக்குத் தெரிவித்தார். இதுகண்ட புக்க மகாராஜா தன் மந்திரியாகிய மாதவரிடம் ஏராளமான தனத்தைக் கொடுத்து ஸ்ரீ பாரதீ கிருஷ்ண தீர்த்தரிடம் அனுப்ப அதைப்பெற்று அந்த குருவும் சந்தோஷம் அடைந்தார். சைவ, ஆகம சாஸ்திரங்களின் விசேஷ ஞானம் பெற்ற ஸ்ரீ பாரதீ கிருஷ்ண தீர்த்தர் சிறந்த ஸ்தபதிகளை வரவழைத்து ஸ்ரீ வித்யாசங்கரரின் கோவிலை (ஸமாதியை) சிறந்த முறையில் கட்டினார்.

---

## 6-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

பக்கம் 36 :—"ஸ்ரீவித்யாரண்ய முனிவரின் அனுக்ரஹத்தால் ராஜஸிம்ஹாஸனத்தில் அமர்ந்து சக்ரவர்த்தி பதவியை அடைவாய். உன் நன்மைக்காக ஸ்ரீ சந்திரமௌளீசுவர லிங்கத்தை தர்சனம் செய்" என்று ரேவண ஸித்தர் ஹரிஹரனுடைய ஸ்வப்னத்தில் வந்து அருள் புரிந்தார். இவர் கூறிய லிங்கம் சிருங்கேரி மடத்திலிருக்கிறது. இதனால் சிருங்கேரி மடத்து சிஷ்யனாக ஹரிஹரன் இருக்கவேண்டுமென்பதுதான் ரேவண ஸித்தரின் எண்ணமென்று தெரிகிறது. மேலும் 'ஹரிஹரன் முதல் 83 அரசர்கள் பூமியையாள்வார்கள் இவர்களில் வீரவஸந்தன் என்பவன் மிகவும் சிறப்புடன் விளங்குவான்' என்று ஸித்தர் கூறுகிறார். லிங்காயத கிரந்தங்களில் 'வசனம்' என்று ஒரு பிரிவு உள்ளது. இதிலும் 'வீர வஸந்தன் ஆட்சி புரிவான்' என்று கூறப்பட்டிருக்கிறது.

பக்கம் 36 :— மூன்றுவது வல்லாளனோடு நடந்த இரண்டாவது சண்டையில் ஹரிஹரன் வல்லாளனை ஜயித்தான்

பக்கம் 36 :— சகம் 1258 தாத்ரு வருஷம் வைசாக சுக்ல ஸப்தமி மகா நக்ஷத்ரம் ஞாயிற்றுக்கிழமை அதாவது கி. பி. 1336ம் வருஷம் ஏப்ரல்-மீ 18உ விஜயநகரம் புதிதாக நிர்மாணம் செய்யப்பட்டது.

பக்கம் 37 :—ஹரிஹர மஹாராஜன் தனது ராஜசிஹ்நங்கள் எல்லாவற்றையும் ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகளிடம் ஸமர்ப்பித்தான். இதனுல்தான் வித்யாரண்யர் முதல் சிருங்கேரி ஸ்ரீசாரதாபீடத்தில் விளங்கி வருகின்ற ஸ்ரீ ஜகத்குருக்கள் எல்லோருக்கும் "கர்ணுடக ஸிம்ஹாஸந ப்ரதிஷ்டாபநாசார்யர்கள்" (கர்ணுடக ஸாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தவர்கள்) இது முதலான அநேகம் பிருதங்கள் காணப்படுகின்றன.

பக்கம் 37 :— ஸ்ரீ வித்யாரண்யர் ஹரிஹர மஹாராஜனுக்கு பட்டாபிஷேகத்தை நடத்தி வைத்துவிட்டு அவனுக்கு நல் உரைகளையும் கூறிவிட்டு தீர்த்த யாத்ரையாக காசி, கேதாரம் முதலான க்ஷேத்ரங்களுக்குச் சென்ருர் என்று கூறப்பட்டு உள்ளது. 'வித்யாரண்யர் மந்திரிபதவியில் அமர்ந்து அரசனது உத்தரவைப் பரிபாலித்து வந்தார்' என்று சிலர் கூறுவது இந்நூலின் கருத்துக்கு விருத்தமாகவும் நம்பத் தகாததாகவும் இருப்பதால் அறிவாளிகள் ஒப்புக்கொள்ளத் தக்கதல்ல. வித்யாரண்யரைத் தனது குருவாகவும் தேவதைக்கு ஸமமாகவும் போற்றும் ஹரிஹர மஹாராஜன் தனது உத்தரவை நிறைவேற்றும் பொருப்புள்ள மந்திரி பதவியில் எப்படி அவரை அமர்த்துவான்?

பக்கம் 38 :— வித்யாரண்யர் காசியில் இரண்டு மடங்களைக் கட்டுவித்தார் என்று இங்கு கூறப்பட்டிருக்கிறது. இப்பொழுதும் காசி கேதார கட்டத்தில் இருந்து வருகின்ற சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சாரதாபீடத்தைச் சேர்ந்த ஸ்ரீமடம் மேலே கூறியவற்றுக்கு அத்தாக்ஷியாக விளங்குகின்றது.

பக்கம் 39 :— புக்கராஜனின் மந்திரியான மாதவாமாத்யன் மேற்கு மண்டலாதிபதியாகவும் இருந்தான். இவன் ஆங்கிரஸ கோத்ரத்தைச்சேர்ந்த சாவுண்டர்-மச்சாம்பிகை என்னும் தம்பதிகளுக்குப் பிறந்தவன். ஸாயணரின் ஸஹோதரன் மாதவன் இந்த மாதவரல்ல. அவர் வேறு. மாதவர், ஸாயணர், போகநாதர் என்ற மூவரும் பாரத்வாஜ கோத்ரத்தைச் சேர்ந்த மாயணர் ஸ்ரீமதி என்னும் தம்பதிகளின் தனயர்கள்.

# ஏழாவது ஸர்க்கம்

## ஸ்ரீ வித்யாசங்கர தேவாலய நிர்மாணம்

ஸ்ரீ வித்யாதீர்த்தரின் உத்திரவுப்படி ஆலயம் நிர்மாணிக்க ஸ்ரீ பாரதீகிருஷ்ணதீர்த்தர் ஜக்கணன் என்ற சிறந்த சில்பியை வரவழைத்து ஆலயத்தை சீக்கிரம் கட்டி முடிக்கும்படி சொன்னார். தன்னுடைய சில்பத்திறமையை காட்டுவதுடன் விசேஷமாக புது அம்சங்களை இங்கு கற்றுக்கொள்ளவும் ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததாகவே எண்ணி அந்த சில்பி சந்தோஷமடைந்தான். இதற்குத் தான் அனேக குடும்பங்களை இங்கு வரவழைத்து வேலையாட்களாக நியமிக்கவேண்டி இருப்பதால் அதிக பணம் செலவாகும் என்றான். அதற்கு ஸ்ரீபாரதீகிருஷ்ண தீர்த்தர் எவ்வளவு வேண்டுமானாலும் பணம் கொடுக்கப்படும் என்றார். உடனே சில்பி ஸ்ரீ ஸ்வாமிகளைப்பார்த்து "அப்படியானால் சீக்கிரம் நதிக்கரைக்குச் செல்வோம். பணத்தை எடுத்துக்கொண்டு வாருங்கள். சகுனத்தை கவனிப்போம்" என்றான். நதிக்கரைக்குச் சென்றதும் "ஒரு கைநிறைய பணத்தை எடுத்து நதியில் போட்டு பிரார்த்திக்கவேண்டும்" என்று சில்பி சொல்லவே ஸ்ரீ பாரதீகிருஷ்ண தீர்த்தர் ஐந்து தடவை அவ்விதமே தனத்தை வாரி நதியில் இறைத்தார். சில்பி தைரியமாக கட்டட வேலையை ஆரம்பித்தான்.

பிரதி தினமும் கொடுக்கப்பட வேண்டிய பணத்தை வேலைக்காரர்களுக்கு கொடுத்து வரும்படியும் அதை கணக்கு எழுதவும் தேவை இல்லை என்றும் சொல்லி வேலை செய்பவர்களுக்கு உணவு, தங்கும் வசதி முதலிய எல்லா தேவைகளையும் அவர்களின் இஷ்டப்படி கொடுக்கும்படியும் ஸ்ரீபாரதீ கிருஷ்ண தீர்த்தர் ஆக்ஞாபித்தார். சில்பியின் ஸாமர்த்தியத்தினால் விமானத்தில் படிப்படியாக, கந்தர்வர்கள், குதிரைகள், யானைகள், சிங்கங்கள், மனிதர்கள், ரிஷிகள், ராக்ஷஸர்கள், விசுவாவசு முதலிய மகான்கள் இவர்களின் உருவங்கள் அடுக்கடுக்காக அமையப்பெற்றன.

ஸ்ரீ வித்யாதீர்த்தர் ஷண்மத ஸ்தாபனம் செய்தவராதலால் இதைக்குறிப்பிட இங்கு ஆறு வாசல்கள் கட்டப்பட்டன. வாசலின் இருபுரமும் உயரே ஸ்ரீ விநாயகர் ஸ்ரீ ஸரஸ்வதி இவர்களுடைய மத்தியில் கஜலக்ஷ்மி இவ்வாறு அமைக்கப்

பட்டது. பிரதக்ஷிணம் செய்து வந்தால் இந்த கோபுரத்தில் சூரியன் முதலிய ஒன்பது கிரஹங்களையும், யமன், சித்ரகுப்தன் முதலியவர்களின் மூர்த்திகளையும் காணலாம். தவிற ஸ்ரீலக்ஷ்மீ நிருசிம்மன், தக்ஷிணாமூர்த்தி, உமாமஹேசுவரர், ஸ்ரீ காயத்ரீ தேவி, லோக பாலகர்கள், அசுரர்களை அழிப்பதற்காக தோன்றிய மத்ஸ்யாதி தசாவ்தார மூர்த்திகள், மார்க்கண்டேயரால் ஆலிங்கனம் செய்யப்பட்ட ம்ருத்யுஞ்ஜய மூர்த்தி, ஸ்ரீ சுப்ரமணிய உபாஸகர்களுக்குத் தேவையான ஷண்முகரின் பல திவ்விய உருவங்கள், பவானீ சங்கரர், அர்த்த நாரீசுவரர், திரிபுர ஸம்ஹாரமூர்த்தி, சிதம்பரமூர்த்தி, ஹயக்ரீவர், அகஸ்தியர் அன்னபூரணி, ஸ்ரீ வாக்தேவி சாரதா தேவி, ஸ்ரீ புவனேசுவரீ (இருபக்கமும் யானைகளால் அபிஷேகம் செய்யப்படும் நிலையுடன்) ஸ்ரீ கணபதி, ஸித்தர்கள், வித்யாதரர்கள் இவர்களின் கூட்டங்கள், இப்படி பரிவாரங்களுடன் கூடின பற்பல தேவதைகளின் உருவங்களை அந்த விமான வரிசைகளில் சில்பி அழகாக அமைத்தார். ஆறுவாசல்களுக்கும் பன்னிரண்டு துவாரபாலகர்களை அமைத்தார். இப்படி ஸ்ரீ வித்யாதீர்த்தரின் ஆலயம் உன்னதமான கோபுரத்துடன் மேரு பர்வதம்போல் விளங்கிற்று.

மற்றும் ஒரு விசேஷம் உள்ளது. கோவிலில் பன்னிரண்டு கல்தூண்கள் உள்ளன. ஒவ்வொரு ராசியில் சூரியன் இருக்கும்போதும் உதயத்தில் அந்த ராசி கல்தூணில் சூரிய ஒளி வீசும். இப்படி பன்னிரண்டு மாதங்களில் பன்னிரண்டு ராசிக் கம்பங்களில் உதயத்தில் சூரியனின் ஒளிபடும். இது சில்பியின் விசேஷ சாமர்த்தியம். இத்தனை விசேஷங்கள் எல்லாம் ஒருங்கே சேர்ந்து ஒரு இடத்தில் ஸ்ரீ துங்கா நதிக் கரையில் ஸ்ரீசக்ர வடிவமாக அமைந்திருக்கிறது என்பது குறிப்பிடவேண்டியது.

ஸ்ரீ புக்கமகாராஜன் தன் மந்திரியான மாதவரையும் இதர சிற்றரசர்களையும் சிருங்கேரிக்கு அனுப்பிவைத்தான். ஸ்ரீ பாரதீ கிருஷ்ண தீர்த்தரின் ஆக்ஞைப்படி பற்பல ஊர்களிலிருந்து வந்திருக்கும் பிராமணர்கள் வேதபாராயணம் சைவ, துர்க்கா, வைஷ்ணவ மந்திரஜபம், பூஜை முதலியவைகளை விஸ்தாரமாகச் செய்தனர். இவ்வளவு சிறப்புக்கும் காரணமான ஜக்கண சில்பிக்கும் அவன் பரிவார ஜனங்களுக்கும் ஏராளமாக தனமும் திரவியங்களும் கொடுக்கப்பட்டன. பிரதிஷ்டை

செய்யப்பட வேண்டிய சிவலிங்கத்துக்கு ஜலவாசம், பிம்ப சுத்தி, தான்யவாஸம் செய்து பின்பு அதை பிரதிஷ்டை செய்தார். அப்படி ஸ்ரீ கணபதி முதலியவைகளின் பிரதிஷ்டையும் செய்யப்பட்டது. இதைச் சேர்ந்த ஹோமங்கள் நடந்தன. எட்டாவது நாள் ஸ்ரீ வித்யாசங்கரருக்கு வேதகோஷங்களுடன் திவ்யமான ரதோத்ஸவமும் நடத்தி மறுநாள் பக்தர்களுக்கு கந்தம் (சந்தனம்) குங்குமம் வகையரு பிரசாதங்களைக் கொடுத்து ஸ்ரீ பாரதீகிருஷ்ணதீர்த்தர் பிராமணர்களுக்கு ஏராளமாக திரவிய தானங்கள் செய்வித்து அவபிருத ஸ்நானம் செய்து ஸ்ரீ மாதவ மந்திரிக்கும் மற்ற அரசர்களுக்கும் மரியாதைகள் செய்து அனுப்பினர். அப்போது இந்த விசேஷ ஆலயப்ரதிஷ்டா விவரத்தை காசியில் இருக்கும் ஸ்ரீ வித்யாரண்யருக்குத் தெரிவிக்கும்படி தூது அனுப்ப புக்கமகாராஜாவுக்கு ஸ்ரீமத் ஆசார்யாள் சொல்லியனுப்பினர். அந்த புக்க மகாராஜாவும் மிகவும் சந்தோஷத்துடன் தூதரை அனுப்பி காசியிலிருந்த ஸ்ரீ வித்யாரண்யரிடம் விவரம் சேர்ப்பித்தான்.

இதுகேட்டு மிகுந்த சந்தோஷமடைந்த ஸ்ரீ வித்யாரண்யரும் தனக்கு ஸ்ரீ காசி விசுவேசுவரர் ஸ்வப்னத்தில் தோன்றியதின் பேரில் கிடைத்த லிங்கத்தையும் எடுத்துக் கொண்டு விஜயநகர ராஜதானிக்கு வந்து சேர்ந்தார். அங்கிருந்து சிருங்கேரிக்குப் புறப்பட, ஸ்ரீ புக்கமஹாராஜாவும் குருவுடன் சிருங்கேரிக்கு வந்தான். தனக்கு ஸந்நியாஸ ஆசிரம நிலையில் மூத்தவரான ஸ்ரீ பாரதீகிருஷ்ண தீர்த்தரைக் கண்டு ஸ்ரீ வித்யாரண்யர் மிகுந்த ஸந்தோஷம் கொண்டு ஸ்ரீ வித்யாதீர்த்தரின் ஆலயத்தில் இருவர்களும் வணங்கி சந்தோஷமடைந்தார்கள். இருவர்களும் புக்கமகாராஜாவின் தாராள மனப்பான்மையையும் குருபக்தியையும் சிலாகித்து ஆசீர்வதித்தார்கள். புக்கமகாராஜாவும், ஸ்ரீ வித்யாரண்யர் கொடுத்த லிங்கத்தைப் பெற்றுக்கொண்டு அதற்கு பிரதிஷ்டை முதலியன செய்து பல தர்மங்களை ஸ்தாபித்தான். ஸ்ரீ பாரதீகிருஷ்ணதீர்த்தரும் ஸ்ரீ வித்யாரண்யரும் சிலகாலம் சிருங்கேரியிலேயே வசித்து, பின்பு ஸ்ரீ வித்யாரண்யரிடம் எல்லாவற்றையும் ஒப்புவித்துவிட்டு ஸ்ரீ பாரதீகிருஷ்ணதீர்த்தர் கைவல்யமடைந்தார்.

குறிப்பு — ஸ்ரீ பாரதீகிருஷ்ணதீர்த்தர் 1333–80 கி. பி.
ஸ்ரீ வித்யாரண்யர் 1380–86 கி. பி.

## 7-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

**பக்கம் 43 :—**

ஸ்ரீ பாரதீ தீர்த்தஸ்வாமிகள் சகம் 1302 ரௌத்ரி வருஷம் பாத்ரபத சுக்ல த்வாதசியன்று (கி. பி. 1380 ஆகஸ்டு 13வ) ஸித்தியடைந்தார்கள். இதன்பின் புக்கமஹாராஜனும் பரலோகம் சென்றுவிட்டான். 1380வது வருஷத்தின் கடைசியில் புக்கராஜனின் மரணம் ஏற்பட்டிருக்கலாம். சரித்திர ஆராய்ச்சியாளர்களில் சிலர் 1377வது வருஷத்திலே புக்கராஜன் மரணமடைந்ததாகக் கூறுகிறார்கள். புக்கமஹாராஜனுக்கு சரீரத்தில் அஸ்வாஸ்த்யம் ஏற்பட்டு ராஜ்ய காரியம் ஒன்றையும் தான் கவனிக்க முடியாததால் 1377ம் வருஷத்தில் ராஜ்ய நிர்வாகப் பொறுப்பு முழுவதையும் தன் குமாரனை (2வது) ஹரிஹரனிடம் ஒப்புவித்துவிட்டு தான் ஒன்றிலும் ஈடுபடாமல் எல்லாவற்றிலும் ஒதுங்கியே இருந்தார். இதைக் கொண்டுதான் சிலர் தவறுதலாக 1377லேயே அவர் மரணம் அடைந்துவிட்டதாகக் கூறுகிறார்கள். உண்மையில் அவர் மரணமடைந்தது 1380ல்தான். பிறகு வித்யாரண்யர் இந்த ஹரிஹரமஹாராஜாவுக்கு பட்டாபிஷேகம் நடத்திவைத்தார். இந்த அரசர்களின் காலம் பின்வருமாறு :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முதலாவது ஹரிஹரன் | கி. பி. | 1336 | முதல் | 1357 | வரை. |
| முதலாவது புக்கன் | ,, | 1344 | ,, | 1377 | ,, (?) |
| இரண்டாவது ஹரிஹரன் | ,, | 1377 | ,, | 1404 | ,, |

1377 முதல் 1380 வரை ஹரிஹரன் ராஜ்ய நிர்வாகத்தில் தன் தந்தைக்கு உதவியாக இருந்தான். இவ்வாறு தந்தை தனயன் இருவரும் சேர்ந்து அரசாட்சி செய்யும் விஷயம் தென்னிந்திய அரச சரித்திரத்தில் பல இடங்களில் காணப்படுகிறது.

——※——

# எட்டாவது ஸர்க்கம்

ஸ்ரீ பாரதீகிருஷ்ணதீர்த்தர் ஸித்தியடைந்த சில மாதங்களில் புக்கமகாராஜாவும் காலகதி அடைந்தான். அவன் புதல்வன் ஹரிஹரன் II அரசனுனன். அப்போது அவனுக்கு அனுக்கிரஹம் செய்ய ஸ்ரீ வித்யாரண்யர் எண்ணினர். ஸ்ரீ வித்யாரண்யரை பக்தி சிரத்தையுடன் ஸகல மரியாதைகளுடனும் ஹரிஹர அரசன் வரவேற்று, சிம்ஹாஸனத்தில் அமர்த்தி, உபசாரங்கள் செய்து வணங்கி நின்றான். வம்சகுருவான ஸ்ரீ வித்யாரண்யரும் அரசனுக்கு ஸாம்ராஜ்ய தீக்ஷை கொடுத்து அனுக்கிரகித்தார். மகாராஜாவும் மிகுந்த சந்தோஷம் கொண்டு விநயத்துடன் தன் வம்ச குருவாகிய ஸ்ரீ வித்யாரண்யருக்கு மகாராஜ லக்ஷணம் கொண்ட எல்லா பிருதுகளையும் சமர்ப்பித்தான். நவரத்னங்கள் இழைத்த ஸ்வர்ண பாதுகையையும் கொடுத்தான். சிங்கம் முதலை முதலிய சித்தரிப்புகள் கொண்ட பல்லக்கு, பூசக்ரகுடை இரண்டு வெண்குடைகள் சங்க சக்ரங்கள், சாமரங்கள், மகர தோரணங்கள், வெண்மை நிறமுள்ள கொடிகள், சங்கம் பேரி முதலிய வாத்தியங்கள் ஆகிய பிருதுகளுடன் இருபுறமும் பகலில் தீவட்டி கொண்டுவரும் கௌரவத்துடனும் ஸ்ரீவித்யாரண்யர் ஸ்ரீ ஹரிஹர ராஜாவுடன் சிருங்கேரிக்கு வந்து சேர்ந்தார்.

சிருங்கேரியில் ஸ்ரீ வித்யாரண்யரின் உத்திரவின் பேரில் ஹரிஹர மகாராஜா ஸ்ரீ பாரதீகிருஷ்ணதீர்த்த குருவின் தேவாலயத்தை நிர்மாணம்செய்து அங்கு தானே சிலகாலம் தங்கி பூஜித்து குரு காணிக்கையாக சில விருத்திகள் (பூதானம்) மகாராஜா கொடுத்தார். மகாராஜாவால் கொடுக்கப்பட்ட கிராமங்களை ஸ்ரீ வித்யாரண்யர் ஸ்ரீமடத்திலும் கோவில்களிலும் கைங்கர்யம் செய்துவந்த பிராமணர்களுக்குக் கொடுத்தார். இவை சிருங்கபுரம், வித்யாரண்யபுரம் என்ற பெயர் கொண்டவை. விபாண்டக மகரிஷியால் பூஜிக்கப்பட்டுவந்த மலஹானிகரேசுவர லிங்கம் சிருங்கேரி பருவதத்தில் விளங்குகிறது. சிருங்கேரியை ரக்ஷிக்கவேண்டி நான்கு திக்குகளிலேயும் நான்கு மூர்த்திகளை ஸ்ரீ வித்யாரண்யர் ஸ்தாபித்தார். கிழக்கே ஸ்ரீ பைரவர், தெற்கே ஸ்ரீ துர்க்கை, மேற்கே ஸ்ரீ ஹனுமான், வடக்கே ஸ்ரீ காளிதேவி இவைகளை ஸ்தாபித்

தார். இவைகளைக்கண்டு மிகுந்த சந்தோஷம்கொண்ட ஹரி ஹர மகாராஜா குருவிடம் விடைபெற்று தன் ராஜதானி போய்ச் சேர்ந்தான். எல்லாம் தன் குருவாகிய ஸ்ரீ வித்யா தீர்த்தரின் பெருமை என்று சொல்லி ஸ்ரீ வித்யாரண்யர் சிருங் கேரியில் வசித்தார்.

பின்பு சந்த்ரசேகரபாரதி என்ற ஒரு சிஷ்யரை பீடத்துக்கு ஏற்றுக்கொண்டார். தன் குருவின் அனுமதி பெற்று ஸ்ரீ சந்த்ர சேகர பாரதியும் தீர்த்த யாத்ரை சென்றுர். அப்போது விஜய நகர ராஜா ஹரிஹரன் சிருங்கேரிக்கு வந்து ஸ்ரீவித்யாரண்யரை சந்தித்து தன்னுடன் கூடவந்து இருக்கும்படி பிரார்த்தித்தான். அதைக்கேட்டு ஸ்ரீ வித்யாரண்யரும் உடனே ந்ருஸிம்மபாரதீ என்ற மற்றொருவரை சிஷ்யராக ஏற்றுக்கொண்டார். ஸ்ரீமடத்தை நிர்வஹிக்கும்படி அவரை சிருங்கேரியில் அமர்த்தி விட்டு ஸ்ரீவித்யாரண்யர் ஹரிஹர மகாராஜாவுடன் பம்பா நகரம் அடைந்து அங்கு சிலகாலம் தங்கினுர். மகாராஜாவுக்கு வேதாந்த உபதேசமும் செய்தார். பின்பு தன் குருவை தியானித்துக்கொண்டு ஸ்ரீ வித்யாரண்யர் பம்பாநகரில் கைவல்யம் அடைந்தார். இதைக்கேட்ட ஸ்ரீ சந்த்ர சேகர பாரதிகள் பம்பா நகரம் வந்து ஹரிஹர மகாராஜாவையும் அழைத்துக்கொண்டு சிருங்கேரிக்கு வந்து சேர்ந்தார். ஹரிஹர மகாராஜாவால் ஸமர்ப்பிக்கப்பட்ட ஸம்பாரங்களைக் கொண்டு ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகளுக்கு பட்டாபிஷேகமும் செய்யப்பட்டது.

ந்ருசிம்மபாரதிகளும் கோகர்ண தரிசனம் செய்யச் சென்று ஹாலாடி என்ற கிராமத்தில் நரசிம்ம மூர்த்தியை பிரதிஷ்டை செய்து அங்கு சில காலம் தங்கிவிட்டு திரும்பி சிருங்கேரி அடைந்து ஸ்ரீ சந்த்ரசேகரபாரதியின் விதேஹ கைவல்யத்துக்குப்பின் சிருங்கேரியில் பீடாதிபதியாக அபிஷேகம் செய்யப்பட்டு விளங்கினுர். அப்போது விக்ரமன் என்ற மகாராஜன் இருந்தான். ஸ்ரீ ந்ருசிம்மபாரதீ ஸ்வாமிகள் தனக்கு சிஷ்யராக புருஷோத்தமபாரதி என்பவரை ஏற்படுத் தினுர். அப்போது விஜயநகரத்தை ஆண்டுவந்த புக்க மகாராஜா ஸ்ரீ புருஷோத்தமபாரதீ ஸ்வாமிகளை வணங்கி ஆசியைப்பெற்றுன். இந்த புக்கமகாராஜா, சந்திரசேகரபாரதீ களுக்கும் நரசிம்மபாரதிகளுக்கும் சமாதிகளை செவ்வனே கட்டினுன்.

ஸ்ரீ புருஷோத்தமபாரதீ ஸ்வாமிகளுக்கு ஸ்ரீ சங்கரபாரதீ என்ற சிஷ்யர் ஏற்பட்டார். இவர் அரசர்களுக்கு எப்போதும் ஆசிகள் மூலம் நன்மைகளைச்செய்து வந்ததால் சங்கரர் என்ற பெயர் உண்மையாகவே அமைந்தது. அப்போது இருந்த தேனுகராஜன் இவருக்கு சகல மரியாதைகளையும் வழங்கினான். ஸ்ரீ சங்கரபாரதீகளுக்கு ஸ்ரீ சந்திரசேகரபாரதீ, ஸ்ரீ ந்ருஸிம்மபாரதீ என்று இரு சிஷ்யர்கள் ஏற்பட்டார்கள். அந்த காலத்தில் இருந்த மகாராஜர் இவ்விரு குருக்களுக்கும் பூஜைசெய்து அனுக்ரஹம் பெற்றான். ஸ்ரீ ந்ருஸிம்மபாரதீ ஸ்வாமிகளை விஜயதேவராயர் என்ற மகாராஜா விசேஷ மரியாதைகளுடன் பூஜித்தான். ஸ்ரீ ந்ருஸிம்ம பாரதீகளின் சிஷ்யர் கீர்த்திபெற்ற ஸ்ரீ புருஷோத்தம பாரதீ. இவருடைய சிஷ்யர் அரசர்களால் வணங்கப்பெற்ற ராமசந்திரபாரதிகள். இவருடைய சிஷ்யர் நரஸிம்மபாரதிகள். இந்தக் காலத்தில் விஜயநகரத்தை ஆண்டுவந்த ப்ரௌடதேவராயர் ஸ்ரீ ராம சந்திரபாரதீகள், ஸ்ரீ நரஸிம்மபாரதீகள் இவ்விருவர்களுக்கும் ஸேவைசெய்து பயன்பெற்றார். இந்த ந்ருஸிம்மபாரதீயின் சிஷ்யர் ந்ருஸிம்மபாரதீகள். இந்த ஜகத்குருவை அக்காலத்தி லிருந்த மன்னர்கள் ஸேவித்தார்கள்.

இவருக்குப்பின் அபிநவ நரசிம்மபாரதீ என்ற சிஷ்யர் பீடாதிபதியானார். விஜயநகர மஹாராஜாவின் சிற்றரசரான விருபாக்ஷ மகாராஜா இந்த குருவை நாடி வணங்கினார். குருவிற்கு காணிக்கையாக ஒரு யானையை சமர்ப்பித்தான். இக்கேரி வேங்கடப்பநாயக்கர், இவரை தன் பட்டணத்துக்கு அழைத்து உபசரித்து தனக்கு சிரேயஸ் கிடைக்க எண்ணி மஞ்சள் வர்ணமுள்ள கொடியை குருவிற்கு சமர்ப்பித்தார். இந்த குரு சிவகீதைக்கு விசேஷமான பாஷ்யம் இயற்றினார். மந்திர சாஸ்திரத்தில் மிகவும் திறமையுள்ள இந்த குரு மலஹானிகரேசுவரரின் ஆலயத்தில் கல்கம்பத்தில் விநாயக ரூபத்தைக் காட்டினார். இந்த விநாயகமூர்த்தி உபாஸிப்பவர் களின் இஷ்டத்தைப்பூர்த்தி செய்கிறது. இவருடைய மந்த்ர சாஸ்திர பரிஞானம் எல்லையற்றது. கேலதீ தேசத்து அரசன் வேங்கடேச நாயக்கன் சிருங்கேரிக்கு வந்து குருவை தரிசனம் செய்து ஷட்தர்சன ஸ்தாபனாசார்யரான ஸ்ரீ வித்யாதீர்த்த ருடைய கோவிலின் மேல் உள்ள ஆறு சிகரங்களை சுவர்ண மயமாக்கினான். தன் குருவாகிய நரசிம்மபாரதி ஸ்வாமி களுக்கு குரு காணிக்கை ஸமர்ப்பித்தான்.

ஸ்ரீ நரசிம்மபாரதி ஸ்வாமிகள் குடுப என்ற கிராமத்தில் உள்ள அனந்தபத்மநாப ஸ்வாமி கோவிலில் உள்ள யானைக்கு வெறிபிடித்து பயித்தியம் அடைந்ததை தன் மந்திரசக்தியினால் அடக்கினார். அந்த யானையை தன்னுடைய கஜ சாலையில் சேர்த்தார். பின்பு தென்தேசத்திலிருந்து வந்த ஒரு சிறுவனைக் கண்டு அவனுடைய பெருமையைத் தெரிந்து அவரை சிஷ்யராக்கிக்கொண்டு ஸச்சிதானந்தபாரதி என்ற யோக பட்டமும் அவருக்கு கொடுத்து அவர் சிருங்கேரியில் மிகுந்த ஞானியாக விளங்கினார்.

---

## 8-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

பக்கம் 45 :— சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குருக்களின் ராஜ சின்னங்கள், பிருதங்கள் இவைகளின் முழு விவரமும் இங்கு குறிப்பிடப்பட்டிருக்கிறது. இவைகளெல்லாம் விஜயநகர மன்னன் இரண்டாவது ஹரிஹரமஹாராஜனால் ஜகத்குருவுக்கு ஸமர்ப்பிக்கப்பட்டவை. இவைகளில் பல இப்பொழுதும் சிருங்கேரி ஜகத்குரு ஸம்ஸ்தானத்தில் உபயோகத்திலிருந்து வருகின்றன.

பக்கம் 45 :— விஜயநகர மஹாராஜர்களால் கொடுக்கப்பட்ட சாஸனங்களின் விவரம் :—

(1) 1346ம் வருஷத்தில் ஏற்பட்டது. முதலாவது ஹரிஹரர், முதலாவது புக்கர், இவர்களின் மூன்று ஸஹோதரர்கள் எல்லோரும் சேர்ந்து சிருங்கேரி ஸ்ரீ வித்யாசங்கரர் ஆலயத்திற்கு முன்னால் தங்களுக்கு ஏற்பட்ட ஜயத்தைக் கொண்டாடுவதற்காக விஜயோத்ஸவம் நடத்தியபொழுது இது ஏற்படுத்தப்பட்டது.

(2) 1356ம் வருஷத்தில் ஏற்படுத்தப்பட்டது.

(3) முன் சாஸனத்தையொட்டிய மற்றொரு சாஸனம்

(2ம் 3ம் முதலாவது புக்கமஹாராஜனால் கொடுக்கப்பட்டவை)

(4) 1380ம் வருஷத்தில் இரண்டாவது ஹரிஹர மஹாராஜனால் இதுவரை தன் முன்னோர்களாலும் தன்னாலும் கொடுக்கப்பட்ட எல்லா சாஸனங்களையும் ஒன்றுசேர்த்து

இப்பொழுதும் வேறு சில க்ஷேத்ரம் பூமிகளையும் கொடுத்து ஏற்படுத்தப்பட்ட சாஸனம்.

(5) 1387ம் வருஷம் கொடுக்கப்பட்ட வித்யாரண்யபுர சாஸனம். இதுவும் இரண்டாவது ஹரிஹர மஹாராஜனால் கொடுக்கப்பட்டது.

பக்கம் 46 :— विद्यारण्यमुनीशस्य कृपापूर्णनिरीक्षणात् ।
योऽलब्ध ज्ञानसाम्राज्यं दुष्प्रापमितरैर्नृपैः ॥

(வித்யாரண்யமுநீந்திரரின் கருணை நிரம்பிய கடாக்ஷத்தால் மற்ற அரசர்களால் அடைய முடியாத ஞான ஸாம்ராஜ்யத்தை எவர் அடைந்தாரோ).

இந்த சுலோகம் ஓர் தானசாஸனத்தில் இருக்கிறது. ஸ்ரீ வித்யாரண்ய குரு ஹரிஹர மஹாராஜனுக்கு அத்யாத்ம வித்யையை உபதேசித்தார் என்பதை இதிலிருந்து நாம் தெரிந்துகொள்ளலாம்.

பக்கம் 46 :— சகம் 1308ல் (கி. பி. 1386) பம்பா புரியில் வித்யாரண்யர் விதேஹ முக்தியையடைந்ததாக இந்த கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கிறது. இப்பொழுதும் அங்கு ஸமாதி, கோவில், மூர்த்தி எல்லாம் காணப்படுகிறது. தினசரி பூஜையும் நடந்து வருகிறது. இப்பொழுது சிருங்கேரியில் காணப்படும் வித்யாரண்யர் ஆலயம் பின்னால் கட்டப் பட்டதாக இருக்கலாம்.

பக்கம் 47 :—இங்கு கூறப்பட்ட விரூபாக்ஷன் விஜயநகர மகாராஜாவின் ஆட்சிக்குட்பட்ட ஐம்பூரு தேசாதிபதியான ஓர் சிற்றரசன்.

பக்கம் 47 :—சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீமடகோசத்தில் இருந்த இந்த சிவகீதாபாஷ்யம் சிருங்கேரி ஸ்ரீ மடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டிருக்கிறது.

பக்கம் 47 :—சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு மந்திர சக்தியால் ஸ்தம்பத்தில் தானகவே ஆவிர்பவித்த விநாயக உருவத்தை இப்பொழுதும் சிருங்கேரியில் மலஹானிகரேசுவரர் ஆலயத்தில் காணலாம். சிருங்கேரியில் உள்ள அதிசயங்களில் இதுவும் ஒன்று. காண்போர் மனதைப் பரவசப்படுத்தக்கூடிய இந்த விநாயகரை சிருங்கேரி செல்லும் பக்தர்கள் அவசியம் தரிசனம் செய்யவேண்டியது.



## ஒன்பதாவது ஸர்க்கம்

ஸ்ரீ அபிநவ ந்ருசிம்மபாரதீ ஸ்வாமிகளிடம் ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் சிஷ்யராக இருந்துகொண்டு சிருங்கேரியில் அவரிடம் வேதங்கள், சாஸ்திரங்கள், புராணம் மற்றும் எல்லாவற்றையும் நன்கு கற்ருர். இந்தப் பெருமையைக் கேட்டுத் தெரிந்து இக்கேரி வேங்கடநாயக்கரும் மிகவும் விலை உயர்ந்த ஸன்மானங்களை குருவிற்கு பாத காணிக்கையாக கொடுத்தனுப்பினுன் இந்த இக்கேரி வேங்கட நாயக்கனுக்கு வம்சபரம்பரையாக ஸ்ரீ சிருங்கேரி பீடாதிபதிகளிடம் உள்ள பக்திப் பெருமையை விளக்க அந்த ராஜ வம்ச சரித்ரத்தை அபிநவ ந்ருசிம்ம பாரதிகள் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகளுக்கு விரிவாகக் கூறினுர். அதாவது:—

கௌதி தேசத்தில் சௌடப்பன் என்ற ஒரு பிரபு இருந்தான் அவருடைய பூமியில் ஒரு மாமரத்தினடியில் ஒரு நாள் படுத்திருந்தபொழுது தன் தலைக்குமேல் ஒரு ஸர்ப்பம் படமெடுத்து ஆடுவதைக்கண்டான். ஊருக்கு திரும்பி வந்தபின் தன்னுடைய கறவைப்பசு தினமும் காட்டில் ஓர் இடத்தில் தானே பாலைக் கறந்துவிட்டு வீட்டுக்கு பாலில்லாமல் திரும்பி வருவதை வேலைக்காரர் சொல்லக்கேட்டு ஒரு நாள் மேய்வதற்குப் போகும் அந்த பசுவைத் துடர்ந்து காட்டுக்குச்சென்று அங்கு ஒரு புதருக்கடியில் தானுகவே தன் பசு பாலைச் சொரிவதைப் பார்த்து அவன் அந்த இடத்தை சுத்தம் செய்து பரிசோதிக்க அங்கு ஒரு சிவலிங்கம் இருக்கக் கண்டான் இந்த ராமேசுவரம் என்ற லிங்கத்தை பக்தியுடன் பூஜித்து வந்தான் இதனுல் சௌடப்பனுக்கு சீக்கிரம் ஏராளமான தனம் கிடைத்தது ஒரு விசேஷமான கத்தியும் கிடைத்தது சக்ரவர்த்தியான ராமராயரின் ப்ரீதியினுல் 'நாயக்கன்' என்ற பட்டத்தையும் பெற்ருன். இந்த சௌடப்ப நாயக்கன் ராமேசுவரலிங்கத்தின் பூஜைக்காக ஏராளமான பூமிகளை தானம் செய்தான். இந்த மகிமையினுல் சதாசிவன், பத்ரன் என்ற இரண்டு உத்தம புத்திரர்களை அடைந்தான். புத்திரர்களிடம் குடும்பத்தை ஒப்பிவித்து சௌடப்பநாயக்கன் காலகதியடைந்தான்.

சதாசிவ நாயக்கரை அரசனுகிய ராமராயன் தன் சத்துருக்களை ஜெயிப்பதற்காக சைன்யத்துடன் அனுப்பினுன், சதாசிவ

நாயக்கரும் சீக்கிரம் சத்ருக்களான துருக்கரை ஜெயித்து ராமராயரிடம் சென்று ஜயித்த சங்கதியைத் தெரிவிக்க அரசன் சந்தோஷமடைந்து சதாசிவனுக்கு சதாசிவராய நாயக்கர் என்ற பட்டத்தைக்கொடுத்தான். அத்துடன் பேரி, துந்துபி வாத்திய விசேஷங்கள், சிவப்புக்கொடி முதலிய பிருது விசேஷங்களையும் கொடுத்தான். இதுபோல் சதாசிவ நாயக்கரைக்கொண்டு கேரள, தௌளவ தேசத்தரசர்களை வென்று ராமராயன் வெற்றியுடன் ஊர் திரும்பி சதாசிவ நாயக்கருக்கு தகுந்த வெகுமதிகளைக் கொடுத்து கௌதி நகரத்துக்கு அனுப்பினன். சதாசிவராய நாயக்கர் கௌதி ராஜ்யம் சென்று ராமேசுவர லிங்கத்துக்கு விசேஷ பூஜைகள் செய்து பூமிதானங்களைச் செய்து சதாசிவபுரம் என்ற பிராமணர்கள் நிறைந்த ஒரு அக்கிரஹாரத்தையும் ஏற்படுத்தினன். இந்த சதாசிவராய நாயக்கனுக்கு இரட்டைப் பிள்ளைகள் பிறந்தார்கள். சதாசிவராய நாயக்கன் தன் தம்பியான பத்ர நாயக்கனுக்கு ராஜ்யத்தைக்கொடுத்தான். இம்மிடி சதாசிவநாயக்கர் என்று பெயர் கொண்ட பத்ரநாயக்கரும் ஒரு வருஷம் ஆண்டு பின்பு சதாசிவராய நாயக்கரின் மூத்த குமாரனை தொட்ட ஸங்கண்ணனிடம் ராஜ்யத்தை ஒப்பிவித்துவிட்டு காலகதியை அடைந்தார்.

வீரசிரேஷ்டரான ஸங்கண்ணனும் ராமராய ராஜாவுக்காக ஜம்பூரு தேசத்தரசனை யுத்தத்தில் வென்று ராஜாவை சந்தோஷப்படுத்த அரசன் இனி ஸங்கண்ணன் குடும்பத்துடன் தன்னுடைய சமீபத்திலேயே இருக்கவேண்டும் என்று கட்டளை இட்டான். இந்த ஸங்கண்ண நாயக்கனுக்கு ராமராஜன், வேங்கடநாயக்கன் என்ற இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். மஹாராஜன் கோவா தேசத்திலிருந்து அன்னிய நாட்டார்களை விரட்டவேண்டி பெரிய சைனியத்துடன் தன் தம்பியாகிய விட்டலராயனை அனுப்பினன். பெரிய ஸங்கண்ணனுடைய சகாயத்தினல் விட்டலராயன் கோவா தேசத்திலுள்ள அன்ய வீரர்களை ஜெயித்து ராமராயனுக்கு சந்தோஷத்தை உண்டு பண்ணினன்.

கீர்த்திபெற்ற தொட்ட (பெரிய) ஸங்கண்ண நாயக்கன் தீர்த்த யாத்திரை செய்ய உத்தேசித்து ஸமஸ்த ராஜ்ய பாரத்தையும் தன் தம்பியாகிய சிக்க(சின்ன)ஸங்கண்ணனிடம்

ஒப்பித்துவிட்டு காசீநகரம் சென்றான். வழியில் டில்லிநகரத்தில் ஒரு யுத்தவீரனால் தன் பராக்கிரமத்தை வெளிப்படுத்துவதற்கு வாசலில் தொங்கவிடப்பட்டிருந்த பெரிய யுத்தவாளைக்கண்டு தான் யுத்தவீரன் என்று தன் பராக்ரமத்தைக் காட்டுவதற்காக ஸங்கண்ணன் தொங்கவிடப்பட்டிருந்த யுத்தவாளை பிடித்து எடுத்துக்கொண்டான். அதிசயமான இந்த விஷயத்தைக் கேள்வியுற்ற அரசன் தானே வெளியில் வந்து அந்த யவன வீரனுடன் சண்டையிடச்செய்து அதில் ஸங்கண்ணன் யவனனை ஜெயித்ததைக்கண்டு சந்தோஷம் அடைந்து ஸங்கண்ணனுக்கு மஞ்சள் கொடி பிருதைக்கொடுத்து காசி முதலிய புண்ணிய க்ஷேத்ரங்களில் ஸங்கண்ணனுக்கு பூமிகளை தானமாக கொடுத்தான். ஸங்கண்ணன் இந்த பூமிகளை உத்தம குணமுள்ள பலருக்குக் கொடுத்துவிட்டு தன் ஊர் செல்லத் திரும்பி வருகையில் மாசுரம் என்ற ஊர் வந்து சேர்ந்தான். அங்கு பிரசித்திபெற்ற வீரபத்ரமூர்த்தி குளத்தில் மூழ்கியிருப்பதை ஸ்வப்னம் மூலம் தெரிந்து அந்த மூர்த்தியை எடுத்துத் தன் ஊருக்குக்கொண்டுபோய் அதை ராமேசுவர லிங்கத்துக்குப் பக்கத்தில் ஸ்தாபித்தான். பிரஸித்தமான அகோரேசுவரரை விசேஷமாக பூஜித்தான் பின்பு தன் தம்பியிடம் எல்லா ராஜ்ய பாரத்தையும் ஒப்புவித்துவிட்டு காலகதியடைந்தான்.

இளையவனான ஸங்கண்ணன் சித்தப்பன் என்ற மகாவீரனை புத்திரனைப் பெற்றான். ஸங்கண்ணன் சிற்றரசர்களாகிய பைராதேவி முதலியவர்களை வென்று அவர்களிடம் கப்பம் பெற்றான். வேங்கடப்ப நாயக்கனிடம் எல்லா பொறுப்பையும் ஒப்பிவித்துவிட்டு ராமராயருடன் இக்கேரியில் வாசம் செய்து வந்தான். (வேங்கடப்ப நாயக்கனின் புத்திரனைப்பற்றி இந்த கிரந்தத்தில் சொல்லப்படவில்லை. பேரனைப்பற்றித்தான் குறிப்பிடுகிறது. பத்ரப்ப நாயக்கன் என்ற அந்த புத்திரன் ராஜ்யபாரம் வகிக்காததால் அவனைப்பற்றி குறிப்பிடவில்லை). வேங்கடப்ப நாயக்கன் பலவிடங்களில் தர்மத்துக்கு குளங்கள் வெட்டியும், உத்தியான வனங்களை ஏற்படுத்தியும் பொது ஜனங்களுக்கு உதவிசெய்தான். இப்படிப்பட்ட வேங்கடப்ப நாயக்கனின் பெருமையைக் கேட்டு மகம்மதிய வீரர்கள் அடங்கிய சேனையுடன் கூட ஹனுமப்ப நாயக்கன் என்ற அரசன் வேங்கடப்ப நாயக்கன் கோட்டையை முற்றுகை இட்டான். வேங்கடப்ப நாயக்கன் தனிமையில் குதிரையில்

அமர்ந்து கோட்டைக்கு வெளியில்வந்து ஹனுமப்ப நாயக்கனை யுத்தத்தில் வென்றான். இதுகண்டு முக்கம்மதிய வீரர்கள் ஓட்டம்பிடித்தார்கள்.

ஹனுமப்ப நாயக்கனின் தம்பி தன் ராஜ்யத்தை ஒப்பிவித்து ஸமாதானம் செய்துகொண்டான். ஆனாலும் தனக்கு ஏற்பட்ட அவமானத்தை சகிக்காமல் ஹனுமப்ப நாயக்கனின் தம்பி மீண்டும் வேங்கடப்ப நாயக்கன்பேரில் பலதடவை படையெடுத்து தோல்வியுற்று சரபுரத்தில் கோட்டைக்குள் ஓடி ஒளிந்துகொண்டான். இவ்விதம் பல தடவை யுத்தம்செய்து தௌளவ (துளு) தேசத்தை வேங்கடப்ப நாயக்கன் தன் வசமாக்கிக்கொண்டார். துஷ்ட புத்தியுடைய பைராதேவியையும் சிறையிலிட்டான். மறுபடி சமீபத்தில் உள்ள வேணுபுரி பிரதேசத்தில் ஏற்பட்ட உபத்திரவங்களை தன் சௌரியபலத்தால் அடக்கி அங்கு சாந்தி நிலவச்செய்து புவனகிரி என்ற மலைக்குகையை ஏற்படுத்தினான்.

இந்த வேங்கடப்ப நாயக்கன் சிருங்கேரியில் பல மடங்கள், பிராம்மண அக்கிரகாரம், இவைகளை கட்டிக் கொடுத்தான். மீண்டும் இவ்வரசன் ஆனந்தபுரம் என்ற ஊரில் ஸ்ரீ ரங்கநாதரின் ஆலயமும் தாண்டவேசுவர ஆலயமும் சம்பாஸரம் என்ற சைவ மடத்தையும் நிர்மாணம் செய்தான் வித்வானான இந்த அரசன் விசுவநாதபுரம் என்ற அக்கிரஹாரத்தையும் ஏற்படுத்தி அதில் பல சாஸ்திரம் கற்ற வித்வான்களை இருக்கச்செய்தான். வீராம்பாபுரம் என்ற ஊரையும் தன் தாயாரின் ஞாபகார்த்தமாயும் பத்னியின் ஞாபகார்த்தமாயும் கட்டுவித்தான் பல பண்டிதர்களைக்கொண்டு சிவகீதா பாஷ்யத்தை பலரும் படிக்கச் செய்தான். இவ்வாறான கௌதி ராஜ்யத்தின் அரசர்களின் சரித்திரத்தை ஸ்ரீ அபிநவ நரசிம்மபாரதீ தன் சிஷ்யரான சச்சிதானந்த பாரதிகளுக்கு சொல்லி இக்கேரி வேங்கடப்ப நாயக்கனைப் பார்க்க எண்ணம் கொண்டு தன் சிஷ்யருடன் சிருங்ககிரியை விட்டுப் புறப்பட்டார்.

வழியில் ஒவ்வொரு கிராமத்திலும் எல்லாவித உபசாரங்களையும் அடையப் பெற்றவராகி ஸாகரம் என்ற ஊரை அடைந்தார் இவர் வருவதை அறிந்த அரசன் ராஜ மரியாதைகளுடன் சென்று குருவை தரிசித்து இரண்டு ஆசாரியர்

க்ளையும் இக்கேரிக்கு அழைத்துச் சென்றான் அங்கு ஸிம்ஹா ஸனத்தில் இருவர்களையும் அமரச்செய்து வணங்கினான் ஸ்ரீ அபிநவ நரசிம்ம பாரதிகள் "உன் ராஜ்யம் நன்றாக பரிபாலிக்கப்படுவதைக் கேட்டு சந்தோஷிக்கிறோம்" என்று ஆசி கூறினார். இவருடைய உத்திரவின்பேரில் ஸ்ரீ ஸச்சி தானந்த பாரதிகள் சிஷ்யர்களுக்கு உபதேசமாக பல சாஸ்திர தத்துவங்கள் அடங்கிய உபந்யாஸம் செய்தார். சிஷ்யனை வேங்கடப்பன் இரண்டு ஆசாரியர்களுக்கும் உயர்ந்த ஜரிகை கொண்ட பட்டு வஸ்திரங்களைக் காணிக்கையாக சமர்ப்பித் தான் இரண்டு ஆசாரியர்களும் அரசனை ஆசீர்வதித்து மடத்துக்கு திரும்பினார்கள் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகள் சிவ கீதா பாஷ்யத்தை அரசனுக்குப்பாடம் சொன்னார். இரண்டு ஆசாரியர்களும் வேங்கடப்ப நாயக்கனுக்கு விலையுயர்ந்த பட்டு முதலியவைகளைக்கொடுத்து ஆசீர்வதித்துவிட்டு ஸ்ரீ சிருங்கேரிக்கு வந்து சேர்ந்தார்கள் பின்னால் மடத்தின் பொறுப்பை சிஷ்யரான ஸச்சிதானந்தபாரதியிடம் ஒப்பிவித்து விட்டு அபிநவ நரசிம்மபாரதீ ஸ்வாமிகள் குருமூர்த்தியான வித்யாசங்கரரை தியானித்துக்கொண்டு மோக்ஷபதம் அடைந்தார்.

---

## 9-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

**பக்கம் 50 :—**

இந்த ஸம்பவங்கள் "சிவதத்வ ரத்னாகரம்" என்னும் நூலில் விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீ ராமேசுவர தேவாலயம் முதலில் மரத்தால் கட்டப்பட் டது. பின்னர் அதுவே கற்களால் கட்டப்பட்டது.

சௌடப்ப நாயக்கனின் ஜீவ்யகாலம் அநேகமாக கி. பி. 1500 முதல் 1535 (அல்லது 1540) வரை இருக்கலாம்.

ஸதாசிவ நாயக்கரின் காலம் கி. பி. 1540 (?) — 1565.

**பக்கம் 51 :—**

ஸதாசிவ நாயக்கர் விஜயாபுரீ (பிஜாபூர்) ஸைன்யத்தை ஜயித்து கல்யாணதுர்க்கத்தை பிடித்துக்கொண்டார். பிதார் சுல்தான் அலிபரீதையும் ஜயித்தான்.

பக்கம் 51 :—

கேரளதேச அரசன் பூதலவீர கேரள வர்மாவை ஜயிப்பதற்காக நடந்த கேரள யுத்தத்தில் ஸேனாதிபதியான விட்டலனுக்கு மதுரை நாயகர்களும் கௌதி நாயகர்களும் உதவி செய்தனர்.

துளுவநாட்டில் காசர்கோடுவரை நடந்த எல்லாச் சண்டைகளிலும் ஸதாசிவநாயக்கனுக்கே வெற்றி கிடைத்தது. ஜலயபயல் ப்ரதேசாதிபதியான யடவமுராரியின் கோட்டையைப் பிடித்து அவனையும் ஸதாசிவ நாயக்கன் சிறைப் படுத்தினான்.

இம்மடி சதாசிவ நாயக்கன் என்ற பத்ரப்பன் ஒரே ஒரு வருஷம்தான் (1566) அரசாட்சி செய்தான்.

தொட்டசங்கண்ணன் காலம் கி. பி. 1566—1571.

இங்கே கூறப்பட்ட சண்டை கோவாவிலுள்ள போர்த்துகீஸியர்களை விரட்டுவதற்காக ஏற்பட்டது.

சிக்கஸங்கண்ண நாயக்கன் காலம் கி. பி. 1571—1580. ராமராஜ நாயக்கரும் இவரும் சேர்ந்து அரசுபுரிந்தார்கள். 1585ல் அவர் இறந்தார்.

பக்கம் 52 :—

வீரபத்ராலயம் ராமேசுவர மந்திரத்தின் அருகிலிருக்கிறது.

இக்கேரியிலுள்ள அகோரேச்வராலயம் மிகவும்] அழகாக அமைந்திருக்கிறது. இந்த ஆலயத்தில் ஸங்கண்ணனுடைய உருவம் நிறுவப்பட்டிருக்கிறது.

கர்சோப்பா என்ற ராஜ்யத்தை ஆண்ட ராணி பைராதேவி என்பவள்.

வெங்கடப்ப நாயக்கர் காலம் கி. பி. 1586—1629

இத்தாலி தேசத்திலிருந்து வந்த பீட்ரோ டெல்லாவல்லே என்ற யாத்திரிகர் இக்கேரி ராஜ்யத்தில் கொஞ்சகாலம் வஸித்தார். இங்கு உள்ள நாட்ய அரங்கம் கோவில் குளம் முதலானவைபற்றி மிகவும் ருசிகரமாக எழுதியுள்ளார்.

**பக்கம் 52 :—**

விஜயாபுரி (பிஜாபூர்) ஸேநாதிபதி முஞ்சுலாகானின் உதவியுடன் படையெடுத்து வந்த ஹனுமான் என்பவனை வெங்கடப்பன் ஜயித்தான்.

**பக்கம் 53 :—**

சரபுரம் இப்பொழுது பாளவரா என்று கூறப்படுகிறது.

பைராதேவியுடன் கூட 1606ல் சண்டை நடந்தது.

விச்வநாதபுர அக்ரஹாரம் வரதா நதிக் கரையில் இருக்கிறது.

—※—

## பத்தாவது ஸர்க்கம்

### ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ சரித்திரம்

சிருங்ககிரியில் பட்டாபிஷேகம் பெற்ற ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகள் வியாக்யான ஸிம்ஹாஸனத்தில் விளங்கிக் கொண்டு எல்லோருக்கும் ப்ரீதி அளித்துக்கொண்டிருந்தார். தன் குருவின் காலத்தில் கிடைத்த ஸ்வர்ண கலசங்களை ஸ்ரீ வித்யாதீர்த்தரின் ஆலயத்தின்மேல் பிரதிஷ்டை செய்தார். பின்பு இக்கேரி செல்ல உத்தேசித்து யானைகள், குதிரைகள், வித்வான்கள் சூழ புறப்பட்டு மத்தியில் ஆங்காங்கு நகரங்களில் பொதுமக்களாலும் உத்தியோகஸ்தர்களாலும் மரியாதைகள் அளிக்கப்பெற்று வேகமாக இக்கேரி போய்ச் சேர்ந்தார். வேங்கடப்பனும் மந்திரிகளுடன் ஊருக்கு வெகுதூரத்திலேயே இவரை வரவேற்று அழைத்துவந்து தன் அரண்மனையில் இறக்கி விசேஷமாக ஸத்காரம் செய்து மடத்துக்கு அனுப்பிவைத்தார். பின்னுல் அரசனும் ஸ்ரீமடத்துக்கு வந்து விலையுயர்ந்த காணிக்கைகளை குருவிற்கு ஸமர்ப்பித்து குருவின் உபதேச பாஷணங்களில் மனம் ஈடுபட்டு அவருடைய ஸந்நிதியை விட்டுப் போக மனமில்லாமல் இருந்தான். ஸ்ரீ மூகாம்பிகா தேவியை தரிசிக்க குரு எண்ணம் கொண்டிருப்பது தெரிந்து அரசன் அவரை கொல்லூர் கிராமத்துக்கு அழைத்துச்சென்ருன். அங்கு இருவர்களும் ஜகன்மாதாவான ஸ்ரீ மூகாம்பிகையை தரிசித்தார்கள். அங்கு ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகள் சிலகாலம் தங்கினுர்கள். பின்பு அரசனுக்கு ஆசிகள் சொல்லி அவனுடைய ஊருக்கு திரும்பும்படி செய்து ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகள் சிருங்கேரிக்கு வந்துசேர்ந்தார். இக்கேரி அரசனுக்கு "விசுத்த வைதிக அத்வைத ஸித்தாந்த பிரதிஷ்டாபக" என்ற பட்டம் குருவின் அருளால் கிடைத்தது வேங்கடப்ப அரசனும் ராஜ்யபாரத்தை வீரபத்திரனிடம் ஒப்பிவித்துவிட்டு சிவபதமடைந்தான்.

கலச என்ற ஊரை ஆண்டு வந்த பைரவன் என்ற அரசன் சைனியங்களை சேர்த்துக்கொண்டு இக்கேரியைத் தாக்கி ஆறு யோஜன விஸ்தீர்ணமுள்ள கிராமங்களை தன் வசமாக்கிக் கொண்டான். அதில் சிருங்கேரியும் சேர்ந்துவிட்டது. பைரவன் தன் அதிகாரிகளை சிருங்கேரியிலுள்ள ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதியிடம் அனுப்பினுன். இந்த

ஆசாரியாளும் சில பரிஜனங்களுடன் பைரவன் தங்கி இருந்த கலசா என்ற நகரத்துக்குச் சென்ருர். பைரவனுடைய ஸேநாபதியும் இவரைத் தக்க மரியாதையுடன் வரவேற்று இவருக்குகந்த விசாலமான, துங்காநதிக்கரையில் உள்ள விடுதியில் அமரச்செய்து பின்பு அவரை மரியாதைகளுடன் அரசன் தங்கியிருக்கும் அரண்மனைக்கு அழைத்துச்சென்ருன். அரசனும் குருவை வணங்கி ஆசிகளைப்பெற்ருன் ஆனல் பயத்தை உண்டுபண்ணி ஸ்வாமிகளிடமிருந்து பணத்தை அபஹரிக்கும் கெட்ட எண்ணத்துடன் ஏராளமான ஆயுதங்கள் தாங்கிய ஸேநாவீரர்களை வணங்கச்செய்தான். ஆனல் அவர் இதனல் எவ்வித பயமும் அடையவில்லை. அது மட்டுமல்ல. சபையில் உள்ளவர்களுக்கு சந்தோஷம் ஏற்படும்படி சாஸ்திர உபந்நியாஸமும் செய்தார். இதுகண்டு பைரவன் மனதில் பயங்கொண்டான். ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகளின் மனேதிடம் அவன் மனதைக் கலக்கிவிட்டது.

ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகளும் அங்கிருந்து புறப்பட்டு இரண்டு கோச தூரத்தில் உள்ள ஸோமதீர்த்தம் என்ற ஊருக்குச் சென்று பின் சிருங்கேரிக்குத் திரும்பினர் சிருங்கேரியில் உள்ள ஸ்ரீ மடத்தின் சொத்துக்களை அபஹரிக்க எண்ணங்கொண்ட பைரவன் சிருங்கேரிக்கு வந்தான் இது கண்ட சில பணக்காரர்கள் பைரவனைக்கண்டு பயந்து ஊரை விட்டு வெளியூர் சென்றனர். அங்கு உள்ள அதிகாரியை வசப்படுத்திக்கொண்டு பணத்தை அபஹரித்தான். பைரவன் சிருங்கேரியை வளைத்துக்கொண்டு ஸ்ரீ ஸச்சிதானந்தரின் ஸமீபம் செல்ல அவருடைய தபசின் உக்கிரத்தால் பாதிக்கப் பட்டு மறுபடி தன் வாசஸ்தலத்துக்கே திரும்பினன் பின் ஒரு சமயம் பைரவன் கார்கல என்ற ஊரில் தங்கி இருக்கும் பொழுது அங்கு வீரபத்ர நாயக்கனின் சேனைகளால் தாக்கப் பட்டு தோல்வி அடைந்தான் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமி களுக்கு அபசாரம் செய்ததால் தனக்கு இந்த அபஜயம் ஏற்பட்டதாயும் அவருடைய அனுகிரகத்தைப் பெற்ருல்தான் தனக்கு க்ஷேமம் ஏற்படும் என்று எண்ணி பைரவன் கார்கலாவிலேயே தங்கினன்.

ஒரு சமயம் தீர்த்தராஜபுரத்தில் தங்கி இருந்த ஸ்ரீ ஸச்சி தானந்த பாரதியை தரிசிக்க எண்ணங்கொண்டு வீரபத்ர நாயக்கன் அங்கு சென்ருன் முன்பு சிறையில் அடைக்கப்

பட்டு பின்பு விடுதலை பெற்ற வீரபத்திர நாயக்கரின் சகோதரனின் குமாரன் கெட்ட எண்ணங்கொண்டு வேறு பல வீரர்களைச் சேர்த்துக்கொண்டு படையெடுத்து ராஜ்யத்தில் இரண்டு பாகத்தைத்தான் ஆக்கிரமித்துக்கொண்டுவிட்டான் வீரபத்திரனும் ஆனந்தபுரியில் இருந்துகொண்டு தனக்கு மிஞ்சியுள்ள சிறிய பிரதேசத்தை ஆண்டுவந்தான் வீரபத்ர நாயக்கனுக்கு ஸர்வ சிரேயசும் ஏற்படவேணுமென்று ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகளும் ஆசி அனுப்பினுர்கள்.

சிருங்கேரியிலுள்ள திரவ்யத்தின் மேல் ஆசைகொண்ட பைரவன் ஸ்ரீஸச்சிதானந்தபாரதியின் தபசுக்கு பல துஷ்டர்களைக்கொண்டு இடைஞ்சல் செய்தான். அவரும் கோபம் கொண்டு தன் தபசுக்காக வேறு இடம் சென்றுர். ஆனுல் கௌதி ராஜாவின் பிரார்த்தனைக்கு இணங்கி மறுபடி சிருங்கேரிக்கே வந்தார். அங்குள்ளவர்களுக்கு எவ்வித உபத்ரவமும் இல்லாமல் செய்தார். அங்கு தவம் செய்து கொண்டு வீரபத்திர நாயக்கனுக்கு ஜயம் உண்டாகவேணுமாய் பிரார்த்தித்து அவனுக்கு ஆசீர்வாத பத்திரங்களையும் அனுப்பிவைத்தார். வீரபத்ரன் சத்ருக்களை ஜயித்து தன் பூர்ண ராஜ்யத்தைப் பெற்றுன். ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதியும் சிருங்கேரியில் ராமாயணம், மகாபாரதம் முதலியவற்றைப் படிக்கச்செய்தார். ராமசந்த்ர மஹோதயம் என்ற காவியத்தை இயற்றினுர்.

பைரவன் தான் தோல்வியுற்றதால் வருத்தம் கொண்டு வீரபத்ரநாயக்கனுக்கு ஜயம் கிடைத்ததற்கு காரணம் ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதியின் தபஸுதான் என்று ஊகித்து அவருக்கு கெடுதல் செய்வதற்காக சிருங்கேரிக்குச் சென்றுன். இந்த கெடுதலான காரியத்தில் வேலாபுரத்து அரசனுடைய ஸகாயத்தையும் பெற்றுன். தன் குருநாதருக்கு தொந்திரவு ஏற்படுவதைக்கேள்வியுற்ற வீரபத்ரநாயக்கன் சிருங்கேரியின் பாதுகாப்புக்காக தன் சைனியத்தை அனுப்பினுன். ஸ்ரீஸச்சிதானந்தபாரதியின் ஸ்வப்னத்தில் ஒரு சுந்தரி தோன்றி "வாயிலில் நான் இருந்துகொண்டு மடத்தைக் காப்பாற்றுகிறேன்" என்று சொன்னுள். ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதிகள் கொஞ்சகாலம் சிருங்கேரிக்கு வெளியில் இருப்பது உசிதம் என்று வெளியில் தங்கி இருந்தார். வீரபத்ரநாயக்கனின் யுத்த ஸேநாபதி தன் சைனியங்களுடன் வந்து ஸ்ரீ ஸச்சிதானந்த

பாரதிகளைக்கண்டு வணங்கி சிருங்கேரியிலேயே அவரை இருக்கும்படி பிரார்த்தித்தார். அவரும் சிருங்கேரிக்கு வர தளபதியும் சிருங்கேரியில் மடத்துக்குப் பின்புரம் நவநீதமலை என்ற இடத்தில் தன் சைனியத்தை நிறுத்தினான்.

வீரபத்ர நாயக்கனும் தானே நேரில் சிருங்கேரிக்கு வந்து மலஹானிகரேசுவரர் முதலிய எல்லா தேவதைகளையும் வணங்கி ஸ்ரீ சாரதாம்பாளின் ஸந்நிதிக்கு வந்து சேவித்து ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகளை வணங்கி "என் சொத்து ராஜ்யம் இதெல்லாம் தங்கள் அனுகிரகத்தால்தான் கிடைத்தது" என்று சொல்ல "எப்போதும்போல் மடத்துக்கு அனுகூலமான காரியங்களை செய்துகொண்டு சுகமாக இரு" என்று குருவும் ஆசீர்வதித்தார்.

இந்த விருத்தாந்தத்தைக் கேள்விப்பட்ட பைரவன் அதிக சைநியங்களுடன் சிருங்கேரிக்கு வந்து வெகுகாலம் ஊரைச்சுற்றி முற்றுகைபோட்டான். வீரபத்ர நாயக்கரின் தளபதி பைரவனுடைய ஏராளமான சைனியத்தைக்கண்டு பயந்து துரோகசித்தம் உள்ளவனாகி அவனிடம் பணம் பெற்றுக்கொண்டு சைனியத்தை வேறு பக்கம் கூட்டிச் சென்றான். பைரவன் தன் சேனையுடன் சிருங்கேரிக்கு தொந்திரவுகொடுக்கலானான். அங்குள்ள நகரமக்கள் தபசும் வீரமும் பொருந்திய ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகளை சரணமடைந்தார்கள் அவருடைய ஸ்வப்னத்தில் சிருங்கேரியில் உள்ள ஆஞ்சநேயர் முதலான தேவதைகள் தோன்றி ஊரைக் காப்பாற்றுவதாக சொன்னார்கள். சிருங்கேரியைச் சுற்றிலுமுள்ள பைரவனின் சேனை துரத்தப்பட்டது. இந்த வைபவம் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகளின் தபோமகிமையால் ஏற்பட்டது என்று ஜனங்கள் சந்தோஷித்தார்கள் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகள் குருசதகம், மீனாக்ஷிசதகம், என்ற கிரந்தங்களை இயற்றினார். இவருடைய கீர்த்தி எங்கும் பரவியது.

---

## 10-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

**பக்கம் 57 :—**

காசி பண்டித ரங்கோஜிபட்டருக்கும், மத்வமதத்தைப் பின்பற்றுகின்ற வித்யாதீசபட்டர் முதலான பண்டிதர்களுக்கும் ராஜஸபையில் சாஸ்திர விவாதம் நடந்தது. இதில்

ந்ருஸிம்ஹாச்ரமி மத்யஸ்தராக இருந்து நடத்தினர். விவாதத்தின் முடிவில் வெங்கடப்ப நாயகனுக்கு பண்டிதர்கள் எல்லோரும் சேர்ந்து "விசுத்த வைதிகாத்வைத ஸித்தாந்த ப்ரதிஷ்டாபகர்" என்ற பிருதத்தைக் கொடுத்தார்கள். இந்த அரசன் சிருங்ககிரியில் ஸ்ரீ ஜகத்குருக்கள் வாஸம் செய்வதற்காக புதிதாக ஒரு மடத்தைக்கட்டினன். அநேகம் அக்ரஹாரங்களை பிராஹ்மணர்களுக்கு தானம் செய்தான்.

வீரபத்ரநாயகர் காலம் கி. பி. 1629—1645

முன்னுல் வெங்கடப்பநாயகனேடு நடைபெற்ற யுத்தத்தில் தோல்வியடைந்த அரசர்கள் எல்லோரும் சேர்ந்து கொண்டு கலஹம் செய்தார்கள். இவர்களில் கலச ராஜ்யாதிபதியான பைரவனும் ஒருவன். இவன் இக்கேரி ராஜ்யத்தைச் சேர்ந்த ஆறு யோஜனை விஸ்தாரமுள்ள பிரதேசத்தைப் பிடித்துக்கொண்டு விட்டான் இதில் சிருங்கேரியும் அடங்கியுள்ளது.

பக்கம் 59 :—

இக்கேரி ராஜ்யத்தை பிடிப்பதற்கு முயற்சித்தவர்களில் வீரப்பநாயக்கனும் ஒருவன். இவன் முன்னுல் வெங்கடப்ப நாயக்கனுல் சிறைவைக்கப்பட்டான். 1630ம் வருஷத்தில் ஜெயிலிலிருந்து வெளிவந்து இவன் இக்கேரி ராஜ்யத்தில் பல பகுதிகளைப் பிடித்துக்கொண்டான். சுமார் 1633—வது வருஷத்தில் இவன் மரணமடைந்தான்.

ஸ்ரீ ராமசந்த்ர மஹோதய காவ்யத்தின் மாத்ருகை சிருங்கேரி ஸ்ரீமடகோசத்திலிருக்கிறது. ஸ்ரீ ஸச்சிதாநந்த பாரதீ ஸ்வாமிகளின் பூர்வாச்ரம சரித்ரமும் காவ்யரூபமாக உள்ளது. இது தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு அச்சிடப் பட்டுள்ளது.

வேலாபுரம் இப்பொழுது பேலூர் என்று வழங்கப்படுகிறது. இது துளுவதேசத்தில் கார்கலாதாலுகாவில் இருக்கிறது.

பக்கம் 60 :—

மீனுக்ஷீ சதகத்திலுள்ள பல சுலோகங்கள் "ஸ்ரீசங்கர கிருபா" மாதத்தமிழ் பத்திரிகையில் தமிழ் உரையுடன் வெளிவந்துள்ளன.

—※—

# பதினொன்றாவது ஸர்க்கம்

ஒருசமயம் தன்சிஷ்யனுன சிவப்பநாயக்கனை ஆசீர்வதிக்க எண்ணி ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதி சிருங்கேரியைவிட்டு புறப் பட்டார். வேணுபுரத்தில் இருந்த சிவப்ப நாயக்கனுடைய மனோபாவம் எப்படி இருக்கிறதோ என்று சிஷ்யர்கள் சந்தேகித்தனர். ஸத்குருவோ எதையும் லக்ஷியம் செய்யாமல் தன் பல்லக்கில் ஏறி சங்கம் முதலிய வாத்தியகோஷங்களுடன் தெருக்களின் வழியே போய் ஸ்ரீ நீலகண்ட ஈசுவரன் கோவிலை அடைந்தார். இந்த ஆரவாரத்தைக்கேள்விப்பட்ட சிவப்பநாயக்கன் நீலகண்டேசுவரரின் ஆலயத்துக்கு வந்து ஸ்ரீஸச்சிதானந்தபாரதியை தரிசித்து அவர் தபசின் மகிமையை கண்டு மயங்கி அவரை தான் நேரில் முன்னமேயே தரிசிக்காதது தவறு என்று சொல்லி வணங்கி அவருக்கு செய்ய வேண்டிய மரியாதைகளை செய்து தன் முன்னோர்களைக் காப்பாற்றியதுபோல் தன்னையும் ரக்ஷிக்கவேண்டும் என்று பிரார்த்தித்தான். ஸத்குருவும் சாந்த ஸ்வபாவத்துடன் அவனை ஆசீர்வதிக்க சிவப்பநாயக்கன் குருவிற்கு தகுதியான விடுதியை ஏற்பாடு செய்து அங்கு சில தினங்கள் அவரை இருக்கும்படி பிரார்த்தித்தான். அவரும் சிலகாலம் அங்கு இருந்துவிட்டு சிவப்பநாயக்கனை ஆசீர்வதித்து சிருங்கேரிக்குத் திரும்பினுர்.

மலஹானிகரேசுவரரின் ஆலயத்தில் பவானி தேவியின் ஸந்நிதி ஒன்று கட்டவேணும் என்று குருநாதர் எண்ணம் கொண்டு திறமை வாய்ந்த சில்பிகளை வரவழைத்து அக் கோயிலைக்கட்டி பிரதிஷ்டை செய்து ஸ்ரீ பவானி தேவிக்கு ஏராளமான ஆபரணங்களையும் ஸமர்ப்பித்தார். ஸ்ரீமலஹானி கரேசுவரருக்கும் ஸ்ரீ பவானி தேவிக்கும் கல்யாணோத்ஸவம் டோலோத்ஸவம் முதலான வைபவங்களை மிகவும் உத்ஸாகத் துடன் நடத்திவைத்தார்.

ராமசந்திர பாரதியின் சிஷ்யரான ஸ்ரீ நரசிம்மபாரதியின் சிஷ்யர் ஒருவர் குரு துரோகம் செய்ய யத்தனம் செய்யவே ராஜாவின் பிரேரணைப்படி அவர் கூடலி என்ற துங்கா, பத்ரா நதிகளின் ஸங்கம க்ஷேத்திரத்தில் தங்கி இருந்து அங்கேயே சிவகதியடைந்தார் சிவப்ப நாயக்கனும் இவருடைய மடமும் அதைச்சேர்ந்த எல்லா சொத்துக்களும் சிருங்கேரி மடத்துக்கு

சேர்ந்தது என்று உத்திரவு செய்ய அதை அனுசரித்து ஸ்ரீ ஸச்சிதாநந்தபாரதீ அந்த ஸங்கம க்ஷேத்ரத்துக்கு (கூடலி) சென்று மடத்தையும் சம்பந்தப்பட்ட பூமிகளையும் ஸ்வாதீனப் படுத்திக்கொண்டார். அங்கு ஒரு தேவாலயத்தையும் கட்டி வைத்து விட்டு சிருங்கேரிக்குத் திரும்பினூர்.

இப்படிப்பட்ட அபூர்வமான காரியங்களை செய்துவிட்டு ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் நரசிம்மபாரதீ என்ற சிஷ்யனை ஸ்வீகரித்து அவரிடம் பீடாதிபத்தியத்தை ஒப்பி வித்துவிட்டு முக்தியை அடைந்தார்.

ஸ்ரீ நரசிம்மபாரதி தன் குருவின் சமாதியைக்கட்டி அதில் 'ஸச்சிதானந்த' என்ற சிவலிங்கத்தை ஸ்தாபித்து ஸ்ரீ சாரதாம்பாளுக்கு அநேக ஆபரணங்களையும் செய்து வைத்தார். ஸச்சிதானந்த என்ற பெயர் கொண்ட அக்கிர காரத்தையும் ஏற்படுத்தினூர். அங்கு ஒரு சிவன் கோவிலை கட்டி அங்கும் "ஸச்சிதானந்த" என்ற சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்தார் பிறகு வேணுபுரியில் இருக்கும் சென்னமாம்பா என்ற நாயகர் ராணிக்கு அனுக்ரகம் செய்ய எண்ணி அங்கு சென்று ஸமஸ்த ராஜமரியாதைகளையும் பெற்று ராணியை ஆசீர்வதித்து திரும்பினூர். க்ஷய வருஷம் கொடும் துர்பிக்ஷம் தோன்றியபோது ஜனங்கள் ஆகாரம் கிடைக்காமல் துன்புறும் சமயம் ஆசார்யாள் லக்ஷக்கணக் கான ஜனங்களுக்குத் தன் மடத்தில் அன்னம் அளித்துக் காப்பாற்றினூர்.

சென்னமாம்பா காலத்துக்குப்பின் அவளுடைய மகன் பஸவப்பநாயக்கன் ஆக்ஷிக்கு வர அவனும் ஸ்ரீ நரசிம்மபாரதீ ஸ்வாமிகளுக்கு வம்ச பரம்பரையாக நடத்திவந்த மரியாதை களை செலுத்தினூன். ஸ்ரீ ஸ்வாமிகள் வித்யாதீர்த்தரின் ஆலயத்தில் ஜீர்ணமான பகுதிகளில் திருப்பணிகள் செய்து கோவிலை புதுப்பித்தார். மேலும் ஸ்ரீ சாரதா கோவில் மண்டபத்தின் சுவற்றில் ரம்யமான சித்திரங்களால் தேவியின் மகிமையை விளக்கிவைத்தார். கோகர்ண க்ஷேத்திர யாத்திரையும் செய்தார். மூகாம்பிகா க்ஷேத்திரம் போய் அங்கு தேவியை பூஜித்து சந்தோஷமடைந்தார். (மூகாம்பிகா க்ஷேத்ரத்தைப்பற்றி ஸஹ்யாத்ரி கண்டத்தில் கீழ்க்கண்ட வரலாறு இருக்கிறது. தேவதைகளுடன் யுத்தம் செய்ய

எண்ணின துந்துபி என்ற அசுரன் பிரும்மாவை பிரார்த்தித்து மூகன் என்ற மகனைப்பெற்றான் இந்த மூகனால் பாதிக்கப்பட்ட தேவர்கள் ஹனுமானால் தள்ளப்பட்ட துரோண பர்வதத்தில் தேவி கௌரி மலையின் சிகர ரூபமாக இருக்கிறதாய் தெரிந்து அங்கு கௌரியை ஸ்தோத்தரித்து அவளுடைய அனுக்ரஹம் பெற்று மூகன் என்ற அசுரனைக் கொன்றதாக சொல்லப் படுகிறது.)

இப்படி தீர்த்த யாத்திரையை முடித்து சிருங்கேரி திரும்பி பலவருஷங்கள் சென்றபின் தனக்குப்பின் பீடாதிபதியாக ஸச்சிதானந்தபாரதி என்ற சிஷ்யரை ஏற்படுத்தி ஸ்ரீ நரசிம்ம பாரதி பிரம்மபாவமடைந்தார்.

இந்த ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிக்கு சகம் 1627 (1705 கி. பி.) பங்குனி கிருஷ்ணபக்ஷம் திருதீயையன்று பட்டாபிஷேகம் நடந்தது. அப்போது கௌதி அரசன் பஸவப்ப நாயக்கன் மரியாதைகளை பிரீதியுடன் குருவிற்கு சமர்ப்பித்து வைத்தான். பல தேசங்களிலிருந்து வித்வான்கள் வந்திருந்தார்கள். இந்த குருவுக்கு கிரீடம் முதலியவை களுடன் பட்டாபிஷேக உத்ஸவம் விமரிசையாக நடந்தது. ரத்னங்களால் இழைக்கப்பெற்ற ஸ்வர்ண பாதுகையுடன் ஸ்ரீகுருநாதருக்கு பல்லக்கு உத்ஸவமும் நடந்தது. ஸ்ரீ வித்யா சங்கரர்கோவில் மலஹானிகரேசுவரர் கோவில் மற்றும் எல்லா தேவாலயங்களுக்கும் பரிவாரங்களுடன் சென்று தர்சித்து லோக க்ஷேமத்தை பிரார்த்தித்தார்.

---

## 11–வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

பக்கம் 62 :—

சிவப்பநாயக்கன் காலம் — கி. பி. 1645—1660

இந்த வேணுபுரம் இப்பொழுது "பெட்நூரு" என்று கூறப் படுகிறது. பழைய கன்னடத்தில் இதற்கு "பித்ருஹள்ளி" என்று பெயர். "மூங்கில் கிராமம்" என்பது இதன் பொருள். 1639ம் வருஷத்தில் வீரபத்ர நாயக்கன் இக்கேரியைவிட்டு விட்டு "பெட்நூறு" நகரத்தையே தனது ராஜதானியாக ஏற்படுத்திக்கொண்டான்.

பக்கம் 62 :—

இந்த உத்ஸவங்கள் இப்பொழுதும் சிருங்கேரியில் பிரதி வருஷமும் மிகச்சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

1660ம் வருஷத்தில் சிவப்பநாயக்கன் தனது ஆக்ஞா நிருபத்தையனுப்பி கூடலி மடத்தைச்சேர்ந்த பூமி, க்ஷேத்ரம் எல்லாவற்றையும் சிருங்கேரி மடத்துக்கு அதீனமாகச் செய்தான்.

பக்கம் 63 :—

ஸ்ரீ நரசிம்ஹபாரதீ ஸ்வாமிகளின் (6) காலம் கி. பி. 1663—1705

சன்னமாம்பாராணியின் காலம் கி. பி. 1671—1696

கி. பி. 1686 க்ஷய வருஷத்தில் மிகக்கொடிய பஞ்சத்தால் ஜனங்கள் துன்புற்றனர்.

பக்கம் 64 :—

ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகளின் (2) காலம் கி. பி. 1705-1741.

பஸவப்ப நாயக்கரின் (1) காலம் கி. பி. 1696—1714

---

## பன்னிரண்டாவது ஸர்க்கம்

ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதியின் கியாதியைக் கேட்டு எல்லோரும் மகிழ்ந்தனர் இக்காலத்தில் மகாராஷ்டிர தேசத்தில் சத்ரபதி சிவஜி மகாராஜாவின் பௌத்திரனும் ராஜாராமனுடைய புத்திரனுமான சிவஜி அரசாண்டான். இவன் குலாசார ஸம்பன்னன், வீரன். இவன் ஹிந்துக்களுக்கு விரோதியாக இருந்த டில்லி முஸ்லீம் ராஜாவை யுத்தத்தில் தோற்கடித்தவன். இப்பேற்ப்பட்ட வீர அரசன் சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதியின் கீர்த்தியைக் கேட்டு விலையுயர்ந்த பட்டுக்களையும் திரவியங்களையும் காணிக்கையாக அவருக்கு அனுப்பினான். இவைகள் பெரிய வித்வத்ஸதஸில் குருநாதருக்கு ஸமர்ப்பிக்கப்பட்டது. அதை பெற்றுக்கொண்டு சிவஜி மஹாராஜாவை குருநாதர் சிலாகித்தார். அவருக்கு குருநாதர் அனுப்பிய ஸ்ரீசாரதாம்பாள் பிரஸாதமான புஷ்பமாலையை மகாராஜா பெற்று மிகுந்த பக்தியுடன் தன் சிரஸில் தரித்துக்கொண்டாடினர். இதனால் மகாராஜா பரம க்ஷேமத்தை அடைந்தார்.

இந்த வைபவத்தைப்பற்றி கேள்வியுற்ற கௌதி அரசன் சென்னமாம்பாவின் புதல்வனை பஸவப்ப நாயக்கன் தன் மந்திரியை சிருங்கேரிக்கு அனுப்பி தன் ராஜ்யத்துக்கு ஆசார்யாள் விஜயம் செய்யவேணும் என்று பிரார்த்தனையைத் தெரிவித்தான். ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் மந்திரிக்கு தகுந்த மரியாதை கொடுத்து ஆசீர்வதித்து அரசனின் கோரிக்கைக்கு இணங்கி வம்சபுரி (வேணுபுரி) போக யத்தனம் செய்தார். அவர் சிருங்கேரியிலிருந்து பல்லக்கில் ஏறி சத்ரம், சாமரம் தீவட்டி முதலிய பிருதுகளுடன் புறப்பட்டு பிராம்மணர்களை அழைத்துக்கொண்டு ஆங்காங்கு சிஷ்யர்களால் செய்யப்பட்ட குருகாணிக்கை மரியாதைகளைப் பெற்றுக்கொண்டு சென்றார்.

பீமஸேது என்ற கிராமத்தை அடைந்து பீமேசுவர மூர்த்தியை வணங்கி கௌரவ ராஜாவால் கட்டப்பட்ட கோட்டையின் காவலனால் பிரார்த்திக்கப்பட்டு அங்கு சென்று தங்கினர். அங்கிருந்துகொண்டு கௌதி அரசனுக்குத் தகவல் கொடுக்கும்படி மந்திரியை அனுப்பினர். இந்த தகவல் கிடைத்தபின் கௌதி அரசன் (சென்னமாம்பாவின் குமாரன்)

பஸவப்ப நாயக்கன் தன் மந்திரிகளை அனுப்பி வரவேற்றான். உடனே அரசன் முக்கியஸ்தர்களும், வித்வான்களும், அரசாங்க உத்தியோகஸ்தர்களும் கொண்ட ஸபையைக் கூட்டி எல்லோருடனும் தன் சேனையுடனும் சென்று குருவிற்கு காணிக்கையை சமர்பித்து வணங்கினான். இந்த வரவேற்பு வைபவத்துடன் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதி ஸ்வாமி வம்சபுரியில் பிரவேசம் செய்தார் அங்கு ஸ்ரீ நீலகண்டேசுவரரின் ஆலயம் சென்று வணங்கி மடத்திற்கு வந்தார். அரசன் ஸத்குரு பாதபூஜை செய்தான் அப்போது ஸ்ரீ மூகாம்பா தேவியின் பிரஸாதம் வந்ததை பஸவப்ப நாயக்கன் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதியிடம் ஸமர்பிக்கும்படி செய்தான். அதைப் பெற்றுக் கொண்ட ஸ்ரீ குருநாதர் மிகவும் ஸந்தோஷத்துடன் ஸ்ரீ மூகாம்பிகையை புஜங்கப்ரயாத விருத்தத்தில் அமைந்த எட்டு சுலோகங்களால் ஸ்தோத்ரம் செய்தார் ஸத்குரு பஸவப்ப நாயக்கனின் குருபக்தியை மிகவும் மெச்சினார்.

---

## 12-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

**பக்கம் 66 :—**

சிவாஜி (2) இவன் ராஜாராமராயருக்கு மூத்தமனைவியான தாராபாயிடம் பிறந்தவன்.

**பக்கம் 67:—**

மூகாம்பா : இக்கேரி அரசர்களின் குலதேவதை

---



# பதிமூன்றாவது ஸர்க்கம்

## ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதியின் யாத்திரை

இப்படி ஸ்ரீ மூகாம்பிகையின் பிரஸாதத்தை அனுப்பிய பின்பு பஸவப்பநாயக்கன் தன்னுடைய சிவபூஜையை முடித்து முக்கிய மந்திரிகளை அழைத்துக்கொண்டு சென்று ஸ்ரீஸச்சிதானந்த பாரதிகளை தரிசித்து தன் அரண்மனைக்கு விஜயம் செய்யும்படி பிரார்த்தித்தான். இந்த பிரார்த்தனையை அங்கீகரித்து ஸத்குருவும் பல்லக்கிலேறி பலவித வாத்யங்களுடன் அரசனின் அரண்மனைக்குச்சென்றார். அரண்மனைக்கு வெளியில் அரசனும் ஸ்ரீ குருவை வணங்கி மரியாதைகளுடன் உள்ளே அழைத்துச்சென்று சபையை அமைத்து குருவை உபசரித்தான். வித்வான்களைக்கொண்டு விசேஷ வேதாந்த விசாரங்கள் நடத்தப்பட்டன. ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் அங்கு தலைமை வகித்தார்கள்.

அங்கு சிலகாலம் தங்கி சிஷ்யர்களின் பிக்ஷாவந்தனுதி காணிக்கைகளைப்பெற்று சிருங்கேரிக்குத் திரும்பி வந்தார். சிருங்கேரியில் வெகுகாலம் தங்கி ஸ்ரீமல்லிகார்ஜுனஸ்வாமிக்கு தங்கப்பல்லக்கு புதிதாகச் செய்து ஸமர்ப்பித்து பல்லக்கு உத்ஸவம் முதலான பல உத்ஸவங்களை ஏற்படுத்தித் தானே உடன் இருந்து அவைகளை நடத்திவைத்தார். ரிஷ்ய சிருங்கர் ஆலயம் கொண்ட கிக்காவுக்கு சென்று அங்கு ஸ்வயம்பு லிங்கத்தை தரிசித்து பக்கத்திலுள்ள நரஸிம்ம மலைக்குச் சென்று வரத நரசிம்மமூர்த்தியை வணங்கி மலையை விட்டு இறங்கி சிருங்கேரிக்கு வந்துசேர்ந்தார்.

பின்பு ஸ்கந்தஷஷ்டி சமயத்தில் ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் ஸ்ரீ ஸ்கந்தரை தரிசிக்க எண்ணம் கொண்டிருக்கிறார் என்று தெரிந்து பஸவப்பநாயக்கன் தன் மந்திரியை சிருங்கேரிக்கு அனுப்பினான். மந்திரியின் மூலம் கிடைத்த அரசனின் அழைப்பை ஏற்றுக்கொண்டு ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமி பல்லக்கேரி பிராமணர்களுடன் புறப்பட்டு வாராஹீ நதி ஸங்கமஸ்தலமான கட்டசிரஸ் என்னுமிடத்தில் தங்கி ஆஹ்நிகங்களை முடித்துக்கொண்டு கொத்கடம் என்ற க்ஷேத்திரத்தை அடைந்தார். அங்கிருந்து புறப்பட்டு சிவகங்கா ஸரஸ்ஸின் கரையிலுள்ள வைத்யநாதலிங்கத்தை

பூஜித்து பின்பு விலிநெலெபுரத்தில் ஸ்ரீ கோபாலகிருஷ்ண விக்ரஹத்தை தரிசித்து அங்கிருந்து ஸ்ரீ சுப்ரமணிய க்ஷேத்திரம் போய்ச் சேர்ந்தார். எதிர்பாராமல் கிடைத்த குருவின் தரிசனத்திஞல் நகர ஜனங்கள் மிகவும் சந்தோஷப்பட்டார்கள். ஆந்திரர்கள், மகாராஷ்டிரர்கள், கேரள தேசத்தவர்கள், திராவிடர்கள், கர்ணுடகர்கள், தௌளவர்கள், த்வைதிகள், அத்வைதிகள் எல்லோரும் சேர்ந்து ஊருக்கு வெளியிலேயே ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதியை வணங்கிஞர்கள். கோவிலுக்கு முன்பு பல்லக்கிலிருந்து கீழே இறங்கி ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமி ஸ்ரீ கணபதியை தரிசித்து எல்லோராலும் உள்ளே அழைக்கப்பெற்று ஸ்ரீசுப்பிரமணிய மூர்த்தியை தரிசித்து அங்கு ஏராளமான பணத்தை ஸ்வாமிக்கு அர்ப்பணம் செய்து சுவாமியின் பிரஸாதத்தைப் பெற்றுக்கொண்டு அங்குள்ளவர்களை ஆசீர்வதித்து தன் தங்குமிடம் வந்து சேர்ந்தார் மறுநாள் ஷஷ்டி தினத்தில் ஸ்ரீ சுப்பிரமணிய ஸ்வாமிக்கு ரதோத்ஸவம் நடந்ததைக்கண்டு சந்தோஷித்தார். பின்பு சேஷவாகனம், பல்லக்கு உத்ஸவம் இவைகளையும் தரிசித்து ஆனந்தபரிதராகி ஸ்ரீ சுப்பிரமணிய ஸ்வாமியை அழகாக ஸ்தோத்தரித்தார் திரும்பி தங்குமிடம் வந்து அங்கு கூடியிருந்த ஸகல ஜனங்களுக்கும் ஆசீர்வாதம் செய்தார்.

---

## 13-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

பக்கம் 68 :—

மேற்குத் தொடர்ச்சிமலையின் அடிவாரத்திலுள்ள "ஆகும்பே" நகரம் தான் அக்காலத்தில் "கட்டசிரஸ்" என்றபெயர் கொண்டதாக இருக்கலாம்

கொத்கடபுரம் :—இது இப்பொழுது 'கொக்கடே' என்று வழங்கப்படுகிறது. இது உப்பினியங்காடிக்கு அருகில் இருக்கிறது.

---

## பதினான்காவது ஸர்க்கம்

ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகள் வேலாபுரி அரசனின் மந்திரிகளால் பிரார்த்திக்கப்பட்டு பக்கத்தில் உள்ள நேரங்கி புரிக்குப் போய் அங்கு நன்கு பூஜிக்கப்பெற்று அங்கிருந்து புறப்பட்டு லவணபணபுரியில் ஜனங்களின் கோரிக்கைப்படி தங்கி ஸஹஸ்ர லிங்கேசுவரரை தரிசித்துவிட்டு கலய நரசிம்மாலயம் என்ற ஊருக்கு சென்று நரசிம்ம மூர்த்தியை வணங்கினார். பின்பு வங்கபிரதேச அரசனால் உபசரிக்கப்பட்டு நந்தாவரம் சென்றார். அங்கு அரசனால் பஹுமானிக்கப்பட்டு அங்குள்ள தேவாலயங்களில் தரிசனம் செய்து வித்வான்களை வாதத்தில் வென்றார். அங்கிருந்து படகில் ஏறி நதிமார்க்க மாக இனவல்லிபுரியை அடைந்தார். அங்கு துர்க்காதேவியை பூஜித்து பின் குடுபபுரம் என்ற ஊருக்குப்போய் அங்கு ஸ்ரீ அனந்தபத்மநாப ஸ்வாமியை தரிசித்து பின்பு குக்யபுரி என்ற ஊருக்குப்போய் அங்குள்ள அரசனால் நன்கு உபசரிக்கப்பட்டு சிறிதுகாலம் அங்கு தங்கினார்.

அங்கிருந்து ஸ்வர்ணகதலீபுரம் என்ற ஊருக்கு பக்தர் களால் அழைத்துச் செல்லப்பட்டார். அங்குள்ள புண்ய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்தார். அங்கு ஸித்தர்களின் ப்ரீதிபுரஸ்ஸரமான பூஜையைப்பெற்று ஸித்தர்கள் போற்றும் மஞ்சுநாதேசுவரரை தரிசித்து காந்தாவரம் என்ற ஊருக்குப் போய் ஸ்வர்ணமயமான காந்தேசுவரரைப் பூஜை செய்தார். பின்பு சௌட தேசத்தரசனால் அழைக்கப்பட்டு அவன் ஊருக்கு சென்று அவனால் உபசரிக்கப்பட்டு ஸோமநாதேசுவரரைத் தரிசித்து அநேக சிஷ்யர்களுடன் அங்கு தங்கினார். அங்கிருந்து கார்கலா வந்து அனந்தேசுவரரை பூஜித்து ஹெப்புரீபுரிக்குச் சென்று ஜனார்தனரை சேவித்தார். அங்கிருந்து ஹாலாடி கிராமம் சென்று அன்று தன்னுடைய மடத்திலேயே தங்கினார்.

அங்கு நரசிம்ம மூர்த்தியை தரிசித்து பின்பு கோடீசுவரம் என்ற ஊருக்கு வந்து ஸமுத்ரஸ்நானம் செய்து கோடீசுவர ஸ்வாமியைப் பூஜித்து கும்பகாசிக்குப்போய் அங்கிருந்து வஸுபுரம் சென்று மஹாலிங்க தர்சனம் செய்து பாராகூரகம் என்ற ஊரில் தன்னுடைய சொந்த மடத்தில் தங்கி பிறகு ஜல மார்க்கமாக கங்கவல்லிக்குப்போய் விசுவேசரை வணங்கி

கிருமுனீசுவரம், வடகலம் வழியாக பாலகன்யாபுரம் சென்று பஞ்சலிங்கேசுவரரைப் பூஜித்து முருகேசுவரம் போனுர். அங்கு ஒரு விசேஷம் உள்ளது ராவணன் கணபதியிடம் சிவலிங்கத்தைக் கொடுத்துவிட்டு ஸந்த்யாவந்தனம் செய்யச் சென்ற சமயம் அவன் வருமுன்னே மூன்று தடவை கூப்பிட்டு விட்டு லிங்கத்தை கணபதி கீழே வைத்துவிட அது பாதாளம் வரை ஊன்றிவிட ராவணன் கோபங்கொண்டு லிங்கத்தைப் பிடுங்க லிங்கத்தின் வஸ்திரம் மட்டும் மேலே வந்தது. லிங்கம் பாதாளம் சென்றுவிட்டது. ஆகவே வஸ்திரமே லிங்காகார மாக இருந்துகொண்டு இப்போதும் பூஜிக்கப்பட்டு வருகிறது. இந்த ஆச்சரியமான லிங்கரூபத்தை தரிசித்தார்.

பின்பு ஹோனன்னுவரம்போய் தாரேசுவரம் வந்துசேர்ந்தார் அங்கு அவருடைய ஸ்வப்பனத்தில் ஒரு ஸ்திரீ தோன்றி கன்னத்தில் கையை வைத்துக்கொண்டு "தர்மதிக்காமல் நீ உன் ஊர்போய் சேர்வாயாக" என்று சொன்னுள் பிறகு அந்த ஊரைவிட்டு புறப்பட்டு பஸவேந்திர மகாராஜாவின் மந்திரிகளால் பூஜிக்கப்பட்டவராக கோகர்ண க்ஷேத்திரம் சென்றுர். அங்கு மஹாபலேசுவரருக்கு சகலவிதமான பூஜை களையும் தானே செய்து ரதோத்ஸவத்தையும் நடத்திவைத் தார் ஸமுத்ரஸ்நாநமும் செய்தார். பின்பு மூகாம்பிகா க்ஷேத்திரம் சென்று ஸ்வர்ண ரேகையுடன் கூடிய லிங்கத்தை தரிசித்து பூஜைசெய்து நூற்றுக்கணக்காக ஸுவாஸினிகளைப் பூஜித்து ரதோத்ஸவம் முதலியவற்றை நடத்திவைத்தார்.

பின்னர் சமுத்ரக்கரை ஓரமாக சஞ்சாரம் செய்து வரும் போது சமுத்ர மத்தியில் தீவில் வசித்துவரும் கொள்ளைக் காரன் ஹோன்னவரத்துக்கு வந்து அநேக தனிகர்கள் வீட்டிலுள்ள பணத்தையும் ஸ்திரீகளையும் அபகரித்துக் கொண்டு போய்விட்டான் மீண்டும் உடுப்பிக்குப்போய் இந்த கொள்ளைக்காரன் மாத்வ ஸந்நியாசிகளின் தனத்தை அபகரித்துச்சென்றுன். இந்த கொடிய செயல்களைக் கேள்வி யுற்ற கௌதி அரசன் தன் குருநாதருடைய யோக க்ஷேமங் களைத் தெரிந்துவருமாறு ஒரு சேவகனை இங்கு அனுப்பினுன் அந்த சேவகன் குருவை வணங்கி தான் வந்த விருத்தாந் தத்தைத் தெரிவிக்க ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதி கௌதி அரசனுக்கு கடிதம் எழுதி அதில் தான் சௌக்கியமாக மூகாம்பிகாசமீபம் உள்ள கொல்லூர் கிராமத்தில் இருப்ப

தாகத் தெரியப்படுத்தினர் இந்த பதிலைக்கண்டு கௌதி அரசன் சந்தோஷமடைந்தான்.

ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகள் அங்கிருந்து ஹாலாடி கிராமம் சென்று அங்கு தன் சொந்த மடத்தில் தங்கி ஸ்ரீ நரஹரி மூர்த்தியைப் பூஜித்து ஸ்ரீ சிருங்கேரிக்கு வேகமாகச் சென்றுர் சிருங்கேரிக்குப்போய் பலவித வேலைப்பாடுடன் கூடிய வெள்ளிப் பல்லக்கில் ஆரோஹணித்து ஸ்ரீ சிருங்கேரி வீதிகளில் பவனி வந்து ஸ்ரீ மடம் வந்து சேர்ந்தார் சிலகாலம் சிருங்கேரியில் தங்கியபின் மறுபடியும் விஜய யாத்திரை செய்ய எண்ணங்கொண்டு சிருங்கேரியை விட்டு புறப் பட்டார் முதலில் ஹரதத்தாசிரமம் சென்று ராமேசுவரருக்கு ரதோத்ஸவத்தை நடத்தி ஸஹஸ்ர லிங்கேசுவரரையும் பூஜித்தார். பிறகு துங்காநதியும் பத்ராநதியும் ஸங்கம மாகின்ற கூடலி புண்ய க்ஷேத்ரம் சென்றுர்.

கூடலி மடாதிபதியான ஸன்யாஸி முறை தவறி வேற்றரச னுடைய வீரர்களை தனக்குத் துணையாக வைத்துக்கொண்டு வெளியே வராமல் மடத்திற்குள்ளேயே இருந்தார். கோட்டைக் காவலனும் இதற்கு ஒத்தாசையாக இருந்தான் இந்த விவரம் தெரிந்து பஸவ நாயக்கரின் குமாரன் ஸோம சேகர நாயக்கன் கோபம் கொண்டு அவர்களையடக்கி அந்த மடத்தையும் அதன் சொத்துக்களையும் சிருங்கேரி மடத்திற் கதீனமாக்கினன். அங்கு தங்கி ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகள் தேவாலயங்களில் பூஜித்து தன் பரிவாரங்களுடன் சென்று மொகலாயர் அதிகாரத்தில் உள்ள பைரவகிரியை அடைந்தார். பைரவதேவரை அர்ச்சித்தார். அங்கிருந்து புறப்பட்டு ஹனுமன் என்ற அரசனின் புதல்வனல் அழைக்கப்பட்டு பங்கீபுரம் சென்று அவனல் உபசரிக்கப்பட்டு குரு காணிக்கை யாக அவனல் சமர்ப்பிக்கப்பட்ட பூமியையும் ஏற்றுக் கொண்டார். பிறகு ஸோமபுரத்துக்கு வந்து ஸோமேசுவரரை வணங்கி தரிகெரே நகரம் வந்தார். அங்கிருந்த அரசனல் கொடுக்கப்பட்ட சிஷ்ய சேவையை ஏற்றுக்கொண்டார். அங்கு முஸ்லீம் பாதுஷாவின் சேனபதியானவர் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதியை தரிசித்து மிகவும் விநயத்துடன் ஏராளமான பணத்தை காணிக்கையாக அர்ப்பணம் செய்தான். இந்த சேனபதிக்கும், தரிகெரெ அரசனுக்கும் முன்பு விரோதம் இருந்தபோதிலும் இந்த சந்தர்ப்பழ்

காரணமாக ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகளால் இருவர்களுக்கும் ஒற்றுமை ஏற்பட்டுவிட்டது. அந்த ஸேநாபதி ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிக்கு விஜய துந்துபி வாத்தியம் வைத்துக்கொள்வதற்காக சிறந்த ஒரு ஒட்டகத்தைச் சமர்ப்பித்தான். குருவுக்கு விசேஷமான பிக்ஷாவந்தனமும் செய்தான். குருவின் அனுக்கிரஹத்தால் சேனாதிபதிக்கு சீக்கிரம் ஒரு புத்திரன் பிறந்தான். ஸத்குருவும் அங்கிருந்து புறப்பட்டு சிருங்கேரிக்கு வந்து சேர்ந்தார்.

---

## 14-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

பக்கம் 70 :—

இப்பொழுது உப்பினியங்கடி தாலுகாவிலுள்ள 'பெல்லாரே' என்ற ஸ்தலம்தான் அப்பொழுது கொங்கண தேசத்தில் 'வேலாபுரம்' என்ற பெயருடன் விளங்கிற்று.

நெரங்கிபுரி—இது இப்பொழுது 'ஹளெநெரங்கி' என்று கூறப்படுகிறது.

லவணுபணபுரி — இப்பொழுது இதற்கு 'உப்பினியங்கடி' என்று பெயர்.

குடுபபுரம் – கடப; குக்யபுரி – குக்கே; மஞ்சுநாதாலயம் கதரிக்ஷேத்ரத்தில் இருக்கிறது.

உப்பினியங்கடி தாலூகாவிலுள்ள ஓர் பகுதிக்கு அப்பொழுது 'சௌடபூமி' என்று பெயர்.

ஹொய்புரி அரசர்களுக்கு 'பல்லாளர்கள்' என்று பெயர்.

ஹாளாடி நகரத்தில் சிருங்கேரி ஜகத்குரு ஸம்ஸ்தானத்திற்குச் சொந்தமான ஒரு மடம் இருந்தது.

கும்பகாசி — கும்பாஷி

கங்கவல்லீபுரம் — கங்கோலி. மேல் நாட்டு வணிகர்கள் இதை 'கம்போலின்' என்று கூறிவந்தனர்.

பக்கம் 71 ;—

வடகலபுரம் — படகல்

பாலகன்யாபுரம்—பார்கூர். இங்கேயும் சிருங்கேரி ஜகத்குரு ஸம்ஸ்தானத்திற்கு சொந்தமடம் இந்தது.

ஹொந்நாவரா — ஹோனவர

இங்கு கூறப்பட்ட கடற்கொள்ளைக்காரர் தலைவன் அபிஸீனியா தேசத்திலிருந்து வந்தவன். கடற்தீவுகள் இவன் வசத்திலிருந்தன. ஜஞ்ஜிரா கோட்டைத் தலைவனை 'சித்திஸத்' என்பவனும் இவன்தான்.

பக்கம் 72 :—

ஸங்கமக்ஷேத்ரம் கூடலி என்று சொல்லப்படுகிறது. இங்கு ஓர் மடம் உள்ளது. இந்த கூடலி மடம் சிருங்கேரி ஜகத்குரு ஸம்ஸ்தானத்தைச் சேர்ந்த கிளை மடம்.

வங்கீபுரம்—இப்பொழுது பத்ராவதி என்று கூறப்படுகிறது. இதுதான் ஹனும அரசனின் ராஜதானி.

தரிகெரெ நகர அரசன் பட்டாபிராமன்

இங்கு கூறப்பட்ட ஸேநாதிபதி சிரா பிரதேச அதிபதியான மொகலாய கவர்னர்.

---

## பதினைந்தாவது ஸர்க்கம்

சிருங்கேரியில் சில காலம் தங்கியபின் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகள் ஸூர்யகிரஹண ஸமயத்தில் கோகர்ண க்ஷேத்திரம் சென்றார். அங்கு ஸமுத்ரஸ்நானம் செய்து ஏராளமான திரவிய தானங்களும், அச்வதானமும் செய்தார். பின்பு அங்கிருந்து புறப்பட்டு 'பிலிகே' முதலான நகரங்களில் அரசன், மந்திரி, ஸேநாபதி முதலியவர்களால் உபசரிக்கப் பட்டு குப்தி துர்க்கம் சென்று அங்கு ரேணுகாதேவியை பூஜித்தார். பிறகு வானவாஸீபுரம் போக புறப்பட்டார். நடு வழியில் கொள்ளைக்கூட்டத்தாரின் உபத்திரவம் இருப்பதால் இப்போது அங்கு செல்வது சரியல்ல என்று தன் பரிவாரங்கள் தடுத்தும் அதை பொருட்படுத்தாமல் ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் தைரியமாக வானவாஸீபுரம் சென்றார். அந்த பட்டணத்தின் அரசனை சதாசிவ நாயக்கன் தன் பிரதிநிதி களை அனுப்பி ஸத்குருவை வரவேற்றான். அன்று சிவராத்ரி தினம். குருநாதர் பலவிதமான புஷ்பங்களாலும் பில்வங் களாலும் மதுலிங்கேசுவரரை அர்ச்சித்தார். அங்கிருந்து புறப்பட்டு கௌதிபுரம் சென்று ராமேசுவரரையும் வீரபத்ரரை யும் பூஜித்துவிட்டு ஸாகரபுரிக்குச்சென்று பிறகு இக்கேரிக்குச் சென்று அகோரேசுவரரை பூஜித்துவிட்டு பின்பு ஆரங்கபுரம் சென்று கலிநாதேசுவரரைப் பூஜித்து தீர்த்தராஜபுரம் வழியாக சிருங்கேரிக்கு வந்தார்.

அங்கு நவராத்திரி சமயம் ஸ்ரீ சாரதாம்பாளுக்கு விசேஷ உத்ஸவத்தை நடத்தி எல்லா ஊர்களிலிருந்தும் வந்த வித்வான்களைக்கொண்டு பெரிய ஸதஸ் ஒன்று நடத்தினார் இது தவிர நவராத்திரியில் ஸுவாஸினீ பூஜை பிரதிதினமும் ஒவ்வொன்றாக அதிகரித்த எண்ணிக்கையுடன் செய்து ராத்திரியில் சிம்மாசனத்தில் வீற்றிருந்து ஸ்ரீ சாரதாதேவியின் உத்ஸவத்தை விமரிசையாக நடத்திவைத்தார்.

ஸ்ரீ சாரதாம்பாளுக்கு ஹம்ஸ வாஹனம், விருஷப வாஹனம், மயில் வாஹனம், கருட வாஹனம், மான் வாஹனம், சிம்ம வாஹனம், குதிரை வாஹனம், யானை வாஹனம் இவைகளில் ஆரோஹணம் செய்வித்து உத்ஸவங் களை தினப்படி நடத்தினார்.

மூலா நக்ஷத்திர தினத்தில் ஸ்ரீ மலஹானிகரேஸ்வராலயத்திலிருந்து பவானிதேவியை வெள்ளிப்பல்லக்கில் ஏற்றி உத்ஸவமாக ஸ்ரீ சாரதாம்பாள் கோவிலுக்கு அழைத்துவந்து இரண்டு தேவிகள் முன்பும் ஸரஸ்வதி பூஜையை நடத்தினர் இரண்டு தேவிகளேயும் மிகவும் உருக்கமாக ஸ்தோத்திரம் செய்தார். ஒன்பது நாட்களும் தேவீமாகாத்மிய பாராயணம் சண்டி ஹோமங்கள் நடத்தி தசமியில் ஸ்ரீ சாரதாம்பாளுக்கு ரதோத்ஸவமும் நடத்தினர்.

கார்த்திகை மாதம் பௌர்ணமியில் ஸ்ரீ மல்லிகார்ஜுன ஸ்வாமி ஆலயத்தில் லக்ஷதீப உத்ஸவம் நடத்தினர். அப்போது ஸ்ரீ வித்யாசங்கரர் தேவாலயத்திலும் தீபங்களால் அலங்காரம் செய்யப்பட்டன.

மாசி மாதத்தில் தசமி திதியில் துவஜாரோகணத்துடன் ஸ்ரீ மல்லிகார்ஜுன ஸ்வாமிக்கும், ஸ்ரீ பவானி தேவிக்கும் பத்து நாள் விசேஷ உத்ஸவம் நடத்தினர்.

சிவராத்திரி தினம் ஸ்ரீ மல்லிகார்ஜுன ஸ்வாமிக்கு விசேஷ பூஜையை செய்தார். ஸ்ரீ மல்லிகார்ஜுன ஸ்வாமிக்கு கல்யாண உத்ஸவம், ரதோத்ஸவம், பள்ளியறை உத்ஸவம் நடத்தினர் மறுநாள் காலையில் வித்வான்களேயும் ஸ்துதி பாடகர்களேயும் கொண்டு திருப்பள்ளியெழுச்சி செய்வித்து, கானம், வாத்யம், நாட்யம் விநோத வாக்கியங்களுடன் கூடிய பாடல் இவைகளுடனும் ஸாயங்காலம் பிரதோஷ காலத்தில் மஞ்சள் நீராட்டமும், இரவில் டோலோத்ஸவமும், ஸ்ரீ சச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகள் வெகு விமரிசையாக நடத்திவைத்தார்.

வேணுபுரியிலிருந்து அரசன் தன் அதிகாரிகளே அனுப்பி ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகளே தன் ஊருக்கு அழைத்து வந்து விசேஷமாக உபசரித்தான் சில நாள் அங்கு இருந்துவிட்டு பின்பு அங்கிருந்து காசீபுரம் சென்று கௌரவ துர்க்கம் வழியாக வ்யாக்ரசிலாபுரம் அடைந்து தன் மடத்தில் தங்கினர்.

இவர் வருவதைக் கேள்விப்பட்டு கௌதி அரசனின் மந்திரி நிர்வாணய்யா ராஜாவினல் ஆக்ஞையிடப்பட்டு, பழங்கள் பூஜா திரவியங்கள் முதலிய சகலவிதமான மரியாதைகளுடன் ஸ்வாமிகளே வரவேற்று, சிவகங்கை என்ற

ஊர் வழியாக வம்சபுரத்துக்கு அழைத்து வந்தான். அன்று ஸம்வத்ஸராதி. அதாவது ப்லவ வருஷம் சைத்ர சுக்ல ப்ரதமை. அன்று தைவக்ஞர்களை தானுதிகளால் ஸந்தோஷப் படுத்தினர். ஸ்வாமிகளின் வரவேற்புக்காக வஸந்த ருதுவும் வந்து சேர்ந்ததுபோல் இருந்தது. ஸ்வாமிகள் நீலகண்டேசுவரரை தரிசித்து ஸோமசேகர நாயக்கனை ஆசீர்வதிக்கப் புறப்பட்டு அரண்மனையை அடைந்து எல்லோருக்கும் மங்களத்தை உண்டுபண்ணக் கூடிய தர்மோபதேசத்தைச் செய்து அரசனை அனுக்கிரஹித்தார்.

பின்பு மந்திரி நிர்வாணய்யா அரசனை நோக்கி சிருங்கேரி மடத்துக்கு ஏராளமான சிலவு ஏற்பட்டதால் கடன் இருப்பதாயும் அதைத் தீர்த்துவிட வேண்டும் என்றுன். இதைக் கேட்ட அரசன் அவ்விதமே செய்தான். இதுகேட்ட ஸச்சிதானந்த பாரதிகள் அரசனின் பக்தியை மெச்சினர். மந்திரி ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதியை அரசனுடைய உத்தியான வனத்திற்கு அழைத்துச் சென்று அங்குள்ள பலவிதமான பழ விருக்ஷங்கள் புஷ்பச்செடிகள் இவைகளைக் காண்பித்தான். பூஜார்ஹமான புஷ்பங்கள் பழங்கள் முதலியவைகளை உற்பத்தி செய்யும் அரசனின் குணதிசயங்களைக்கண்டு ஸத்குருவும் மெச்சினர். பின்பு அரசனுல் உபசரிக்கப்பட்டு ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதியும் சிருங்கேரி திரும்பினர்.

---

## 15-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

பக்கம் 75 :—

பிலிகே : ஒரு அரசனுடைய ராஜதானி

வானவாஸிபுரம்: இப்பொழுது 'பானவாசி' என்று கூறப்படுகிறது.

ஸதாசிவன் : பானவாசிக்கு அருகிலுள்ள பிரதேசங்களின் அதிபதி.

சிருங்கேரியில் நவராத்ரி மஹோத்ஸவத்தில் ஒவ்வொரு நாளும் வெவ்வேறு வாஹனத்தில் அமர்ந்திருப்பதாக

சாரதாம்பாளுக்கு அலங்காரம் செய்கிருர்கள். 'பக்திஸுதா தரங்கிணி' என்ற ஸ்தோத்ர க்ரந்தத்தில் ஸ்ரீ சாரதா ஸ்தோத்ரத்தில் இந்த வாஹனங்களின் விபரமும் இதன் உட்கருத்துகளும் ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவந்ருஸிம்மபாரதீ ஸ்வாமிகளால் விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன.

**பக்கம் 76 :—**

சோமசேகரநாயகன் (2) :— இவனுடைய காலம் கி. பி. 1715—1739.

நிர்வாணய்யா :— சோமசேகரநாயகனின் மந்திரி, மாமனுருங்கூட.

ப்லவஸம்வத்ஸரம் — கி. பி. 1721

# பதினெருவது ஸர்க்கம்

ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகளின் மஹிமை நாடெங்கும் பரவியது. பல ஊர்களிலிருந்து வந்த வித்வான்களை நன்கு ஆதரித்து எங்கும் தர்மத்தை வளர்த்தார். பல அரசர்கள் இந்த குருவுக்கு பலவிதமான காணிக்கைகளை ஸமர்ப்பித்தார்கள்.

ஒரு ஸமயம் இந்த குருவை பஸவப்ப நாயக்கனின் மகன் சோமசேகர நாயக்கன் தரிசிக்க ஆசை கொண்டான். கௌரவ துர்க்கம் வழியாக தீர்த்தபுரம் சென்று அங்கு இருந்து கொண்டு சிருங்கேரிக்கு தன் மந்திரியை அனுப்பினன். குருவிடம் இந்தத் தகவல் தெரிவிக்கப்பட்டதும் அரசனை உடனே வரச்சொல்லிவிட்டு சிருங்கேரியை தோரணங்களால் நன்கு அலங்கரிக்கச்செய்து அரசன் தங்குவதற்குத் தகுதியான விடுதியையும் ஏற்பாடு செய்தார். அரசன் சிருங்கேரியை அடைந்ததும் தன் தலைமை நகரத்தை விட மிகவும் அழகாக வும் அமைப்புள்ளதாயுமிருக்கும் சிருங்கேரியைக் கண்டு ஆனந்தப்பட்டான்.

அங்கு ஸ்ரீமலஹானிகரேசுவரரை தரிசித்துவிட்டு துங்காநதி யின் கரையில் உள்ள விசாலமான மடத்தில் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீஸ்வாமிகளைக்கண்டு வணங்கினன். இருவரும் சாரதா லயம் சென்று தர்சித்தார்கள். குருவும் அரசனை ஆசீர்வதித்து அவனுடைய அந்தஸ்துக்குத் தக்க மரியாதைகளையும் வழங்கினர். அரசனும் " தங்களுடைய தபோ மகிமையினல் இந்த ராஜ்யமும் தனமும் எனக்கு நிலைத்திருக்கிறது " என்று பணிவுடன் தெரிவித்தான். பிறகு அரசன் மந்திரியிடம் " எனக்குக் கீர்த்தியை உண்டுபண்ணுவதாயும் குருவிற்கு ஸம்மதமாயுமுள்ள ஒரு ஸத்காரியத்தை சீக்கிரம் செய்து வைப்பாய் " என்று உத்தரவிட்டு அரசன் கலசபுரம் சென்றான். வீரசைவ சமயத்தில் மிகவும் பற்றுதலுள்ள மந்திரி மனதில் கெட்ட எண்ணம் கொண்டு அரசனின் அபிப்ராயத்திற்கு விரோதமாக ஜகத்குருவின் மடத்திற்கு இருபக்கங்களிலும் இரண்டு சைவ மடங்களைக் கட்டுவித்தான்.

ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் ஸ்ரீமடம் அதிகாரி களுடனும் முக்ய சிஷ்யர்களுடனும் இதுபற்றி ஆலோசித்து மஹாதபஸ்வியானபடியால் சிறிதும் பயமில்லாமல் தைரியமா

யிருந்தார். இருந்தாலும் சைவ ஜனங்கள் பெருகி அதனால் பிராமணர்களுக்குத் தொந்தரவு ஏற்படவே மனவருத்த மடைந்த ஆசார்யாள் அங்கு இருக்க விரும்பாமல் யாத்திரையாகப் புறப்பட்டு குடுபபுரம் சென்றார். நகர மஹாஜனங்களும் கூடச்சென்றனர். அங்கு பூஜை உத்ஸவங்களை மிகவிமரிசையாக நடத்தி வருவதைக்கண்டு ஸந்தோஷம் கொண்ட ஈசுவரனும் "உன் எண்ணம் நிறைவேற சிலநாள் இங்கேயே தங்கி இரு" என்று உத்தரவு செய்தார். ஆசார்யாளும் அங்கேயே தங்கி பூஜைகளைச் செய்துகொண்டு ஜனங்களுக்கு அநுக்ரஹம் செய்துகொண்டிருந்தார்.

ஸோமசேகர மன்னனும் கலசபுரத்திற்கும் குக்யபுரத்திற்கும் சென்று தர்சித்துவிட்டு மங்களபுரம் சென்றவன் சிருங்கேரி ஆசார்யாள் சிருங்கேரியை விட்டுக் கிளம்பி குடுபபுரத்தில் தங்கியிருக்கும் விருத்தாந்தமறிந்து மந்திரிகள் ஸைன்யங்களுடன் புறப்பட்டு வேகமாக வந்து ஆசார்யாளை பூஜித்து இங்கு வந்ததன் காரணத்தை அடிக்கடி வினவினான். ஆசார்யாள் உண்மைக் காரணத்தை அவனிடம் சொல்லாமல் ஸமாதான வார்த்தைகள் சொல்லி அவன் சமர்ப்பித்த காணிக்கைகளைப் பெற்றுக்கொண்டு ஆசீர்வதித்தார். அரசன் குருவின் அநுமதியைப் பெற்றுத் தன் நகரம் சென்றான்.

---

# பதினேழாவது ஸர்க்கம்

ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகள் அநந்தேசுவரரின் உபதேசத்தை எண்ணிக்கொண்டு சிலநாட்கள் குடுபபுரியில் தங்கி ரத்னம் பதித்த ஸ்வர்ணக் கவசமும் தங்கம் வெள்ளியில் பூஜா சாமான்களும் ஸ்வாமிக்கு ஸமர்ப்பித்து தீபோத்ஸவம் முதலானவற்றை நடத்தி வைத்தார். அப்பொழுது மங்கள புரியின் அரசன் ஆசாரியாரை தன் தேசம் வந்து சில காலம் தங்கும்படி பிரார்த்தித்தான் அதற்கு இணங்கி யதீசுவரரும் அங்கு சென்று சில காலம் தங்கி அரசனுடைய மரியாதை காணிக்கைகளைப் பெற்றுக்கொண்டு அவனுக்கு சந்தோஷம் அளித்தார். அங்கிருந்து காரஞ்ச தேசத்துக்குச் சென்று சில காலம் வசித்துப் பின் மத்வமத மடாதிபதிகளால் பிரார்த்திக் கப்பட்டு உடுப்பிக்குப்போய் ஸ்ரீ கிருஷ்ணனை தரிசித்தார். அங்கிருந்து புறப்பட்டு ஹாலாடி நகரம் சேர்ந்தார். அங்கு ஸ்ரீ நரசிம்ம மூர்த்தியை சந்தோஷமாக பூஜித்து பின் பு தீர்த்தராஜபுரத்துக்குச்சென்றார்.

இங்குள்ள துங்கபத்ராவின் பிரவாஹ அழகையும் பரம புண்ய ப்ரதமான பாப நாசினி தீர்த்தத்தையும் விசுவேசர் ஆலயத்தையும் கண்டு மிகுந்த சந்தோஷமடைந்தார். அங்குள்ள பிராம்மணர்களால் பிரார்த்திக்கப்பட்டு சிலநாள் அங்கு வாஸம் செய்தார். இங்கு பல தேசங்களிலிருந்தும் பிராம்மணர்கள் வந்து ஆசாரியாரை வணங்கி அனுக்கிரகம் பெற்றார்கள். ஆனால் ஆசாரியாள் சிருங்கேரியிலுள்ள தன் மடத்தை விட்டு விட்டு வேறு இடத்தில் தங்கியிருப்பதுபற்றி சிஷ்யர்களான அரசர்களுக்கு மனதில் வருத்தம் ஏற்பட்டது. ரகசிய உத்தியோகஸ்தர்களை அனுப்பி இதன் காரணத்தைத் தெரிந்து வரும்படி அரசர்கள் செய்தார்கள். காரணம் தெரிந்தபின் எல்லோரும் கூடி ஆலோசித்து இதைக்குறித்து இக்கேரி மகாராஜாவுக்கு கடிதமும் எழுதினார்கள். ஆனால் இக்கேரி ராஜாவின் துஷ்ட மந்திரி, இந்தக் கடிதத்துக்கு மதிப்புக் கொடுக்காமலும் அதை அரசனிடம் சேர்க்காமலும் தூதர்களை அலக்ஷியம் செய்ததால் தூதர்கள் திரும்பி வந்து அரசர்களிடம் விஷயத்தைத் தெரிவித்தார்கள். இது தெரிந்து எல்லா அரசர்களும் சேர்ந்து மிகுந்த கோபம் கொண்டு யுத்தத்துக்குக் கிளம்பினார்கள்.

இந்த சமயத்தில் சாஹூமஹாராஜன் "கோபம் கொண்ட அரசர்களை ஸமாதானப்படுத்தி, சிருங்கேரியில் புதிதாகக் கட்டப்பட்ட சைவ மடங்களை சீக்கிரம் இடித்து ஸ்ரீ ஜகத்குருவை சிருங்கேரியில் தனது மடத்தில் வஸிக்கும்படி செய்" என்று அப்பொழுது கர்னாடக தேசத்தில் முகாம் செய்திருந்த தனது மந்திரி பாஜிராயருக்கு உத்தரவு அனுப்பினான். உத்திரவு பெற்ற மந்திரி யுத்த ஸந்நத்தனாக தேவையான சைனியங்களை அழைத்துக்கொண்டு வழியில் சில சிற்றரசர்களையும் சேர்த்துக்கொண்டு இக்கேரி ராஜ்யத்தை முற்றுகையிட்டான். மந்திரியான பாஜிராயர் ஒரு தூதனை வேணுபுரத்துக்கு அனுப்பி விஷயங்களைத் தெரிவிக்கச் செய்தான். இதைக்கேட்டு மந்திரி ஸேநாதிபதியை ஸைன்யங்களுடன் எதிர்த்து யுத்தம் செய்ய அனுப்பினான். இரு ஸைனியங்களுக்கும் பெரிய யுத்தம் நடந்தது. பாஜிராயனுடைய ஸைன்யங்கள் கோட்டைகளை இடித்து அகழ்களை நாசம் செய்து அங்குள்ள வீரசைவ மடங்களையும் நெருப்புக்கிரையாக்கினர்.

பிறகு மஹாராஜன் இந்த ஸம்பவங்களுக்கு மூலகாரணம் என்ன என்று மந்திரியைக் கேட்டான். "நீங்கள் சிருங்கேரிக்கு போய் வந்ததுமுதல் ஜகத்குரு சிருங்கேரியை விட்டு வெளியே சென்று வேறிடத்தில் ஸ்திரமாக வஸிக்கிறார், அதுதான் காரணம்" என்று மந்திரி சொன்னான். 'நான் சிருங்கேரி போய் வந்ததற்கும் ஆசார்யாள் சிருங்கேரியை விட்டு வெளியே போனதற்கும் என்ன ஸம்பந்தம்' என்று மறுபடியும் அரசன் கேட்கவே மந்திரி கூறினான். 'அப்பொழுது அங்கு நாம் மடம் கட்டியதனால் ஆசார்யர் கோபமடைந்து அரசன் அநுசிதமான காரியத்தைச் செய்துள்ளபடியால் நாம் இனி இங்கு இருக்கவேண்டாம் என்று எண்ணி அதைவிட்டு வெளியே போய்விட்டதாகத் தெரிகிறது. அவருடைய சிஷ்யனை சாஹூராஜன் தன் மந்திரி பாஜிராயனை அந்த மடத்தை இடிக்கும்படி உத்தரவிட்டிருக்கிறான். அவன்தான் நம் ராஜ்யத்தையும் துன்புறுத்துகிறான்' என்றான்.

எல்லாவிஷயங்களையுமறிந்துகொண்ட அரசன் "ஏதாவது ஒரு தர்மகைங்கர்யத்தைச்செய்யும்படியாகத்தானே நான் சொன்னேன். மடத்தைக்கட்டும்படி யார் சொன்னது? உன் தவறுதலால்தான் இத்தனை கஷ்டமும் வந்திருக்கிறது.

ஆகையால் நீயே போய் அந்த மடத்தை இடித்துவிட்டு ஆசார்யாளையும் ஸமாதானம் செய்து சிருங்கேரிக்கு அழைத்துச்செல்'' என்று உத்தரவிட்டான். மந்திரியின் உத்தரவுப்படி இரண்டு மடங்களும் இடிக்கப்பட்டன. வீர சைவர்கள் பயந்து ஓடிவிட்டனர் பிறகு மந்திரி தானே நேரில் சென்று எல்லா விபரங்களையும் சொல்லி, தன்னை மன்னிக்க வேணுமென்றும் சிருங்கேரிக்குத்திரும்பிச்செல்ல வேணுமென்றும் ஆசார்யாளை பிரார்த்தித்தான். ஆசார்யாளோ இதைக்கேட்டு "இரண்டு மடங்கள் இருந்தாலும்சரி போனாலும்சரி அதில் எங்களுக்கு அக்கரையில்லை அரசனின் அதிருப்தியைப் போக்கவேண்டுமென்பதுதான் எங்கள் நோக்கம்'' என்று கூறினார்கள்.

பிறகு அரசன் ஸமாதானம் செய்வதற்காக ஒரு மந்திரியை பாஜிராயனிடம் தூது அனுப்பினான். அவனும் சென்று "தாங்கள் எந்த காரியத்தை உத்தேசித்து வந்தீர்களோ அதை அரசனே நடத்திவிட்டார். ஆதலால் உங்கள் இருவருக்கும் நட்பு வளரட்டும்'' என்று சொன்னான் அவனும் இதை ஏற்றுக்கொண்டான். தூதர்கள் மூலம் இந்த விஷயம் அறிந்த அரசன் எல்லாவற்றையும் ஆசார்யாளுக்குத் தெரியப் படுத்தினான்.

இதன்பின் சிருங்கேரிஜகத்குரு புறப்பட்டு சித்தகிரிக்குச் சென்று ஸ்ரீகணபதியை ஆராதித்துவிட்டு அங்கிருந்து மாண்டவ்யமுனிவரின் ஆசிரமம் அடைந்து ஹரதத்தநகரம் சென்று அங்கு தன்னுடைய மடத்தில் வாசம்செய்தார்.

---

## 17-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

பக்கம் 82 :—

கி. பி. 1726-1727 வருஷங்களில் பாஜிராயன் கர்னாடக தேசத்தில் சண்டை செய்து எங்கும் ஜயமடைந்தான் சோமசேகர நாயக்கனும் பாஜிராயனால் ஜயிக்கப்பட்டு மஹாராஷ்ட்ர அரசர்களுக்கு "சௌத்'' என்ற பெயருள்ள கப்பம் கட்டுவதாக ஒப்புக்கொண்டான்.



## பதினெட்டாவது ஸர்க்கம்

ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் ஹரதத்தபுரத்தில் தம் மடத்தில் வஸித்து வந்தார். ஸ்ரீ சங்கரபகவத்பாதரால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட சிருங்கேரி மடத்தை விட்டு தபஸ்வியான ஆசார்யாள் மனக்கிலேசத்துடன் வேறு ஸ்தலத்தில் வாஸம் செய்து வந்ததால் எங்கும் துர்பிக்ஷம் ஏற்பட்டது. உணவு கிடைக்காததால் ஜனங்கள் தம்தம் ஊரைவிட்டுக் கிளம்பி ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதியை வந்து சரணமடைய, அவரும் ஏராளமான பணத்தை சிலவழித்து கிடைக்கமுடியாமலிருந்த தான்யங்களை வரவழைத்து அவர்களுக்குக்கொடுத்துக் காப்பாற்றினார். மழை வருவதற்காக வைதிக பிராமணர்களைக்கொண்டு வருண ஜபமும் செய்வித்தார் உடனே ஏராளமாக மழை பெய்து எங்கும் துர்பிக்ஷம் நீங்கியது. குளங்கள் நிரம்பின. பயிர்கள் வளர்ந்தன. ஏராளமாக தானியங்கள் உற்பத்தியாயின இதுகண்ட ஜனங்கள் இது யாரும் செய்ய முடியாத காரியம். இவர் மனுஷ்யர் அல்ல தேவதையே என்று கொண்டாடினார்கள்.

ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகள் ஸ்ரீ சாரதாதேவிக்கு நவராத்ரி உத்ஸவம் நடத்த எண்ணி சிருங்கேரிக்குப் புறப்பட்டார். ஆனால் அரசனுடைய உத்திரவுக்கு மாறாக நடக்கும் மந்திரி நிர்வாணி வழியில் இவருக்குப் பலவித இடைஞ்சலை உண்டுபண்ணினான். ஸ்ரீ சாரதாம்பாளை தரிசனம் செய்து பூஜை செய்யும் வரையில் பிக்ஷை செய்வதில்லை என்று ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதிகள் விருதம் கொண்டார். அரசன் ஸமாதானத்துக்காகத் தான் அனுப்பிய மந்திரியும் ஸைன்யமும் திரும்பிவராததால் கவலை கொண்டு மந்திரியைப்பார்த்து "குரு சிருங்கேரி போய்ச் சேர்ந்தாரா இல்லையா" என்றான். அதற்கு மந்திரி "இன்னும் சிருங்கேரிக்குச் செல்லவில்லை. ஹரிகேரிபுரத்திலேயே இருக்கிறார்" என்றான். அதற்கு அரசன் "உடனே நீர் போய் குருவை வணங்கி ஸமாதானப்படுத்தி சிருங்கேரிக்கு அழைத்துபோகவும். இதற்கு எவ்வித இடைஞ்சலும் செய்யாதே" என்று ஆக்ஞை இட்டான்.

ஆனால் கெட்ட புத்தியுள்ள மந்திரி ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகளிடம் வந்து அரசன் சொன்னதை மறைத்து பயத்தை உண்டுபண்ணக்கூடிய வார்த்தைகளைச் சொன்னான். "ஹே

குரோ, என் அரசனுக்கு மனவருத்தம் ஏற்பட்டிருக்கிறது. 'மந்திரி சைனியத்துடன் போனவன் திரும்பிவரவில்லை. உங்களால் ராஜ்யத்திற்கு பெரும் உபத்திரவம் ஏற்பட்டிருக்கிறது' என்று அரசன் சொன்னான். அரசர்களின் மனதில் உள்ள எண்ணங்களைக் கண்டுபிடிப்பது கடினம். ஆகையால் இதை நீங்களே அறிந்து கொள்ளுங்கள், என்று உண்மையை மறைத்து மாற்றிச்சொன்னான்.

இது கேட்டு குருநாதர் "எங்களால் இந்த நிலைமை ஏற்பட்டது என்று அரசன் மனதில் இருக்குமானால் நான் சொல்வதைக்கேள். தர்ம வழியை அனுஸரித்து நடக்கும் எங்களுக்கு அரசனுடைய பணத்தினாலோ ராஜ்யத்தினாலோ ஆகவேண்டியது ஏதும் கிடையாது. ஆனால் தர்மத்தினால் தான் தேசத்தில் தனமும் தான்யமும் நிறைந்திருக்கும் என்பது எங்கள் எண்ணம். ஸ்ரீ சங்கராசார்ய தபோபலத்தால் ஏற்பட்ட இந்த மடத்தின் சிஷ்யர்கள் எல்லா திசைகளிலும் வாஸம் செய்துவருகிறார்கள் என்பது உண்மை. ஆனால் யாரையும் இந்தக்காரியத்தை செய்யும்படி நான் தூண்டவில்லை. அப்படிஇருந்தபோதிலும் உங்கள் அரசனுக்கு இவ்விஷயத்தில் சந்தேகம் மனதில் இருந்தால் நானே நேரில் வந்து அதை நிவர்த்தி செய்கிறேன். நீங்கள் அரசனுக்குத்தகவல் கொடுங்கள். அரசன் என்னை சந்தித்த பின்பு என்ன சொல்லுகிறாரோ அப்படியே நடந்துகொள்ளலாம்" என்று சொன்னார். அப்படியே செய்யுங்கள் என்று சொல்லி மந்திரி திரும்பிச் சென்றான்.

பிறகு சில சிஷ்யர்களையும் ஆயுதபாணிகளான சில சிப்பாய்களையும் காவலாகக்கொண்டு ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகள் புறப்பட்டு ராமசந்திரபுரம் சென்றார். ராமர் ராவணனைக்கொன்ற பின் ரக்தம் தோய்ந்த அம்புகளை அலம்பியதால் சராவதி என்ற பெயர் கொண்ட நதி இங்கு ஓடுகிறது. வேணுபுரத்தில் வாழும் ஜனங்கள் ஆசார்யாள் வந்திருப்பதை அறிந்து ராமசந்திரபுரம் வந்து ஜகத்குருவை தர்சித்து வணங்கினார்கள். இவ்விதம் சில நாட்கள் சென்றும் கூட துஷ்ட மந்திரி ஆசார்யாள் வந்திருக்கும் விபரத்தை அரசனிடம் தெரிவிக்காமலே இருந்துவிட்டான். ராஜா கூப்பிடாததால் ஆசார்யாள் வேணுபுரம் செல்லாமல் சாரதாம்பாளை தர்சிக்கும் ஆவலால் சிஷ்யர்களோடும் கத்தி

தாங்கிய காவலர்களுடனும் புறப்பட்டு மாகமாதம் கிருஷ்ண பஞ்சமியன்று சிருங்கேரிக்கு வந்து சேர்ந்தார். ஆசார்யாளைக் கண்ட ஜனங்கள் ஆச்சர்யம் கொண்டு ஆனந்தம் அடைந்தார்கள். ஸ்ரீஸச்சிதானந்தபாரதிகள் ஸ்ரீமல்லிகார்ஜுன ஸ்வாமிக்கு ரதோத்ஸவத்தை நடத்திவைத்து தேவி பூஜையையும் செய்வித்தார். ஸுவாஸினிகளுக்கு ஏராளமாக வஸ்திரம் கொடுத்து எல்லோருக்கும் அன்னதானம் செய்தார். பின்பு அங்கிருந்து தீர்த்தபுரம் சென்றார்.

இப்படி இருக்க பாஜிராவ் எல்லா விருத்தாந்தத்தையும் ரகஸிய தூதர்கள் மூலம் தெரிந்துகொண்டு தன்னுடன் கூட வந்துள்ள மந்திரியைப்பார்த்து "குரு சிருங்கேரி போய்சேரவில்லை என்று கேள்விப்பட்டேன் இதன் காரணம் என்ன நீ உபேக்ஷைசெய்தாயா அல்லது உன் அரசன் உபேக்ஷை செய்தானா? சொல்" என்றான் அதற்கு மந்திரி அவனிடம் பயம்கொண்டு 'நானே நேரில்போய் விசாரித்து குருவை அவருடைய பட்டணமாகிய சிருங்கேரியில் சேர்த்துவிடுகிறேன்' என்று சொல்ல பீஷ்வாவின் முக்கிய மந்திரி, செய்யவேண்டிய காரியத்தை உத்தரவிட்டு நம்பிக்கையுள்ள தன் தூதர்களையும் அந்த மந்திரியுடன் குரு ஸந்நிதிக்கு அனுப்பினான். இப்படிப் புறப்பட்ட மந்திரி இக்கேரி சென்று அரசனைக்கண்டு எல்லா விஷயங்களையும் ரகஸ்யமாகத்தெரிவித்தான். இதைக் கேட்டபின்பு, இக்கேரி அரசன் இது தன் பிரதானமந்திரி நிர்வாணியின் சூழ்ச்சி என்ற உண்மையை அறிந்து கொண்டு அந்த மந்திரிக்கு உத்தரவு செய்தான் "நீ ஆசார்ய ஸந்நிதிக்குச்சென்று காணிக்கைகளை ஸமர்ப்பித்து வணங்கி மன்னிக்கும்படி பிரார்த்தித்து சிருங்கேரிக்கு அவரை அழைத்து செல்லவேண்டும்" என்று.

அந்த சேனாபதியும் ஸ்ரீஸச்சிதானந்த பாரதிகளை வணங்கி "சில துர்புத்திகளால் இந்தக்காரியம் செய்யப்பட்டது அரசனுக்கு இது விஷயம் ஒன்றும் தெரியாது இதில் அரசன் எவ்விதத்திலும் தவறு செய்தவனல்ல தேசத்தில் உள்ள எல்லா கஷ்டங்களும் உங்களுடைய தபஸ்ஸினால் நிவர்த்திக்கப்பட்டு எங்களுக்கு க்ஷேமம் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது யாரோ ஒரு துஷ்டன் செய்த காரியத்தை மறந்து சிருங்கேரிக்குப் புறப்பட்டுச்சென்று தன்னை அனுக்ரஹிக்க வேண்டும் என்று அரசன் தெரிவிக்கச் சொன்னதாக

ஸேனுபதி குருவினிடம் வணக்கத்துடன் விஜ்ஞாபனம் செய்து கொண்டான். இது கேட்டு ஸ்ரீஸச்சிதானந்த பாரதிகளும் ஸேனுபதியை ஆசீர்வதித்து தர்மத்துடன் அரசன் ராஜ்யத்தை பரிபாலனம் செய்தால் அங்கு கெடுதி ஏற்படாது ஸோமசேகர னுக்கு மங்களம் உண்டாகட்டும் என்று ஆசி கூறி "துஷ்டர் கள் சூழ்ந்திருந்தால் அரசனுடைய நற்குணங்கள் பிரகாசிக்காது. பின்னுல் ஸத்ஸங்கம் ஏற்பட்டதும் அவை பிரகாசிக்கும் இந்த காலத்தை எதிர்பார்த்துத்தான் நானும் காத்திருந்தேன்." என்று சொல்லி அந்த மந்திரியாலும் தன் பரிஜனங்களாலும் நகரமாந்தர்களாலும் பின் தொடரப் பட்டவராக சிருங்கேரிக்குப்போய்ச் சேர்ந்தார். அங்கு வீதிகளில் ஊர்வலமாக வந்து எல்லா தேவாலயங்களுக்கும் சென்று தரிசித்துவிட்டு தன் மடம் வந்துசேர்ந்தார்.



## பத்தொன்பதாவது ஸர்க்கம்

ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் சிருங்கேரியில் வாஸம் செய்துகொண்டு ஸ்ரீ மடத்தில் சாஸ்திரமறிந்த சில்பிகளைக் கொண்டு ஸுவர்ணத்திலும் வெள்ளியிலும் பல தேவதா மூர்த்திகளைச் செய்வித்து ஜபஹோமாதிகள் நடத்தி பிரதிஷ்டை செய்வித்தார். சில தினங்கள் சென்றபின் மூகாம்பிகையை தர்சனம் செய்ய ஆவல் கொண்டு கொல்லா புரம் சென்றார். பிறகு ஸமுத்ர ஸ்னானம் செய்து கோடீசுவரரை தர்சித்து ஹாலாடி நகரம் சென்று லக்ஷ்மீந்ருஸிம்ஹரைப் பூஜித்தார். அங்கு புதிதாக ரதம் செய்வித்து ரதோத்ஸவம் நடத்திவிட்டு சிருங்கேரிக்குத் திரும்பி வந்தார்.

இவருடைய கீர்த்தியைப்பற்றி கேட்ட ஸ்ரீரங்கபட்டணத்து அரசன் இவருக்கு காணிக்கையாக சிறந்த யானையையும், பட்டு வஸ்திரங்களையும் அனுப்பிக்கொடுத்தான். ஆகம சாஸ்திர வித்வான்களை வரவழைத்து ஸ்ரீ குருநாதர் பவானி தேவி கோவிலில் அஷ்டபந்தனகும்பாபிஷேகம் செய்வித்தார். ஸ்ரீமல்லிகார்ஜுன ஸ்வாமிக்கும் ஸ்ரீ பவானி தேவிக்கும் கல்யாண உத்ஸவத்தை சாஸ்திரமுறைப்படி 5 நாட்கள் வெகு விமரிசையுடன் நடத்திவைத்தார்.

ஸ்ரீ சிருங்கேரியில் உள்ள இவ்வளவு வைபவங்களைப்பற்றிக் கேள்வியுற்ற ஸேதுபதி விசேஷமான காணிக்கைகளை கொடுத்தனுப்பினான். அவைகளைப் பெற்றுக்கொண்டு ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகள் தனுஷ்கோடியில் சிவபிரதிஷ்டை செய்ய எண்ணினார். ஆகவே அங்கு ஸ்ரீ ராமநாதாலயத்தில் வித்யா சங்கர லிங்கத்தை பிரதிஷ்டை செய்வித்தார். அதன் பூஜைக்காக ஸேதுபதி அரசனும் பூதானம் ஏற்படுத்தினான்.

இப்படி அடிக்கடி சிருங்கேரியில் விசேஷ உத்ஸவங்கள் ஹோமங்கள், இவைகளை நடத்திக்கொண்டு வித்வான்களை ஆதரித்துக்கொண்டு அரசர்களை வாழ்வித்துக்கொண்டு உலக க்ஷேமத்துக்காக ஸ்ரீ சாரதா தேவியையும் மலஹானி கரேசுவரரையும் ஸ்ரீ பவானி தேவியையும் பிரார்த்தித்துக் கொண்டு யதீசுவரரான ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீஸ்வாமிகள் சிருங்கேரியில் வளர்பிறை சந்திரன்போல் விளங்கிவந்தார்.

## 19-வது ஸர்க்கத்தில் குறிப்புகள்

பக்கம் 88 :—

ஸ்ரீரங்கபட்டணத்து அரசர் ஸ்ரீ கிருஷ்ணராஜவாடேயார் II. இவருடைய காலம் கி. பி. 1734–1766.

இந்த பவானீ கல்யாணத்தையொட்டி சில சுலோகங்கள் இந்த ஜகத்குருக்களால் செய்யப் பட்டுள்ளன. இப்பொழுதும் விவாஹோத்ஸவத்தில் அவை பாடப்படுகின்றன. இவர்கள் ஆரம்பித்து நடத்திய பத்ததிப்படியே இப்பொழுதும் சிருங்க கிரியில் பவானீ விவாஹோத்ஸவம் நடத்தப்பட்டு வருகிறது. முதலாவதாக ஆனந்த வருஷத்தில் (கி. பி. 1734) இந்த பவானீ மல்லிகார்ஜுன விவாஹ மஹோத்ஸவம் ஆரம்பிக்கப் பட்டது. ஐந்து நாட்கள் நடைபெறும் இந்த விவாஹ உத்ஸவத்தில் ஒவ்வொரு சிறிய நிகழ்ச்சியும்கூட மிக அழகாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது இந்த விபரங்களை மூலநூலை வாசித்துத் தெரிந்துகொள்ளலாம்.

அப்பொழுது முத்துக்குமார ரகுநாத ஸேதுபதி அரசாக்ஷி செய்து வந்தான்.

கி. பி. 1734–1735ல் ராமேச்வர க்ஷேத்ரத்தில் வித்யா சங்கர லிங்கப்ரதிஷ்டை நடைபெற்றிருக்கலாம்.



# அனுபந்தம்-1

[குருவம்சகாவ்யம் என்ற வடமொழி நூல் சுமார் கி. பி. 1735ம் வருஷத்தில் எழுதப்பட்டது. அந்தசமயம் சிருங்கேரி பீடத்தை அலங்கரித்தவர் ஸ்ரீ சச்சிதானந்த பாரதீ II கி. பி. 1705 முதல் 1741 வரை 27-வது பீடாதிபதியாக இருந்தார். இதற்குப்பின் இப்போது சுமார் 230 வருஷங்கள் சென்று விட்டபடியால் 1741 முதல் இன்று வரை சிருங்கேரி பீடத்தில் அமர்ந்து அனுகிரகித்த ஆசாரியர்களின் வரலாற்றை சுருக்கமாக எழுதுவோம்.]

கி பி. 1741 முதல் 1767 வரை ஸ்ரீ அபிநவசச்சிதானந்த பாரதீ (1) 28-வது பீடாதிபதியாக அமர்ந்தார் இவருக்கு பேட்னூரில் அரசாண்ட பஸவப்பநாயக்கர் (2) சென்னபச வப்பநாயக்கர், ராணிவீரம்மகாரு மைசூர்மகாராஜா கிருஷ்ண ராஜஉடையார் (2) பேலூரில் அரசாண்ட வெங்கடாத்ரி நாயக்கர் முதலியவர்கள் மரியாதைகள் செலுத்தி சிருங்கேரி பீடத்துக்கு ஏராளமான ரத்னங்கள், பூமிகள் இவைகளை காணிக்கையாக அளித்தார்கள். மைசூர் மகாராஜா அவர் கள் தம் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு உத்திரவிட்டு ஆசாரியரின் யாத்திரை காலங்களில் மரியாதைகள் செய்வ துடன், பந்தோபஸ்துக்களும் கொடுத்து எல்லாவஸதிகளையும் செய்விக்கும்படி செய்தார். சிருங்கேரி ஸம்ஸ்தானத்துக்கு வரவேண்டிய பாக்கிகளை வசூலிக்க உதவி செய்ததும் தவிற, சம்ஸ்தானத்துக்கு சிஷ்யர்களால் கொடுக்கப்பட்ட மற்ற பூமிகளையும் சர்வமானியமாக்கினார்.

பேஷ்வா மாதவருவ் ஜகத்குருவின் அக்ரபூஜைக்காக மானியம் ஏற்படுத்தினான். ரகுநாதராவின் வேண்டுகோளுக் கிணங்கி ஜகத்குரு புனாவுக்கு விஜயம் செய்தார். அப்போது மைசூரை ஆண்ட ஹைதர் அலி ஆசாரியாளுக்கு விலையுயர்ந்த காணிக்கைகளை புனாவுக்கு அனுப்பி தன் வந்தனங்களைத் தெரிவித்தார். யாத்திரை மத்தியில் நாஸிக் க்ஷேத்ரத்தை அடைந்த ஆசாரியாள் 1767ல் அங்கே விதேஹ முக்தி அடைந்தார். இவருடைய ஸமாதி இப்போதும் நாஸிக் ஸ்தலத் தில் ஸ்ரீ சிருங்கேரி ஸம்ஸ்தானத்தின் ஆதிக்யத்தில் இருந்து வருகிறது.

29வது பீடாதிபதியாக அமர்ந்தவர் ஸ்ரீ நரசிம்மபாரதீ (6) (1767–70) இந்த சமயத்தில் பேஷ்வாவுக்கும் மைசூர் ராஜ்யத்திற்கும் யுத்தம் நடந்ததால் ஆசாரியாள் சிருங்கேரிக்கு திரும்ப முடியவில்லை. ஆனால் மைசூர் மகாராஜா ஹைதர் அலி ஆசார்யாள் முகாமுக்கு கடிதம் எழுதினர். அதில் தான் ஆசார்யாளுக்கு எல்லா மரியாதைகளையும் கொடுத்து மடத்தையும் அதை ஒட்டிய தர்ம ஸ்தாபனங்களையும் நன்றாக காப்பாற்ற எல்லா உதவியும் செய்வதாகதெரிவித்தார். ஆனால் தம் யாத்திரையை முடித்துக்காண்டு திரும்புவதற்குள் நாஸிக் க்ஷேத்ரத்திலேயே இந்த ஆசாரியாளும் விதேக முக்தி அடைந்தார். இவருக்கு அங்கு அமைக்கப்பட்ட ஸமாதி இப்போதும் சிருங்கேரி மடத்தின் வசம் இருக்கிறது. பத்துவருஷ காலம் நாஸிக் பக்கத்தில் இருந்துகொண்டு சிருங்கேரிசம்ஸ்தானத்தை கவனித்துவந்த காலத்தில் பேஷ்வாவின் ஆதரவும் பணிவும் ஸ்ரீ மடத்துக்கு அதிகமாக ஏற்பட்டது.

ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ(3) ஸ்வாமிகள் 1770 முதல் 1814 வரை பீடத்தில் 30வது பீடாதிபதியாக அமர்ந்திருந்தார். 1780 வருஷத்தில் மைசூர் மகாராஜா ஹைதர் அலி கொடுத்த உத்திரவுப்படி சர்க்காரில் ஜகத்குருவுக்கு சகலவிதத்திலும் மரியாதைகளையும் ஒத்துழைப்பையும் காட்டவேண்டும் என்று ஏற்பாடு செய்தார்.

இவர் காலத்தில் மூன்றுவது மைசூர் யுத்தம் நடந்தது. அப்போது மைசூரில் திப்புசுல்தான் அரசராக இருந்தார். யுத்த காலத்தில் கொள்ளையில் ஈடுபட்ட சில சிப்பாய்கள் சிருங்கேரியில் புகுந்து கோவில்களையும் ஜனங்களையும் கொள்ளையடித்து பலவித நஷ்டங்களை உண்டுபண்ணினதைக் கேட்ட திப்புசுல்தான் வருத்தத்துடன் ஆசாரியாருக்கு எழுதுகையில் இப்படிப்பட்ட உன்னதமான புண்ணிய க்ஷேத்ரங்களுக்கும் குருவுக்கும் கெடுதலை செய்பவர்கள் சீக்கிரம் அழிவார்கள் என்று எழுதி அங்கு ஏற்பட்ட நஷ்டங்களை சரிசெய்ய ஏராளமான சொத்துக்கள் பல்லக்கு, யானை, முதலியவைகளை குருவுக்கு காணிக்கையாக அனுப்பினான். பல சந்தர்ப்பங்களில் திப்புசுல்தான் சிருங்கேரி ஜகத்குருவின் அனுக்கிரகத்தை தன் தேசத்தின் நன்மையின் பொருட்டு பிரார்த்தித்தான். ஒரு சமயம் மைசூர் நாட்டில் மழை இல்லாமல் பஞ்சம் வந்தபோது ஆசாரியாளை சதசண்டி, ஸஹஸ்ர

சண்டி முதலிய ஹோமங்களை செய்து, ஜனங்களுக்கு சுபிக்ஷத்தை உண்டுபண்ணும்படி திப்புசுல்தான் பிரார்த்தித்தான். இதற்கு செலவுக்கு வேண்டிய தொகைகளை சிருங்கேரியில் உள்ள கொப்பா தாசில்தாரை சர்க்கார் கஜானுவிலிருந்து மடத்துக்கு கொடுக்கும்படி உத்திரவிட்டான். சண்டியக்ஞமும் நடந்தது. மழையும் ஏராளமாய் பெய்தது. இதனுல் துர்பிக்ஷம் நீங்கியது. குருவின் அனுக்கிரகத்தால் யுத்தத்தில் தான் ஜயத்தை அடைந்ததற்கும், சுபிக்ஷம் ஏற்பட்டதற்கும், ஆசாரியாளுக்கு திப்புசுல்தான் நன்றியைத் தெரிவித்தான்.

இதன்பின் ஆசாரியாள் யாத்திரா மார்க்கமாக திருப்பதி சென்று காஞ்சிக்கு வந்தார் அங்கு ஆசார்யாள் தங்கி இருக்கும்போது அவருக்கு திப்புசுல்தான் எழுதிய கடிதத்தில் தன் பிதாவினுல் அந்த ஊருக்கு வழங்கப்பட்டு உள்ள கோவில் தர்மங்களையும், கோவில் திருப்பணி வேலையையும் சரிவர நடக்க அனுகிரகிக்கும்படி வேண்டினுன். திப்புசுல்தான் நேரில் தானே சிருங்கேரிக்குப்போய் ஆசாரியாளை தரிசிக்க பல தடவை முயற்சிகள் செய்தான். அரசாங்க வேலையினுல் போகமுடியாமல் போயிற்று. திப்புசுல்தான் ஆசாரியாளுக்கு பல கடிதங்கள் எழுதி இருக்கிருன். இக்காலத்தில் இருந்த மகாராஷ்டிர பீஷ்வாக்களும் மைசூரை சுற்றியுள்ள சிற்றரசர்களும் சிருங்கேரிக்கு பல கிராமங்களை காணிக்கையாக (ஸர்வமானியம்) அளித்தார்கள்.

மைசூரில் திப்புவுக்குப்பின் கிருஷ்ணராஜ உடையார் ஆளுகையில் 1803 வருஷத்தில் மைசூர் தேசத்தில் ஏற்பட்ட மழை இல்லாத பஞ்சத்தை நிவர்த்திக்கவேண்டி திவான் பூர்ணய்யாவின் வேண்டுகோளுக்கிணங்கி ஆசாரியாள் ஜபம், ஹோமம், விசேஷபூஜைகளையும் செய்து, மழை பெய்து மறுபடி சுபிக்ஷம் ஏற்பட்டது என்பதை திவான் பூர்ணய்யா எழுதியுள்ள கடிதங்கள் காட்டுகின்றன. ஆசார்யாள் 1805 வருஷம் யாத்திரையாக கிளம்பி சென்னை, திருப்பதி, காஞ்சி, மதுரை, ராமேசுவரம், திருவனந்தபுரம் முதலிய இடங்கள் சென்று பெங்களூர் மார்க்கமாக சிருங்கேரி வந்தார். ஹைதர் அலி, திப்புசுல்தான் காலம் முதலேயே சிருங்கேரி ஸம்ஸ்தானத்துக்கு அதன் எல்லைக்குள் ஏற்படும் சிவில் கிரிமினல் விசாரணைகளை நடத்த அதிகாரமும் கொடுக்கப்பட்டிருந்தது சிருங்கேரி பீடாதிபதி ஒருவருக்குத்தான் "அட்டபல்லக்கு"

ஏறிக்கொண்டுபோகும் கௌரவம் உண்டு என்று மைசூர் அரசாங்கம் உத்திரவிட்டது.

1812 வருஷம் ஆசாரியாள் ஹரக்கேரிப்பக்கம் யாத்திரை செய்யும் போது மைசூர்மகாராஜா கிருஷ்ணராஜ உடையாரால் சாதுர்மாஸ்யகால அனுஷ்டானத்துக்காக ஒரு கிராமத்தை ஸர்வமானியமாக அவருக்கு அளித்தார். யாத்திரையில் இருக்கும்போதே 1814ல் அங்கேயே ஆசாரியாள் விதேகமுக்தி அடைந்து விட்டார்.

இவருக்குப்பின் 31-வது பீடாதிபதியாக வந்த ஸ்ரீ அபிநவ சச்சிதானந்த பாரதீ (2) 1814 முதல் 1817 வரை மூன்று வருஷங்களே பீடாதிபதியாக இருந்தார். தன் முடிவு காலம் நெருங்கியதை உணர்ந்த ஆசாரியாள் விதேகமுக்தி அடைவதற்கு 6 நாள்களுக்கு முன்னமேயே சிருங்கேரி அக்கிரகாரத்தில் இருந்த ஒரு பிரும்மசாரியைத் தனக்குப்பின் சிருங்கேரி பீடாதிபதியாக இருக்கும்படி தீர்மானம் செய்து தெரிவித்து விட்டார்.

அப்படி நியமிக்கப்பட்ட பிரும்மசாரியே ஸ்ரீ நரசிம்ம பாரதி (7) யாக 1817 முதல் 1879 வரை 32வது சிருங்கேரி பீடாதிபதியாக விளங்கினுர். இவர் சிறு வயதிலேயே காசிக்குக் கால்நடையாகச்சென்று சாஸ்திரங்களைக்கற்றவர். பீடத்துக்கு வந்த பின்பு எல்லாசாஸ்திரங்களையும் தீரக்கற்ருர். மடத்தின் நிர்வாகத்தை பல வழிகளில் ஒழுங்கு செய்தார். தனக்கு 50 வயதிருக்கும்போதே அன்ன பிக்ஷையை விட்டு விட்டு பாகக்காயையே பிக்ஷையாக ஏற்றுக்கொண்டு உக்கிரதபசு செய்தார். இதனுல் ஜனங்கள் இவரை "பாகக்காய் சுவாமிகள்," என்றும் சொல்வார்கள். இவருக்கு தெலுங்கு, தமிழ், கன்னடம், மராட்டி, ஹிந்துஸ்தானி, ஸம்ஸ்கிருதம் முதலிய பல பாஷைகளிலும் பூர்ண பாண்டித்யம் உண்டு ஆகவே பல ஊர்களிலிருந்து வரும் சிஷ்யர்களுக்கு குருவிடம் நேரில் பேசி அனுக்ரஹம் பெறும் பாக்கியம் கிடைத்தது. தவறுகள் நடந்தால் அதைக் கண்டித்து சீர்திருத்தம் செய்யும் வழக்கம் இவரிடம் அதிகம். நாகபுரிக்கு யாத்திரை செய்கையில் அங்கு உதாசீனமாக இருந்த அரசனை தனக்கு மரியாதை செய்யும்படி செய்து அவனை மன்னித்து ஆசீர்வதித்தார்.

1838ல் ஆசார்யாள் யாத்திரையாக ராமேசுவரம் விஜயம் செய்திருந்தார்கள். அங்கே கோவில் பட்டர்களில் ஒருசாரார்

"கோடி தீர்த்தத்திலிருந்து தாங்கள் எடுத்துக்கொடுத்த தீர்த்தத்தைக் கொண்டுதான் ஆசார்யாளும் ஸ்னானம் செய்ய வேண்டும். இதை வேறு ஒருவரும் தொடவிடமாட்டோம்" என்று பிடிவாதம் செய்தார்கள். இதற்கு உட்படாமல் ஆசார்யாள் கோடி தீர்த்தத்தில் ஸ்னானம் செய்யாமல் வேறு ஒரு தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து அங்குள்ள ஜனங்களிடத்தில் "இது ஸர்வ தீர்த்தம். இதில் ஸ்னானம் செய்வதாலேயே தீர்த்த யாத்திரை பூர்த்தியாகும்" என்று ஆக்ஞை செய்தார்கள் இந்த விஷயம் எங்கும் பரவி அதுமுதல் யாவரும் ஸர்வ தீர்த்தத்திலேயே ஸ்னானம் செய்தார்கள். ஒருவரும் கோடி தீர்த்தத்தில் ஸ்னானம் செய்வதில்லை. கொஞ்ச நாளில் கோடி தீர்த்தத்தில் அசுத்தம் ஏற்பட்டுவிட்டது. பின்பு 1872ல் மதுரையில் முகாம் செய்துகொண்டிருந்த ஆசாரியரை கோவில் பட்டர்கள் நேரில் வந்து தரிசித்து மன்னிப்புக்கேட்க ஆசார்யாள் ராமேசுவரம் சென்று தன்னுடைய கமண்டலுவின் தீர்த்தத்தால் கோடி தீர்த்தத்தைப் பரிசுத்தப்படுத்தி அது முதல் அது ஜனங்களுக்கு உபயோகமாகும்படி செய்தார்.

இரண்டாவது தடவை மதுரைக்கு விஜயம் செய்தபோது இவருடன் இவருடைய சிஷ்யரும் (பின்னிட்டு ஸ்ரீ சச்சிதானந்த சிவாபிநவ நரசிம்ம பாரதியாக ஆனவர்) கூடவந்தார். அவருக்கு கோவில் பட்டர்கள் தகுந்த மரியாதை காட்டாத காரணத்தால் இரண்டு தேங்காய்களைக் கொண்டுவரச்செய்து அதில் ஸ்ரீ மீனாக்ஷியின் பூர்ண கலையை ஆகர்ஷணம் செய்து அதை ஸ்ரீமடம் பூஜையில் சேர்த்துவிட்டார். அன்று முதல் எல்லோரும் பட்டர்கள் உதவியின்றியே தாங்களே வெளியில் தேங்காய் உடைத்து மீனாக்ஷியை வழிபட ஆரம்பித்தார்கள். பின்பு கோவில் பட்டர்கள் ஆசார்யாளை வணங்கி மன்னிப்புக் கேட்க ஆசார்யாள் மதுரை சென்று மறுபடியும் கோவிலில் வழக்கப்படி ஸ்ரீ மீனாக்ஷி தேவியை பட்டர்கள் உதவியுடன் பூஜிக்கும்படி செய்தார். இதுபோல் பல நிகழ்ச்சிகள் உண்டு.

மைசூர் ராஜ்யம் பிரிட்டிஷ் அதிகாரிகள் வசம் வந்த பின்பும் சிருங்கேரி மடத்துக்கு ஏற்பட்டிருந்த மரியாதைகள் காப்பாற்றப்பட்டு வந்தன. வடஇந்திய யாத்திரை சென்று திரும்பிய ஆசாரியாளுக்கு வயது 60 இருக்கையில் தனக்குப் பின் வரவேண்டிய சிஷ்யரை நியமிக்கத் தீர்மானித்தார்.

மைசூரில் ஆஸ்தான வித்வானாக இருந்த லக்ஷ்மீநரஸிம்ஹ சாஸ்திரிகளின் தம்பியான சிவசுவாமி என்ற சிறுவனைத் தேர்ந்தெடுத்து ஸந்நியாஸம் கொடுத்து ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவ நரசிம்மபாரதி என்ற யோக பட்டமும் சூட்டி தன்னுடன் யாத்திரைக்கும் அவரை அழைத்துச்சென்றார். தமிழ்நாடு கேரளம் மைசூர் பிரதேசங்கள் முழுவதும் இருவர்களும் யாத்திரை செய்து 1877ல் சிருங்கேரிக்கு திரும்பினார்கள். 1879ல் தன் முடிவுகாலம் நெருங்கியதை உணர்ந்த ஸ்ரீ நரசிம்ம பாரதிகள் தம் சிப்பந்திகளைப் பார்த்து "கோகர்ணம் போக வேண்டும், பல்லக்கு கொண்டு வா" என்றார். சற்றுநேரம் கழித்து "என்ன வேகமப்பா. வெகுசீக்கிரம் கோகர்ணத்துக்கு கொண்டுபோய் திரும்பவும் சிருங்கேரிக்கு அழைத்து வந்துவிட்டார்கள் ஸ்ரீ மடம் போகிகள்" என்றார். இதே சமயத்தில் கோகர்ணத்தில் இருக்கும் கோவில் பூஜை செய்யும் பட்டருடைய மனதில் ஒரு காக்ஷி தோன்றியது. சிருங்கேரி ஜகத்குரு அங்குவந்து கோவிலுக்குள் நுழைந்து தரிசித்து திரும்பும்நிலை கண்டார். மகான்களுக்கு செய்யமுடியாதது எது?

இதற்குப்பின் 1879 முதல் 1912 வரை இந்த பீடத்தில் அமர்ந்திருந்தவர் 33வது பீடாதிபதிகளான ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவ நரஸிம்ம பாரதிகள். உபயபாரதியாகப் பிறந்த ஸ்ரீ ஸரஸ்வதி தேவி மறுபடி தன் இருப்பிடம் போக யத்தனிக்கையில் வனதுர்க்கா மந்திரத்தால் அவளைக் கட்டுப் படுத்தி அவளுடைய அம்சமான ஸர்வஜ்ஞ ஸ்வரூபத்தை சிருங்கேரியில் ஸ்ரீ ஆதிசங்கரர் ஸ்தாபித்து அதை ஸ்ரீ சாரதா ரூபமாக்கினார் என்பது நாம் அறிந்ததே. ஸ்ரீ சுரேசுவராசார்யார் முதல் இந்த சிருங்கேரி சாரதா பீடத்தில் அமர்ந்திருக்கும் ஒவ்வொரு ஆசாரியரிடமும் ஸ்ரீ சாரதா தேவி பிரஸன்னமாகி இருந்து உலகத்தை ரக்ஷிக்கிருள் என்பதாக நாம் கேள்விப் படுகிறோம். இத்துடன் ஆதிசங்கரரே 33வது பீடாதிபதியாக அவதரித்தார் என்று பலரின் கருத்து. இதற்கு நிதர்சனமாக ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவ நரசிம்ம பாரதிகளின் வாழ்க்கை சரித்திரத்தில் சில நிகழ்ச்சிகளைக் காணலாம்.

இவருடைய பூர்வாசிரமம் தகப்பனார் குனிகல் ராம சாஸ்திரிகள். மைசூர் கிருஷ்ணராஜ உடையார் (3) சமஸ்தானத்தில் முக்கிய ஆஸ்தான வித்வானாக இருந்தவர்.

1858ல் அவருக்கு மூன்றுவது பிள்ளையாகப் பிறந்து இவர் சிவஸ்வாமி என்ற பெயருடன் விளங்கிவந்தார். சிறுவயதில் தாய் தந்தைகளை இழந்து தமயனுல் போஷிக்கப்பட்டுவந்தார். இவருடைய 8வது வய்திலேயே (1866) இவர் முன் கூறியபடி ஸன்யாசாசிரமம் பெற்றுர். அன்றைய தினம் இரவில் தூங்கும் போது "ஸர்வோஹம்" "ஸர்வோஹம்" என்று பால சந்நியாசியான இவர் சொன்னுர். இதனுல் பிறக்கும் போதே பூர்வ ஜன்ம ஸம்ஸ்காரத்தால் ஞானியாகவே தோன்றினுர் போலும் தன் குருவுடன் 12 வருஷகாலம் பல ஊர்களில் யாத்திரை செய்யும்போதே குருவின் பர்பூர்ண கடாக்ஷத்தைப் பெற்றுர். பீடத்துக்கு வந்து 6 வருஷ காலம் மடத்திலேயே பூஜையிலும் யோகத்திலும் ஈடுபட்டு, பின்பு 1886ல் கோகர்ண யாத்திரை செய்து புனுவரையில் சென்று 1890ல் சிருங்கேரிக்கு திரும்பினுர். இரண்டு வருஷங்களுக்குப் பின் மைசூர் மகாராஜாவின் வேண்டுகோளுக்கிணங்கி தக்ஷிண தேச யாத்திரையாக புறப்பட்டு 1891ல் மைசூர் சென்று மேலும் யாத்திரையைத் தொடர்ந்து ராமேசுவரம் வரை சென்றுர். பல இடங்களில் தர்ம ஸம்ஸ்தாபனங்கள் செய்தார். ராமனுதபுரத்தில் நடந்துவந்த மிருகபலி வழக்கத்தை நிறுத்தி அம்பாளை ஸௌம்யமூர்த்தியாகப் பிரதிஷ்டை செய்தார். பல இடங்களில் தேவதா மூர்த்திகளை ஸ்தாபித்தார். 1895ல் சிருங்கேரிக்கு திரும்பினுர். 1892ம் வருஷத்தில் இவருடைய ஆசியையும் பண உதவியையும் பெற்று அப்பய்ய தீக்ஷிதரின் வம்சத்தைச்சேர்ந்த ஸ்ரீ ராஜு சாஸ்திரிகளும் மகாதேவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளும் (காஞ்சியில் உபநிஷத் பிரம்மேந்திர மடத்தில் இருந்தவர்) வேலூருக்குப் பக்கத்தில் விரிஞ்சிபுரம் அக்கிரகாரத்தில் ஸ்ரீமீனுக்ஷி சுந்தரேசுவரர் ஆலயத்தைக்கட்டி கும்பாபிஷேகம் செய்து அங்கு சாசுவத பூஜைக்கு ஏற்பாடு செய்தார்கள்.

ஸங்கேசுவர மடம் முதலியவற்றிற்கு மேலாக சிருங்கேரி பீடத்துக்கே மரியாதையளிப்பதில் முதல் ஸ்தானம் இருக்க வேணும் என்று குவாலியர் மகாராஜா சிந்தியா உத்திரவு செய்தார்.

யாத்திரையிலிருந்து திரும்பி சிருங்கேரிக்கு வந்து அங்கு ஸத்வித்யா ஸஞ்ஜீவினி என்ற வேத சாஸ்திர பாடசாலையை ஏற்படுத்தினுர். இது இப்போதும் தொடர்ந்து நடக்கிறது.

காசியில் இந்து ஸர்வகலாசாலையை அமைக்க ஸ்ரீ ஆசாரியாள் வரவேணும் என்று ஸ்ரீ பண்டித மதன்மோஹன் மாளவியா அவர்கள் பிரார்த்திக்க தனக்கு சாவகாசமில்லை எனச்சொல்லி தன் குருவின் பாதுகைகளை அங்கு அனுப்பி வைத்தார். இதை வைத்து ஸர்வகலாசாலை ஆரம்பிக்கப்பட்டது. இந்த பாதுகைகள் அங்கு இப்போதும் இருந்துவருகின்றன. இந்தக் குறிப்பை ஸர்வகலாசாலையின் அதிகாரிகள் தங்கள் ஸர்வ கலாசாலை வெளியீட்டிலும் எழுதி இருக்கிறார்கள்.

தபசிலும் ஏகாந்தத்திலும் இவர் மனம் ஈடுபடவே துங்கா நதிக்குத் தென்புறத்திலுள்ள காட்டில் நரசிம்ம வனம் என்ற ஆசிரமத்தை நிறுவி அங்கேயே வசித்து வந்தார். நாட்டில் உள்ள சமூக நோக்கங்களை ஸநாதன தர்மத்தில் திருப்பி ஆதி சங்கரரின் தர்ம ஸம்ஸ்தாபன வழியை நிலைநிறுத்த யத்தனம் செய்தார். இதற்காக வருஷாவருஷம் சங்கர ஜயந்தி உத்ஸவம் எங்கும் நடத்தவேண்டும் என்றார். அதுசமயம் வித்வத் ஸதஸ்ஸைக் கூட்டி சாஸ்திர விஷயமான சர்ச்சைகளை தன் அத்தியக்ஷத்தில் நடத்திவந்தார். இதுபோல் விநாயக சதுர்த்தி சமயத்தில் (சாதுர்மாஸ்ய காலத்தில்) வித்வத் ஸதஸ் நடத்தும் திட்டத்தையும் ஆரம்பித்து வைத்தார். இந்த இரண்டு ஸதஸ்ஸுகளும் அன்று முதல் இன்று வரை சிருங்கேரி பீடாதிபதி இருக்கும் இடத்தில் மேலும் மேலும் உத்ஸாஹத்துடன் நடந்துவருகின்றன.

ஆதிசங்கரரின் ஜன்மபூமியான கேரள தேசத்தில் உள்ள காலடி என்ற பிரதேசத்தை திருவனந்தபுரம் அரசனின் ஒத்துழைப்பினால் மடத்திற்கு சொந்தமாக்கி அங்கு ஸ்ரீ ஆதி ஆசார்யாளின் தாயாரான ஆர்யாம்பாளின் தேஹம் தஹனம் செய்யப்பட்ட புண்யஸ்தலத்தைக் கண்டுபிடித்தார் ஸ்ரீ சாரதா தேவிக்கும் ஸ்ரீ ஆதிசங்கரருக்கும் ஆலயம் நிறுவி 1910ம் வருஷம் இவைகளுக்கு விசேஷமான கும்பாபிஷேகத்தையும் காலடியில் நடத்தி 1911ல் சிருங்கேரிக்கு வந்தார்.

தக்ஷிண தேச யாத்திரையில் பல க்ஷேத்திரங்களில் தரிசித்தும், நெரூர் ஸ்ரீ ஸதாசிவ பிரம்மேந்திரர் போன்ற மகான்களின் ஸமாதியில் விசேஷ ஸாந்நித்தியத்தைக்கண்டும மனம் கசிந்து இவர் பல ஸ்தோத்திரங்களை இயற்றியிருக்கிறார். இது பக்தி ஸுதாதரங்கிணீ என்ற புத்தக ரூபமாக

வந்திருக்கின்றது. ஸ்ரீ ஆதி சங்கரரின் கிரந்தங்களை ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ அச்சகத்தை ஸ்தாபித்த T. K. பாலசுப்பிரமணிய அய்யரைக் கொண்டு சேகரிக்கச் செய்து அவற்றில் பகவத்பாத கிரந்தங்களைப் பொருக்கி எடுத்து தானே மாத்ருகைகளை பரிசீலனை செய்து அதை அச்சடிக்கச் செய்து 1910ல் காலடியில் கும்பாபிஷேக சமயத்தில் அதை வெளியிடச் செய்த பெருமையை நினைக்கும் போது இவர் ஸ்ரீ ஆதிசங்கரரின் அபராவதாரம் என்றே விளங்கு கிறது. சிலசமயம் ஜலத்தில் புகுந்து ஜலஸமாதியிலேயே இருப்பதும் தன் தபசினால் பல சித்திகளைப்பெற்று சிஷ்யர் களின் கஷ்டங்களை நிவர்த்தி செய்வதும் பல அரசர்களுக்கு உபதேசங்களைச் செய்து அவர்களின் வாழ்க்கையை மேன்மைப்படுத்துவதும் இவருக்கு ஸஹஜமாக இருந்தது. ஆனால் எப்போதும் ஆத்ம ஸ்வரூபத்திலேயே லயித்திருந்த இவருடைய மனம் உலக வாழ்க்கையில் பற்றுக்கொள்ளாமல் இருந்தது. சிருங்கேரி பீடத்தில் அமர்ந்தவர்கள் ஜீவன்முக்த பரம்பரையே என்பது இதிலிருந்து தெரிகிறது.

தனக்குப்பின் பீடாதிபதியாக வேண்டி தகுந்த சிஷ்யனைத் தீர்மானித்தார். சிருங்கேரியிலேயே இருந்த நரசிம்மன் என்ற சிறுவனே இவன். இச்சிறுவனுக்கு சிருங்கேரி பாடசாலை யிலும் பெங்களூரில் உள்ள சாஸ்திர பாடசாலையிலும் சாஸ்திர பாடம் கற்றுக்கொடுக்க ஏற்பாடு செய்தார். இச்சிறுவன் அவர் தாயாருக்கு 14வது குழந்தை. 13 குழந்தைகள் இறந்து போய் இச்சிறுவன் மட்டும் மிஞ்சினான். இவன் பிற்காலத்தில் பிரபலம் அடைவான் என்று தீர்மானித்து ஸ்ரீ நரசிம்மபாரதிகள் ஸ்ரீசாரதாதேவியைப் பிரார்த்திக்கும்போது "தாயே என்னிடம் விசேஷ பக்திகொண்டிருக்கும் நரசிம்மன் என்ற பையனை நீ ஸர்வஜ்ஞனாக்கவேணும்" என்று கேட்டார். சிருங்கேரி பீடாதிபதிகள் கேட்டால் ஸ்ரீசாரதா தேவி கொடுக்காத விஷயமும் உண்டோ? பின்னிட்டு இது எப்படி நமக்கு அமைந்தது என்பதை நாம் அறிவோம். 1912ம் வருஷத்தில் ஸ்ரீ நரசிம்மபாரதிகள் விதேக முக்தி அடைந்தார். இவருடைய ஸமாதி நரசிம்ம வனத்தில் அமைக்கப்பட்டது.

ஸ்ரீசந்திரசேகரபாரதீ ஸ்வாமிகள் 1912 முதல் 1954 வரை 34வது பீடாதிபதியாக விளங்கினார். இவர் சிருங்கேரியில் உள்ள பண்டிதரான கோபால சாஸ்திரிகளின் புதல்வர்.

தகப்பனுரைப்போல் இவரும் சாஸ்திர பாண்டித்யம் பெற்ருர். சிருங்கேரியில் பாடசாலையில் இருக்கும்போதே பின்னிட்டு பெரிய ஜீவன்முக்தராக இருப்பார் என்பதற்கு இவரிடம் பல அடையாளங்கள் காணப்பட்டன: எப்போதும் தேவீ ஸ்தோத்திரங்களைச் சொல்லிக்கொண்டு அதன் கருத்தில் மனது லயித்து இருப்பார். ஒரு சமயம் மூகபஞ்சசதீ சுலோகங்களை மனதில் சொல்லிக்கொண்டு போகையில் தான் எதற்காக எங்கு செல்கிருேம் என்பதையும் மறந்து இருந்த நிலைமையைக் கண்டவர்கள் ஆச்சரியமடைந்தனர். தன் குருவினிடம் அபாரமான பக்தி உள்ளவர். ஒரு சமயம் ஸ்ரீ நரசிம்மபாரதீ ஸ்வாமிகள் யாத்திரைக்கு புறப்பட்டுச் செல்லுகையில் பாடசாலை மாணவர்களுக்கு மந்திராக்ஷதையை வழங்கினுர். எல்லோரும் அப்போதே அதை உபயோகித்து விட்டார்கள். ஆனல் பின்னிட்டு பீடாதிபதியாகப்போகிற நரசிம்மன் அந்த அக்ஷதையை ஒரு காகிதத்தில் மடித்து தன் குருவின் உருவப்படத்துக்கு கீழ்வைத்து அதை தினந்தோறும் வணங்கி வந்தான். யாத்திரை சென்று திரும்பிவந்த ஸ்ரீநரசிம்ம பாரதிகள் இதைக்கண்டு இந்த சிஷ்யனுடைய குருபக்தியை மெச்சி நன்ருக ஆசீர்வதித்தார்கள். இக்குழந்தை ஸர்வக்ஞனுகவேணும் என்று குருநாதர் கேட்டது இக் குழந்தைக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டிய பரிசுதானே.

குருவின் பரிபூர்ண கடாக்ஷத்தால் ஸ்ரீசந்திரசேகரபாரதீ என்ற யோகபட்டத்துடன் 1912ம் வருஷம் 34வது பீடாதிபதியாக சாரதா பீடத்தில் அமர்ந்தார்கள். அப்போது ஸ்ரீமடத்தில் ஸர்வாதிகாரியாக இருந்த ஸ்ரீகண்ட சாஸ்திரிகள் ஸ்ரீ சந்திர சேகர பாரதீ ஸ்வாமிகளுக்காகத் தானே மடம் நிர்வாகத்தை கவனித்து வந்தார். இதன் காரணமாக ஏற்கனவே ஆத்மானுஸந்தானத்தில் மிகவும் ஈடுபட்டுள்ள ஆசார்யாள் அடிக்கடி அந்தர் முகமாக இருந்துகொண்டு உலக சம்பந்தமற்ற நிலையை அனுசரித்தார். இந்த சரீரத்திலேயே இருந்து கொண்டு இதை முற்றிலும் மறந்து ஜீவன் முக்தனுக விளங்கலாம் என்பதை தன் ஆசரணையில் உலகுக்குக் காட்டியவர் இவர். சிலகாலம் அந்தர்முகமாயிருந்து பின் வெளியே வந்து மடம் கார்யங்களில் கலந்துகொண்டு பூஜை முதலியவைகளில் ஈடுபட்டிருப்பார். ஆனல் அக்காலத்தில் இவருடைய போக்கை நன்கு கவனித்தால் பகவத் கீதையில் 2வது அத்தியாயத்தில் சொல்லப்பட்ட ஸ்திதப்ரஜ்ஞனுடைய

லக்ஷணங்கள் எல்லாவற்றையும் இவரிடம் காணலாம். விஞ்ஞான ஆராய்ச்சி செய்பவருக்கு ஆராய்ச்சிசாலை (Laboratorv) அத்தியாவசியமானது. இதுபோல் வேதாந்த விசாரம் செய்து கீதையைப்படித்து ஜீவன் முக்த நிலையைப் பற்றி தெரிந்துகொள்ள ஊக்கமுடையவர்களுக்கு ஸ்ரீ சந்திர சேகரபாரதீ ஸ்வாமிகளே உதாஹரணமாவார். இவரை ஒரு தடவையாவது தரிசித்தவர்கள் பாக்கியசாலிகளே. இவருடைய பெருமையை விளக்கி பல புத்தகங்கள் ஏற்கனவே வந்திருக்கின்றன.

இவர் பீடத்துக்கு வந்தவுடன் ஸ்ரீ விருபாக்ஷ சாஸ்திரிகள் என்ற வித்வானை இவருக்கு சாஸ்திர பாடம் கற்பிக்க ஏற்படுத்தப்பட்டது. இவருடைய விசேஷ புத்தியைக் கண்ட விருபாக்ஷ சாஸ்திரிகள் இவருக்கு பாடம் சொல்லவேண்டிய அவசியமே இல்லை. தானே இவரிடம் சில விஷயங்களைத் தெரிந்துகொள்ளும் நிலைமை ஏற்பட்டது என்று சொல்லி ஆச்சரியப்பட்டார். பீடத்துக்கு வந்து மூன்று வருஷங்களில் ஸகல சாஸ்திர பாரங்கதரானார்.

தன் குருவின் ஸமாதியின் பேரில் அழகிய கட்டிடத்தை ஏற்படுத்தினார். சிருங்கேரியில் ஸ்ரீ சாரதாம்பாளின் ஆலய திருப்பணியைப் பூர்த்தி செய்து 1916ம் வருஷத்தில் விசேஷ மாக கும்பாபிஷேகமும் நடத்தினார்.

மைசூர் மகாராஜாவின் அழைப்பிற்கு இணங்கி 1924ல் மைசூருக்கு விஜயம் செய்தார். மகாராஜாவின் உதவியால் பூர்வாசாரியாளான ஸ்ரீநரசிம்மபாரதிகளின் பிறந்த கிருஹத்தை மடத்திற்கு சொந்தமாகச்செய்து அங்கு குருவின் மூர்த்தியை ப்ரதிஷ்டை செய்து ஒரு பாடசாலையையும் ஏற்படுத்திவிட்டு சத்தியமங்கலம் மார்க்கமாக தக்ஷிணதேச யாத்திரையை துவக்கினார். பல க்ஷேத்திரங்களைத் தரிசித்து காலடி சென்று பிறகு 1927ல் சிருங்கேரிக்கு திரும்பினார். யாத்திரையில் பல இடங்களில் பாடசாலைகளையும் ஆலய ஸ்தாபனங்களையும் ஏற்படுத்தினார். இவருடைய கருணைகடாக்ஷம் பெற்றவர்கள் எல்லோரும் விசேஷமான அனுபூதிமான்களாக ஆனார்கள்.

1927ல் சிருங்கேரி வந்தவுடன் தீவிரமாக அந்தர்முகத்தில் லயித்து இருப்பதைக்கண்டு ஸ்ரீ கண்ட சாஸ்திரிகள் ஸ்ரீமடத்தின் நிர்வாகத்தை கவனிக்க ஒரு சிஷ்யனை ஏற்படுத்த

வேண்டும் என்று விஜ்ஞாபனம் செய்ய அதற்கு யோக்கியதை உள்ள பையனைத் தேடச் சொன்னார். ஆசாரியாளின் மனதுக்கு உகந்தவன் பெங்களூரிலிருந்த ஸ்ரீராமசாஸ்திரிகள் என்பவரின் புதல்வனை 13வயதுள்ள ஸ்ரீனிவாஸன் - தான் என்பது தெரிய வந்தது. ஆசார்யாளின் ஆக்ஞையின்பேரில் இச்சிறுவனுக்கு சிருங்கேரியிலேயே ஸ்ரீ ம ட த் தி லே யே உபநயனத்தை செய்வித்து, வித்யாப்யாஸத்துக்கும் ஏற்பாடு செய்யப்பட்டது.. 1931 மே மாதம் 22உ இந்த ஸ்ரீனிவாச னுக்கு ஸந்நியாஸம் கொடுத்து அபிநவ வித்யாதீர்த்தர் என்ற யோகபட்டத்தை அளித்து அதுமுதல் தானே அவருக்கு சாஸ்திரங்களை உபதேசிப்பதில் குரு ஈடுபட்டார். குரு கடாக்ஷம் பரிபூர்ணம். 1931 முதல் 1954 வரை தன் கூடவே பால ஸ்வாமிகளை வைத்துக்கொண்டு பீடத்தின் காரியங்களை எல்லாம் அவரைக்கொண்டே நடத்தி வந்தார். அடிக்கடி அந்தர்முகமாகிவிடுவார். ஆகவே ஸ்ரீமடத்தின் காரியங்களை முற்றிலும் கவனிப்பது பாலசுவாமிகளுடைய பொறுப்பாக ஆகிவிட்டது. அந்தர்முகம் விட்டு பஹிர்முகம் ஏற்பட்ட நிலையிலும் உத்ஸவங்கள் நடக்கும்போதும் தான் இருந்தாலும் பால ஸ்வாமிகளுக்கே முக்கியத்வம் காட்டிவந்தார்.

மறுபடி தக்ஷிண தேச யாத்திரை செய்யவேணும் என்று பல சிஷ்யர்கள் இவரை வேண்டியும் அதை ஏற்றுக்கொள்ள வில்லை 1938ல் பெங்களூருக்குச் சென்று அங்கு சங்கர மடத்தில் ஸ்ரீசங்கராலயத்துக்கு எதிரில் ஓர் ஆலயம் நிறுவி, அதில் சாரதாமூர்த்தியை பிரதிஷ்டைசெய்வித்து சிருங்கேரியில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ சாரதாதேவியின் அம்சம் பெங்களூர் மடத்தில் உள்ள தேவியின் மூர்த்தியிலும் ஸாந்நித்யத்துடன் விளங்கச்செய்தார் என்பது விசேஷமாக தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம்.

1940ல் சிருங்கேரிக்குத் திரும்பி வந்தார். உடனேயே அந்தர்முகமாய் விட்டார். அந்தர்முகமாக இருக்கும் சமயங் களில் பக்தர்களுக்கு தரிசனம் கிடைத்தால் அது அவர்களின் பெரும் பாக்கியம். அப்போது வரும் வாக்குகள் வேத வாக்குகள் போல் விளங்கும். பல சிஷ்யர்களுக்கு இந்த பாக்கியம் கிடைத்தது. இப்படியுள்ள ஒரு சந்தர்ப்பத்தில் 1950ல் நேபாள மகாராஜாவுக்கு ஆசிச்செய்தி அனுப்பினார். ராஜ்யத்தைவிட்டு வெளியேற நேர்ந்த நேபாள அரசன்

வெற்றியுடன் தன் தேசத்துக்கு திரும்பி வந்தார். இப்போதும் நேபாள தேசத்து அரசர் சிருங்கேரி பீடத்தின் முக்கிய சிஷ்யராக இருக்கிறார்.

1952ல் ஆசாரியாளுக்கு 60வது வயது முடிந்தது. இதற்கென உத்ஸவம் நடத்தவேணும் என்று சில சிஷ்யர்கள் சொன்னதை இவர் ஒப்புக்கொள்ளவில்லை. அதனால் 1953ல் உலக க்ஷேமத்துக்காக சிருங்கேரியில் ஸஹஸ்ரசண்டீ யாகமும் அதிருத்ரமும் சிஷ்யர்களால் நடத்தப்பட்டது. கொஞ்ச காலமாக மழை இல்லையேஎன்று ஜனங்கள் வருந்திக்கொண்டிருந்தார்கள். பூர்ணாஹுதி தினம் மாலை 5 மணிக்கு அங்கு திடீரென்று பெய்த மழை எங்கும் பரவி நாடெங்கும் சுபிட்சம் ஏற்பட்டது. இந்த மஹோத்ஸவத்தின்போது, ஆசாரியாள் தாம் அந்தர்முகத்திலேயே இருந்துகொண்டு பால ஸ்வாமிகளைக்கொண்டே காரியங்களை நடத்தச் செய்தார். சில நாட்களானதும் தான் வெளியே வந்தார். எப்போதும் ஆத்ம தியானத்திலேயே இருந்துகொண்டு ஜீவன் முக்த நிலையை உலகுக்கு எடுத்துக்காட்டினார் போலும் ஞானிகள் தமது இஷ்டப்படி தம் சரீரத்தை ஜலத்திலோ நெருப்பிலோ எங்கு வேணுமானாலும் த்யாகம் செய்வார்கள் என்று கேட்டிருக்கிறோம். ஜல சமாதி என்பது உயிருடன் ஜலத்தில் குதித்து உயிரை மாய்த்துக்கொள்வது அல்ல. யோகாப்பியாஸத்தினாலும் தியானத்தினாலும், ஆத்மானுஸந்தான சக்தியினாலும், தன் சரிர வாழ்க்கையின் கடைசி சுவாசம் எது என்று கண்டு அந்த க்ஷணத்தில் ஜலத்தில் சரீரத்தை தியாகம் செய்வது தான் ஜலஸமாதி என்பது.

1954ம் வருஷம் செப்டம்பர் 26 தேதி மஹாளய அமாவாசை தினம் விடியற்காலம் துங்கா நதியில் எப்போதும் ஸ்நானம் செய்யும் இடத்தில் ஸத்குரு ஜல ஸமாதியடைந்தார். சரீரம் ஜலத்தில் கொஞ்ச தூரம் சென்றதும் அதை வெளியில் எடுத்து, பின்பு வைத்தியர்கள் பரீக்ஷிக்கையில் ஒரு திவலை ஜலம் கூட சரீரத்தின் உள்ளே செல்லவில்லை என்று கண்டார்கள். ஸங்கல்ப பூர்வமாக ஆயுளின் அந்திம க்ஷணத்தில் சரீரத்தை ஜலத்தில் தியாகம் செய்தார். இது ஞானிகளின் தனிப்போக்கு.

இவர் பீடாதிபதியாக இருக்கும் காலத்தில் இவருடைய விசேஷ அருளைப் பெற்றவர்கள் பலர், இந்தியாவின்

பிரசிடெண்டு டாக்டர் ராஜேந்திர பிரஸாத், டாக்டர் C. P. ராமசுவாமி அய்யர், ஜட்ஜ் சந்திரசேகரய்யர், முதலியவர்களை குறிப்பிடலாம். ஸந்நியாஸிகளில் நிலமாவு மடம் ஸ்ரீ கமலானந்த நரஸிம்ம பாரதிகள், திருநெல்வேலி ஸ்ரீ ராமானந்த ஸரஸ்வதிகள், குறிப்பிடத்தக்கவர்கள். தத்வஞான மார்க்கத்தில் செல்ல விரும்பும் யாவருக்கும் உபயோகமாக பகவத் பாதாள் விவேகசூடாமணி என்ற நூலை அருளியுள்ளார்கள். எப்பொழுதும் ஆத்மானுபவத்துடன் விளங்கும் நம் ஜகத்குரு சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள் தம் அனுபவத்தையெல்லாம் எடுத்துக்காட்டி இதற்கு பாஷ்யம் இயற்றியுள்ளார்கள். ஜீவன் முக்தரின் ஸ்வானுபவத்தை இதில் காணலாம். இதை சிருங்கேரி ஸ்ரீமடத்தில் அச்சிட்டிருக்கிறார்கள். இது தவிர இவர்கள் இயற்றியுள்ள பல ஸ்தோத்ரங்கள் தமிழுரையுடன் சங்கரகிருபா பத்திரிகையில் வெளிவருகிறது. ஸ்ரீசாரதாம்பாள் பேரில் ஒரு கீர்த்தனமும் தண்டகமும்கூட இயற்றியுள்ளார்கள்.

35வது பீடாதிபதியாக இப்போது சிருங்கேரியில் விளங்கி வரும் ஸ்ரீ அபிநவவித்யாதீர்த்த மகாஸ்வாமிகளை சிஷ்யராக ஏற்படுத்திய விவரம் முன்பே கூறியிருக்கிறோம். மைசூர் தேச 'ஆதாலத்' கோர்ட்டில் பிரபல ஜட்ஜாக இருந்த கைபு சீதாராம சாஸ்திரிகளின் பேரன் கைபு ராமா சாஸ்திரிகள் இவருக்கு தீபாவளி தினத்தில் 1917ம் வருஷம் நவம்பர் 13உ தோன்றிய குழந்தை ஸ்ரீனிவாஸனைத்தான் ஸ்ரீ குருநாதர் தமது வாரிசாக ஜகத்குருவாக ஏற்படுத்திக்கொடுத்தார். சிறு வயது முதல் இவரை ஸ்ரீ சந்திரசேகர பாரதிகள் இந்த பீடத்துக்கு ஏற்ற சக்தியைப் பெறச் செய்திருக்கிறார். இங்கும் குரு கடாக்ஷம் பரிபூர்ணம் என்று தெரிகிறது. 1931ல் இவர் ஸந்யாசாசிரமம் பெற்றார் அதுமுதல் 1954 வரை ஸ்ரீ சாரதா பீடத்தில் இரண்டு குரு மகாராஜர்களும் விளங்கிக்கொண்டு மக்களை அனுக்கிரஹித்து வந்தார்கள் என்பது நம்முடைய பாக்கியமேயாகும். 1954ம் வருஷம் அக்டோபர் 16ம் தேதி இவருக்கு ஸ்ரீ சாரதா பீட பட்டாபிஷேகம் நடைபெற்றது.

சிருங்கேரி ஜகத் குருக்கள் எல்லோரும் தேச சஞ்சாரம் செய்துகொண்டு ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் ஆக்ஞையாகிய சமயதர்ம பிரசாரம் செய்துவந்திருக்கின்றனர். தக்ஷிணம் நாயத்தில் அடங்கிய தமிழ்நாடு, கேரளம், கர்னாடகம், ஆந்திரம், தக்ஷிண மகாராஷ்டிரம் ஆகிய நாடு

களில் ஸஞ்சாரம் செய்து புண்ய க்ஷேத்திரங்களைத் தரிசித்து சிஷ்யானுகிரஹம் செய்து வந்திருக்கிறார்கள். சில மஹான்கள் வடநாட்டுக்கும் சென்று சிருங்கேரி பீடத்தின் மஹிமையை விளங்கும்படி செய்து வந்திருக்கிறார்கள். சில சமயங்களில் நம் நாட்டில் யுத்தங்கள் கலகங்கள் முதலிய உத்பாதங்கள் ஏற்பட்டு அதனால் சில ஆசார்யர்கள் ஸஞ்சாரம் செய்ய முடியாமல் போய்விட்டது. 19-வது நூற்றாண்டில் இந்தக் கஷ்டங்களை யெல்லாம் பொருட்படுத்தாது ஸ்ரீ நரசிம்ம பாரதிகள் தேசமுழுவதிலும் பல இடங்களுக்கு விஜயம் செய்து வடக்கே குவாலியர் சிந்தியா மன்னனிலிருந்து தெற்கே திருவிதாங்கூர் மன்னன் உள்பட பல ஹிந்து முஸ்லீம் மன்னர்களின் மரியாதைகளையும் உபசரணைகளையும் பெற்றார்.

1954ல் நடந்த பட்டாபிஷேகத்துக்குப் பல ஊர்களிலிருந்தும் பல சிஷ்யர்கள் இதற்கென சிருங்கேரிக்கு வந்திருந்தனர். "சிருங்கேரி பீடாதிபதிகள் யாத்திரை வந்து வெகு வருஷங்களாகிவிட்டபடியால் இந்த பீடத்தின் பூர்வாசாரியர்களைப்போல் தாங்கள் இப்பொழுது சிஷ்யானுக்கிரகம் செய்ய யாத்திரை வரவேணும்" என்று எல்லோரும் பிரார்த்தித்தார்கள். சிஷ்யர்களின் பிரார்த்தனைக்கு இணங்கி இவரும் 1956ம் வருஷம் தக்ஷிணதேச யாத்திரையை துடங்கி, தன் பரமேஷ்டி குருவின் சாதனையையும் மிஞ்சி ஹிமாலயத்திலுள்ள காச்மீரம், கேதாரம், பதரி, நேபாளம் ஆகிய இடங்களுக்கெல்லாம் விஜயம் செய்து ஆதி சங்கரரைப்போல் ஸநாதனமான தர்மத்தைப் பரவச்செய்திருக்கிறார்.

1956 வருஷம் தக்ஷிணதேச யாத்திரையை துடங்கி காலடி ராமேசுவரம் முதலிய க்ஷேத்ரங்கள் சென்று 6½ வருஷம் யாத்திரை செய்து 1962ல் சிருங்கேரிக்கு திரும்பினார். ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகள் தன்னுடைய குருவின் ஸமாதியைக் கட்டியதுபோல் தன்னுடைய குருவான ஸ்ரீசந்திரசேகரபாரதீ ஸ்வாமிக்கும் அதேமாதிரி ஸமாதி கட்டிடத்தை அமைத்து 1963வருஷம் இதற்கு விசேஷமாக கும்பாபிஷேகத்தையும் ஸஹஸ்ரசண்டீ யாகம், அதிருத்ர யக்ஞங்களுடன் நடத்திவைத்தார். 1964ல் சிருங்கேரி ஸ்ரீசாரதா தேவிக்கு கோடி நாமார்ச்சனை நடத்தப்பட்டது.

பிறகு உத்தர தேச யாத்திரையைத் துவக்கி வடதேசம் முழுவதும் சென்று முக்கியமாக கயா, காசி, பிரயாகை,

ஹரித்வார், தில்லி, பத்ரீ, காஷ்மீர், கேதாரம், நேபாளம் முதலிய தேசங்கள் சென்று விஸ்தாரமாக விஜய யாத்திரையை நடத்தி, ஆங்காங்கு வித்வத் ஸபைகளை நடத்தி பண்டிதர் களுக்கு ஸன்மானங்களைக் கொடுத்து பல இடங்களில் சிருங்கேரியின் கிளை மடங்களை ஏற்படுத்தி அரசர்களாலும் பல லௌகிக பிரமுகர்களாலும் வணங்கப்பட்டு 1968 வருஷம் சிருங்கேரிக்கு திரும்பி வந்து 1968 அக்டோபரில் கோடி நாமார்ச்சனையையும் நடத்தி சிஷ்யர்களுக்கு பரமானுகிரகம் செய்துகொண்டு விளங்கிவருகிறுர்கள்.

இவர்களுடைய யாத்திரையைக் குறித்து விஸ்தாரமாக வேறு புத்தகங்கள் இப்போது வெளிவருவதாக இருப்பதாலும் இம்மஹானின் அனுக்கிரக விசேஷங்களைக்குறித்து பல குறிப்புகள் நமக்குத் தெரிந்திருந்தும் அவைகளை பிரசுரிக்க எனக்கு இன்னும் அனுமதி கிடைக்காததாலும் இத்துடன் இச் சுருக்கத்தை நிறுத்திக்கொள்கிறேன். சிருங்கேரி ஸ்ரீ குருநாதர்களின் திவ்ய சரணாரவிந்தங்களில் நம் மனம் எப்பொழுதும் ஈடுபடுவதன்மூலம் அவர் அருளால் எல்லா மங்களங்களையும் அடைவோமாக.

சுபம்

## அநுபந்தம் - 2

# ॥ श्रीमूकाम्बिकाष्टकम् ॥

## ( गुरुवंशकाव्ये 12 सर्गे 54-61 श्लोकाः )

[ஸ்ரீதக்ஷிணாம்நாய சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடத்தில் (கி. பி. 1705 முதல் 1741 வரை) 27-வது பீடாதிபதிகளாக விளங்கிய ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் அருளிய ஸ்ரீ மூகாம்பா ஸ்தோத்ரம், ஸ்ரீ சாரதா ஸ்தோத்ரம், ஸ்ரீ ஸுப்ரமண்ய ஸ்தோத்ரம் இம் மூன்றும் குருவம்சகாவ்யத்திலுள்ளதை இதில் அனுபந்தமாக சேர்த்திருக்கிறோம். இவர் காலத்திலேயே இந்த கிரந்தம் இயற்றப்பட்டிருப்பதால் ஆசார்யாள் அருளிய இந்த ஸ்தோத்ரங்களையே கவி தான் இயற்றிய குருவம்சகாவ்யத்தில் சேர்த்திருப்பதாக நிச்சயமாகக் கூறலாம்.

கௌதி அரசன் சென்னமாம்பா குமாரன் பசவப்ப நாயக்கனால் பிரார்த்திக்கப்பட்டு ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் யாத்திரையாக புறப்பட்டு தலைநகரான வம்சபுரிக்குச் (பெட்னூர்) சென்றார். மஹாராஜன் விசேஷமாக ஸத்காரங்கள் செய்து அப்பொழுது அங்கு கொண்டு வந்த மூகாம்பிகா ப்ரஸாதத்தை ஆசார்யாளிடம் ஸமர்ப்பித்தான். அதை சிரஸில் தரித்துக்கொண்டு அம்பிகையை ஸ்மரித்து பக்தி பரவசராக புஜங்க ப்ரயாத விருத்தத்தில் எட்டு சுலோகங்கள் அடங்கிய மூகாம்பிகா ஸ்தோத்ரத்தை அருளினார். தென்கன்னட மாவட்டத்திலுள்ள கொல்லூர் க்ஷேத்ரத்தில் விளங்கும் மூகாம்பிகை இக்கேரி அரசர்களின் குலதேவதை. ஸ்ரீ சங்கரபகவத்பாதர் ஸ்ரீ மூகாம்பிகையின் ஸந்நிதியில் த்யானத்திலிருந்ததாகப் பிரசித்தி. கோயிலில் அந்த இடத்தை இன்றும் பாதுகாத்து வருகிறார்கள். அநேகமாக சிருங்கேரி ஜகத்குருக்கள் எல்லோரும் மூகாம்பிகையை தரிசித்து, பூஜிப்பது வழக்கமாக இருந்திருக்கிறது. இந்தக் கோயிலில் ஸாதகர்களுக்கு மந்திர யோக ஞானசித்தி ஏற்படுகிறது என்பது நிச்சயம்]

ततश्चन्नमाम्बातनूजः सुराजा समाकर्ण्य वृत्तं समस्तं प्रशस्तम् ।
तदा प्राहिणोदागतं सन्निधौ स्वे प्रसादं तमस्मै स मूकाम्बिकायाः ॥

समादाय सर्वेष्टसंसूचकं तं दधन्मस्तके योगिराजो नुनाव ।
महादेवकान्तां महादेवतां तां भुजङ्गप्रयाताख्यवृत्तस्तवेन ॥

जयश्रीजटाले जगच्चित्रलीले सदा रम्यखेले सदानम्यशीले ।
अये लेखपाले विशालेऽव्यफाले मदालम्ब मूकाम्ब लोकाम्ब पाहि ॥

सतां हृद्विहारे कृतारिप्रहारे तनौ पूर्णहारे मनोघापहारे ।
मुरारेरुदारे पुरारेरदूरे करालम्बनं देवि मूकाम्ब देहि ॥ २ ॥

नतावल्यधीने श्रितानामदीने स्तुतिप्रेमदाने मतिप्रष्ठभाने ।
रमानेकमानेऽभिमानेऽसमाने ममानेकमिष्टं प्रदद्या भवानि ॥ ३ ॥

त्रिलोकीशजाये द्रुतध्वस्तमाये मनस्यर्चनीये मनूपासनीये ।
विधेयेऽवधेये प्रदेये प्रणेये त्वदीये पदाब्जे मदीये हृदि स्ताम् ॥

अपेक्षावदान्ये कटाक्षात्तधन्ये महाभाग्यमान्ये महीध्रेशकन्ये ।
शरण्येऽतिपुण्येऽग्रगण्येऽनुगुण्ये प्रपन्ने मयि त्वं प्रसन्नेक्षणैधि ॥

स्वपादाब्जभृङ्गे कृपादाय्यपाङ्गे गिरीशान्तरङ्गे स्फुरद्राक्तरङ्गे ।
कुरङ्गेन्द्ररङ्गे चिरं गेयतुङ्गे सुजंघे तवांघ्री धराम्युत्तमाङ्गे ॥ ६ ॥

महाराजराजे मिलद्रङ्गपूजे दिवौकःसमाजेष्टदैत्यार्दनाजे ।
सदा जेतृराजे विराजेर्विराजे भजे हृत्सरोजे भजत्कल्पभूजे ॥ ७ ॥

तनूभूमहासेनहार्दावभासे सखीनां विलासे मुखश्रीविकासे ।
सदा सेविदासे दयासेकिहासे गुणानां निवासे चिरं त्वामुपासे ॥

---

# ॥ श्रीशारदास्तोत्रम् ॥

( गुरुवंशकाव्ये 15 सर्गे 22-33 श्लोकाः )

[ஸ்ரீ ஸச்சிதாநந்தபாரதீ ஸ்வாமிகள் சிருங்ககிரியில் மிக விமரிசையாக ஸ்ரீ சாரதா நவராத்ரி மஹோத்ஸவம் நடத்தும் பொழுது அம்பிகையை விசேஷமாகப் பூஜித்து பூஜையின் முடிவில் அருளியது 12 சுலோகங்கள் கொண்ட ஸ்ரீ சாரதா ஸ்தோத்ரம் இது ஸ்ரீ சங்கர கிருபா பத்திரிகையில் மலர் 4 இதழ் 3-ல் தமிழ் உரையுடன் வெளிவந்திருக்கிறது]

आसीना कमलासने विलसिता हासाननोल्लासिनी
वासोभिः प्रतिवासरं बहुविधैर्भास्वद्भिरुद्भासिता ।
रत्नाढ्याभरणैः सुवर्णवपुषा नूत्नेव नित्यं दृशोः
सैषा मद्वदने सदा निवसतु श्रीशारदादेवता ॥ १ ॥

वक्त्रेणाम्ब सदा मुदा विकसता श्रीशारदादेवि ते
सादृश्यं सहसाप्तुमेव कमलं तोये विधत्ते तपः ।
लोलः सन्ततचिन्तयैव विकलश्चेक्षीयते चन्द्रमा
आदर्शः सदृशो भवेद्विमलतां स्वाभाविकीं चोद्वहेत् ॥

मुद्रा किं तव शारदाम्ब वदने लावण्यराशावियं
न्यस्ता वल्लभवेधसा किमथवा शृङ्गारवल्ल्यंकुरः ।
अङ्कः किं वदनेन्दुबिम्बनिलयः सौभाग्यशोभाकरं
कस्तूरीतिलकं पतिं वशयितुं किं भाति रेखाञ्जनी ॥

भक्तस्तोमसदाविधेयकरुणाराशेर्निवासाय ते
वैशाल्यं कलयामहे नयनयोः वाणि प्रसन्नानने ।
मीलद्भ्यां दिवसे वदाम उपमां नीलोत्पलाभ्यां कथं
तादृग्भ्यां रजनौ नितान्तममुयोः पङ्करुहाभ्यामपि ॥

चारुश्रीकर शारदाम्ब भवतीं भक्त्या सतां ध्यायतां
आसन्नागमनात्पुरैव सकलं सिध्यत्यभीष्टं ततः ।
दुग्धाम्भोनिधितुङ्गभङ्गतुलिताः प्रौढाः कटाक्षच्छटाः
प्रेम्णा तेषु चिरं पतन्ति परमाह्लादप्रसादप्रदाः ॥

विद्याष्टादशकद्विभागकरणादर्धद्वयं पार्श्वयोः
वाग्देव्यम्ब नवाङ्कुरूपकलिते रेखे ध्रुवं ते भ्रुवौ ।
द्रष्टुं तन्निकटाश्रिते विलसतो दीर्घे विशाले दृशा-
वाकर्णान्तविकृष्टमन्मथशरौ यद्वा विधेर्मोहने ॥

तारा भान्त्ययि शारदाम्ब भवतीताटङ्कमुक्ता इमाः
प्रेम्णा सन्निहितो हि तासु रमणश्चन्द्रः कपोलात्मना ।
एवं पार्श्वयुगेऽपि राजतितरां सौभाग्यशोभावहं
चिन्हं तद्वरवर्णिनीसुविलसच्चूर्णानुलेपोऽनिशम् ॥ ७ ॥

श्रीवाग्देवि तवानने नवरसेष्वन्योन्यसंस्पर्धया
संपृक्तेषु विभासते सुललिते मुख्योऽथ हास्यो रसः ।
कर्णद्वन्द्वगता रसास्तदितरे ताटङ्करत्नात्मना
सोऽयं तव पुरः स्फुरत्युरुतरो नासाग्रमुक्तात्मना ॥

अभ्याशं समुपागतः सुकवितास्यासाय शुक्रोऽथवा
दन्तान् दाडिमबीजपङ्क्तिरुचिरान् दृष्ट्वा समागच्छतः ।
श्रीवाग्देवि शुकाग्रियस्य सहसा चञ्च्वग्रविभ्राजितं
लोलं तद्धवलीफलं लसति किं नासाग्रमुक्तामणिः ॥

श्रीवाग्देवि समं त्वदीयमधरं जानामि केनाम्बिके
यस्मात् क्वापि न भासते तदुपमा वृन्दारकैर्वन्दिते ।

बिम्बे नो मतिमान्द्यकारिणि तथा नो पल्लवे पल्लवे
नैवोत्तेजनभाजि विद्रुममणौ विज्ञानभाग्यप्रदे ॥ १० ॥

सौन्दर्येन्दिरया सुवाक्यसुधया भ्रूकल्पवल्ल्या रदैः
मुक्ताल्याऽधरविद्रुमेण लसता ताटङ्कशुभ्रांशुना ।
सीमन्तास्थितरत्नकौस्तुभरुचा दृष्ट्या सुरभ्या कला-
वीचीभिर्वदनं सुधाम्बुधिरिव श्रीशारदे भासते ॥ ११ ॥

धीदानं मतिमुद्रया करजुषा विद्यार्पणं पुस्तके-
नोत्तुङ्गाक्षवरस्रजेष्टगणना पीयूषकुम्भेन तु ।
भक्तानां परिपोषणान्यविरताभीष्टार्थदानं ध्रुवं
पङ्क्त्यामेव धृतं त्वया निरुपमे वाग्देवि तुभ्यं नमः ॥

---

## ॥ श्रीसुब्रह्मण्यस्तोत्रम् ॥

( गुरुवंशकाव्ये 13 सर्गे 56 श्लोकः )

[ஒரு சமயம் ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் ஸுப்ரமண்ய க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்து அங்கு சில நாள்கள் தங்கினர். அப்பொழுது சம்பாஷஷ்டியை ஒட்டி விசேஷமான உத்ஸவங்கள் நடைபெற்றன. ஸர்ப்ப உருக் கொண்ட பகவான் ஸுப்ரமண்யரை தர்சித்து பூஜித்து ஆசாரியாள் ஸ்துதித்தார். அதில் ஒரு சுலோகம் மட்டும் குருவம்ச காவ்யத்தில் உள்ளது.]

बालात्मैव वसन् भजत्सखतया लीलाद्भुतो भ्राजसे-
ऽभ्यङ्गाद्भोजनशेषलेपनभवान्मात्रन्नपूर्णाधिकः ।
षड्वक्त्रो जनकाच्च पञ्चवदनाद्दृश्योऽधिकः सर्वथा
सुब्रह्मण्य भवच्चरित्रजलधिं स्तोतुं समर्थोऽस्मि किम् ॥

---

# ॥ हरिद्रार्पणम् ॥

சிருங்கேரியிலுள்ள ஸ்ரீ மலஹானிகரேசுவரர் ஆலயத்தில் பிரதிவருஷமும் வைசாகசுத்ததுவாதசியில் ஆரம்பித்து ஐந்து நாட்கள் திருக்கல்யாண உத்ஸவம் மிக விமரிசையாக நடந்து வருகிறது. குருவம்சகாவ்யம் 19வது ஸர்க்கத்தில் விவாஹ விமரிசை வர்ணிக்கப்பட்டுள்ளது. சாஸ்திர முறைப்படியும் ஸம்பிரதாயப்படியும் விவாஹாங்கமான எல்லாக்காரியங்களும் நடத்தப்படுகின்றன. "ஹரித்ரார்ப்பணம்" என்ற நலங்கும் நடப்பது உண்டு. இதில் நலுங்குபத்யம் என்ற ஸ்தானத்தில் சில ஸம்ஸ்கிருத சுலோகங்களும் சொல்லப்படுகின்றன. முதலில் அம்பிகை பகவானைப்பார்த்துச்சொல்வதாகப் பத்து சுலோகங்களும், பிறகு பகவான் அம்பிகையைப் பார்த்துச்சொல்வதாக எட்டு சுலோகங்களும் உள்ளன. இந்த உத்ஸவம் கி. பி. 1734 ஆனந்த ஸம்வத்ஸரம் முதல் விரிவாக நடத்தப்பட்டுவருவதாகவும் அக்காலத்தில் சிருங்ககிரி ஸ்ரீ சாரதாபீடாதிபதியாக விளங்கிய 27வது ஆசார்யாளான ஸ்ரீஸச்சிதாநந்தபாரதீஸ்வாமிகளால் II (1705-1741) இந்த சுலோகங்கள் இயற்றப்பட்டதாகவும் தெரிகிறது. இந்த நலுங்கு சுலோகங்களைக்கீழே கொடுக்கிறோம்.

भवानी—

स्वामिन् भूतपते दिगम्बरतनो स्थाणो पशूनां पते
रुद्राक्षाभरणाहिकुण्डल विरूपाक्षोक्षवाहप्रिय ।
स्थूलब्रह्मकपालहार विलसद्भस्माङ्गरागाधुना
शम्भो शङ्कर चन्द्रशेखर विभो कुर्यां हरिद्रार्पणम् ॥

स्वामिन् किं नाम गोत्रं किमु कुलमपि ते का पिता का च माता
को वा बन्धुः क्व वा ते वसतिरपि च के भ्रातरो यातरः काः ।
सर्वं मे वक्तुमर्हस्यथ ननु भगवन् ज्ञातवृत्तान्तभावा
पश्चाद्वक्ष्यामि शम्भो तव च बहुमतं नाम संबोधनाद्वा ॥ २ ॥

स्वामिन् देवशिखामणे दनुजभिन्नेत्रारविन्दार्चितौ
दुष्टापस्मृतिदानवादिदलने निष्कोशनिस्त्रिंशकौ ।
भक्त्या संश्रयतां तु पङ्कजमृदू पादौ प्रदेहि प्रभो
शम्भो शङ्कर चन्द्रशेखर विभो कुर्यां हरिद्रार्पणम् ॥ ३ ॥

स्वामिन् लोकगुरो श्रितामरतरो कल्याणमूर्ते विभो
लीलामात्रशरासनीकृतधरौ बाणीकृतश्रीधरौ ।
लोकानामभयंकरौ किसलयश्रीगर्वसर्वंकषौ
देहि श्रीकरुणानिधे तव करौ कुर्यां हरिद्रार्पणम् ॥ ४ ॥

स्वामिन्निन्दुकृशानुभानुनयनैर्देदीप्यमानानन
श्रुत्यन्तैरपि चिन्तनीयमहिमन् संचिन्तनान्मुक्तिदम् ।
उद्यद्भानुसहस्रकोटिसदृशं देहि प्रसन्नं मुखं
शम्भो शङ्कर चन्द्रशेखर विभो कुर्यां हरिद्रार्पणम् ॥ ५ ॥

स्वामिन् सर्वसुरासुरादिमकुटप्रत्युप्तरत्नांकुर-
श्रीनीराजितपादपीठमहिताकुण्ठप्रभावार्पय ।
कल्पान्तायितकालकूटकबलश्रीनीलकण्ठं प्रभो
कस्तूरीघनसारकुंकुममयैर्लिम्पाम्यहं चन्दनैः ॥ ६ ॥

स्वामिन् निर्जरसार्वभौम जगतां सृष्टिस्थितिव्यत्यय-
क्रीडालोलकटाक्ष दीनजनतासंरक्षणे दीक्षित ।
अर्धेन्दुद्युतिविभ्रमं प्रविलसद्भस्मत्रिपुण्ड्रोज्ज्वलं
फालं दर्शय फालनेत्र कलये श्रीकुंकुमैश्चित्रकम् ॥ ७ ॥

स्वामिन् मौक्तिकपङ्क्तिभिर्विरचितां रत्नैर्विचित्रैश्शुभां
आरार्तिं कलये विलोकय दयां मय्यादरादर्पय ।

कामं पूरय पूर्णपात्रमपि मे देहि प्रसन्नोऽधुना
भूयात् ते शुभमङ्गलं जय जय श्रीचन्द्रमौळे सदा ॥ ८ ॥

स्वामिन् द्वौ तनयौ षडास्यगजराजास्यौ समुत्पादयन्
मय्यावेशितचित्तमप्यचलयन्नन्यामनालोकयन् ।
मद्वाक्यं शिरसा वहन् अनुदिनं मामेव संभावयन्
शम्भो कल्पशतं सुखी भव मया मूर्ध्न्यक्षताः सन्तु ते ॥

हास्यप्रायः समय इति हा किंचिदुक्तं दुरुक्तं
तत् क्षन्तव्यं शिव शिव मया साहसं मे सहस्व ।
ईक्षस्वारादतिकरुणया मां भजस्व प्रपन्नां
शम्भो स्वामिन् हृदयदयितां सन्निधौ सन्निधेहि ॥ १० ॥

**परमेश्वरः—**

काली करालीति च कालरात्रिः महोदरी रौद्रमुखीति दुर्गे ।
नामानुरूपा ननु भूमरूपा रूपेण च त्वं तव वेद्मि तत्त्वम् ॥

कान्ते कामितदानकल्पलतिके कल्याणि कामेश्वरि
प्रालेयाचलभागधेयकलिते श्रीमेनकाकन्यके ।
पादौ पङ्कजकोमलौ झणझणन्मञ्जीरशिञ्जारवौ
प्राणप्रेयसि पार्वति प्रदिश मे कुर्यां हरिद्रार्पणम् ॥ २ ॥

आर्ये विष्णुसहोदरि त्रिभुवनाधीशे नगेशात्मजे
सर्वाभीष्टफलप्रदौ सरसिजश्रीगर्वसर्वङ्कषौ ।
मा भैष्टेति शिवे समस्तजगतां न्यस्तौ पुरस्ताच्छुभौ
हस्तौ दर्शय विस्तरेण कलये भद्रे हरिद्रार्पणम् ॥ ३ ॥

मन्नाथे मम जीवितेश्वरि मदाधारे मदुद्धारके
आजङ्घ्य्रतटिल्लतासमुदयश्रीमन्मनोज्ञाङ्कके ।
राकापूर्णसुधानिधिप्रियसखं नित्यप्रसन्नं मुखं
प्राणप्रेयसि पार्वति प्रदिश मे कुर्यां हरिद्रार्पणम् ॥ ४ ॥

राजन्मन्थरराजहंसगमने राकेन्दुबिम्बानने
राजीवाक्षि गिरा निराकृतशुके वाराशिदारानुजे ।
कण्ठं दर्शय कम्बुकण्ठि गिरिजे कस्तूरिकाकुंकुम-
श्रीगन्धैः पटवासमुष्टिमभितो लिम्पाम्यहं सुन्दरि ॥ ५ ॥

बाले बालमृणालकोमलभुजे बिम्बाधरे सुन्दरि
आजद्दाडिमबीजराजिरदने भृङ्गालके भामिनि ।
चञ्चच्चन्द्रकलोज्ज्वलं च निटिलं देहि प्रिये कुंकुमैः
उद्यद्भास्वरभानुमण्डलनिभं कुर्यामहं चित्रकम् ॥ ६ ॥

मन्त्रान् वैदिकतान्त्रिकानपि वदन्नाशीर्वचोगुम्भिता-
नाशासान इतोऽपि भाग्यकलितान् भोगांश्च भोक्तुं त्वयि ।
मुक्ताविद्रुमचित्ररत्नरचितां माणिक्यपात्रे स्थितां
आरार्तिं कलये विलोकय शिवे भूयोऽस्तु ते मङ्गलम् ॥ ७ ॥

धर्मादावनुकूलनी मम सदा भूत्वा मदाराधिनी
मद्वाक्यैकरता मम प्रियकरी न्यस्तात्मतन्त्रा मयि ।
भुञ्जाना विभवांश्चतुर्मुखमुखान् पुत्रान् सृजन्ती शिवे
भूयाः कल्पशतं मया च सुखिनी मूर्ध्न्यक्षताः सन्तु ते ॥

# सन्धानकल्पवल्ली ॥

—— o ——

சிருங்ககிரியில் ஸ்ரீ மலஹானிகரேசுவரர் ஆலயத்தில் பிரதி
வருஷமும் மாசி மாதத்திய அமாவாஸையில் ரதோத்ஸவத்
திற்குப்பின் ஸந்தானோத்ஸவம் நடத்தப்படுகிறது. துஷ்ட
மிருகங்களின் உருவத்துடன் வந்து ஹிம்ஸைசெய்யும் அஸுரர்
களை வேட்டையாடி அழிக்கச் சென்ற பகவான் திரும்பிவரும்
பொழுது மிகவும் காலதாமதமாகவே அம்பிகை கோபம்
கொண்டுபகவானை உள்ளேவர அனுமதிக்கவில்லை இருவருக்
கும் விநோதஸம்பாஷணம் நடக்கிறது. பகவான் அவரைப்
பற்றிக் கூறும் ஒவ்வொரு வார்த்தைக்கும் விளையாட்டாக
வேறு அர்த்தம் செய்து கொண்டு மறுத்துவிடுகிறாள். கடைசி
யில் தன்முத்திரைமோதிரத்தைக்காட்டி அம்பாளை ஸமாதானப்
படுத்தி இருவரும் கேளீ கிருஹத்திற்குள் போகிறார்கள் இதை
உத்ஸவமாகக்கொண்டாடுகிறார்கள் கோபமடைந்த தம்பதி
களை சேர்த்துவைப்பதால் இதற்கு ஸந்தானோத்ஸவம் என்று
பெயர். இதன்முதல் சுலோகத்திலேயே ஸச்சிதானந்த யதீந்
திரர் இதை இயற்றியதாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. குருவம்ச
காவ்யம் 15வது ஸர்க்கத்தில் भूयोविनोदोक्तिभिः என்றும், இதன்
வ்யாக்யானத்தில் मृगयायात्रोत्तरपरिहासवचनैः என்றும் காணப்
படுவதால் 27வது பீடாதிபதிகளான ஸ்ரீஸச்சிதானந்தபாரதீ
ஸ்வாமிகள் இதை இயற்றியிருக்கலாம் என்று தெரிகிறது.
ஹரித்ரார்ப்பண சுலோகங்கள் ஸ்ரீ சங்கரக்ருபா மலர் 5–1, 2.
இதழ்களிலும், ஸந்தானகல்பவல்லீ சுலோகங்கள் மலர் 4
இதழ் 9லும் தமிழ் கருத்துடன் வெளிவந்திருக்கின்றன.

श्रीसच्चिदानन्दयतीन्द्रनामा करोमि संधानमिदं सुवृत्तम् ।
याथोपलब्धं प्रसमीक्ष्य सन्तः तुष्यन्तु कामेश्वरयोर्मनोज्ञम् ॥

श्रीमच्छृङ्गपुरीविहारमनसौ श्रीमद्भवानीमृडौ
माघे मासि शताङ्गसंभवमहोत्साहं विनिर्वर्त्य तौ ।
लीलां चक्रतुरीश्वरस्तु मृगयां गत्वा यदा ह्यभ्यगात्
द्रष्टुं कौतुकमम्बिकाऽस्य धिषणां बुद्ध्वा बभाषे सखीम् ॥

संप्रत्यागमनं निशीथसमये कस्येति देव्येरिते
 द्वाली तं समपृच्छदद्रिशरणं सोऽप्युत्तरं चाभणत् ।
मुग्धे भव्यकरः शिवाभिध इति श्रुत्वा वने संचरा-
 ध्यूढे गोपतिरस्मि चारय बहिः त्र्यक्षोऽस्मि वृक्षोपरि ॥ ३ ॥

श्रीधृत् त्वद्य सदेशमाप सहसा गच्छाङ्ग बृन्दावनं
 गङ्गाजीवनभृत् त्वहर्निशमहं सेवां विधेह्यञ्जसा ।
भो भो मानिनि तद्विधो न परमं कापालिकं विद्धि मां
 अम्भोजानन पत्तनं विश मुहुर्भिक्षामट प्रत्यहम् ॥ ४ ॥

तथा सुमनसां श्रयं भज भुजङ्गवेणि द्रुतं
 महानिबिडनिष्कुटे वसतु वृक्षवर्यो भवान् ।
लसद्द्विचरर्षभं भृशमवेहि नाहं तथा
 भवेयमिति चेत् पुनः पतगराड् भवोल्लासगः ॥ ५ ॥

त्रिदशाग्र्यमवेहि भामिनीमं सुदृढं तर्हि मनुष्यभावमेहि ।
भवतु प्रतिमा तथापि बर्हिर्मुखवर्यः किल चेदथाद्धि घासम् ॥

 इत्थं निशम्य भगवान् त्यज रोषमत्र
 शिक्षां विधेहि करुणाभरितैः कटाक्षैः ।
 प्रेम्णाऽस्य बन्धनविधिं परिकल्प्य कान्ते
 क्रीडागृहं विश मनोहरमायताक्षि ॥ ७ ॥

देवी प्रहस्य कुतुकात् मम देह्यभिज्ञां
 इत्यब्रवीत् अथ कलानिधिशेखरोऽसौ ।
दत्तोर्मिकः सरुचि सा गृहमाविशेति
 प्रत्यब्रवीद्गुरुतया गृहमाप तावत् ॥ ८ ॥

यथातथकथा यथा विरचिता पुरा सादरं
नतामरवरा तथा निगदिता मया श्रीमता ।
तनोतु मम सा कथा मुनिवरैः समाराधिता
महीसुरनिषेविता विततकीर्तिपारम्परीम् ॥ ९ ॥

मृगाङ्काङ्क नित्यं क्षमस्वापराधं मदीयं वदान्य त्वदन्यं न याचे ।
स्मरन्ति त्वदीयां नुतिं ये मनुष्याः भवन्तु प्रसादात् सदा लोकपूज्याः ॥

पठन्ति शृण्वन्ति लिखन्ति ये वै मदीयसन्धानसुकल्पवल्लीम् ।
भवन्तु ते शंकरकिंकरेषु प्रकृष्टकामाः खलु किं विचित्रम् ॥ ११ ॥

---

# शारदाकीर्तनम् - १

श्रीजगद्गुरु श्रीशृङ्गगिरि

श्रीसच्चिदानन्दभारतीमहास्वामिभिर्विरचितम् ।

இந்த மூன்று கீர்த்தனங்களும் ஸ்ரீ ஸச்சிதாநந்த பாரதீ ஸ்வாமிகளால் இயற்றப்பட்டதாக சிருங்கேரிமடம் புஸ்தக கோசத்திலுள்ள கையெழுத்துப்புத்தகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் ஸச்சிதானந்தபாரதீ என்ற பெயர் கொண்ட மூன்று ஆசார்யர்களில் இவைகளை இயற்றியவர் யார் என்பது நிச்சயமாகத்தெரியவில்லை. எப்படியும் சிருங்கேரி பீடாதிபதிகள் அருளிய கீர்த்தனங்கள் இவை என்பதில் ஸந்தேஹமில்லை மூன்றுவது கீர்த்தனத்தின் முடிவில் ஸ்ரீ ஸச்சிதாநந்த என்ற பெயரும் காணப்படுகிறது. இவற்றில் சங்கரகிருபா மலர் 5 இதழ் 8ல் முதல் இரண்டு கீர்த்தனங்களும் இதழ் 12ல் மூன்றுவது கீர்த்தனமும் ஸங்கீத ஸுதாகர களக்காடு ஸ்ரீ S. ராமநாராயணய்யரின் ஸ்வர அமைப்புடன் வெளிவந்திருக்கின்றன.

राग—सुरडि ] [ तालम्—त्रिपुट

(पल्लवि)

शारदे पाहि माम्
भो देवि शारदे पाहि माम्
देवि शुकवाणि निखिललोकेशि (शारदे)

(अनुपल्लवि)

भक्त पोषिणि कलुषशोषिणि
भक्तालिहृदयाब्ज दिनकररूपे (शारदे)

(चरणम्)

कुवलयलोचने कम्बुसुकण्ठि
कमनीयगुणनिकरे शरधिगम्भीरे
पुस्तकसुधाकुम्भ मुद्राक्षमालाङ्कित
हस्तशोभित तनुलते शिवे जननि (शारदे)

गीर्वाणादिभिः स्तुतपादारविन्दे
कलयतु नितरां वासं हृदि नित्यम् (शारदे)

वरहंसवाहने हंससनाभे
कंसारिविनुते शं सर्वदा देहि (शारदे)

## ஸ்ரீ சாரதா கீர்த்தனம் — 1

ராகம் — சுரடி] [தாளம் — திரிபுட

சாரதே பாஹி மாம்
போ தேவி சாரதே பாஹி மாம்
தேவி சுகவாணி நிகிலலோகேசி (சாரதே)

பக்த போஷிணி கலுஷ சோஷிணி
பக்தாளி ஹ்ருதயாப்ஜ திநகரரூபே (சாரதே)

குவலய லோசநே கம்புஸுகண்டி
கமநீய குண நிகரே சரதி கம்பீரே
புஸ்தக ஸுதாகும்ப முத்ராக்ஷமாலாங்கித
ஹஸ்த சோபித தநுலதே சிவே ஜநநி (சாரதே)

கீர்வாணுதிபி: ஸ்துத பாதாரவிந்தே
கலயது நிதராம் வாஸம் ஹ்ருதி நித்யம் (சாரதே)

வரஹம்ஸ வாஹநே ஹம்ஸ ஸநாபே
கம்ஸாரி விநுதே சம் ஸர்வதா தேஹி (சாரதே)

---

## श्रीशारदाकीर्तनम् - २

श्रीजगद्गुरु श्रीशृङ्गगिरि श्रीसच्चिदानन्दभारतीमहास्वामिभिः प्रणीतम् ।

राग-आनन्दभैरवि ] [ आदि-तालम्

(पल्लवि)

पाहि श्रीशारदे मामिह परदेवते बोधरूपे

(अनुपल्लवि)

पाहि पुराणि कञ्जाक्षि सुन्दरि सुरवरसन्नुते अम्ब (पाहि)

(चरणम्)

ता. कुक्षे क्रुतक्किण. किणक्षन्तरि. नी. स. ग. ग. म.
पपमम गरि. स. तक. तक. जग. जग. क्षन्तरि
किटतक गागा. माप. मगागारीस (पाहि)

अचलभक्तिगम्ये अखिलमहीसुरसेव्ये
महित योगिगणहृदय विलासे
पापशोषिणि परमकल्याणि (पाहि)

सकलमन्त्रफलदे शारदचन्द्रनिभानने
रुचिरहेममौक्तिककृतभूषणे
नीलकुन्तले निरुपमरूपे (पाहि)

निर्जित गजगमने नीरजभवजाये
सूरिलोककामितदात्रि
हरिहरार्चिते विपुलकीर्ते जय (पाहि)

## ஸ்ரீ சாரதா கீர்த்தனம் – 2

ராகம் – ஆனந்தபைரவி] [தாளம் – ஆதி

பல்லவி

பாஹி ஸ்ரீ சாரதே மாமிஹ
பரதேவதே போதரூபே (பாஹி)

அநுபல்லவி

பாஹி புராணி கஞ்ஜாக்ஷி
ஸுந்தரி ஸுரவர ஸந்நுதே அம்ப (பாஹி)

சரணம்

தா. குக்ஷே குதக்கிண கிண க்ஷந்தரி
நீ. ஸ. க. க ம. ப ப ம ம க ரி
ஸ. த க. த க. ஜ க. ஜ க. க்ஷந்தரி
கி ட த க. கா கா. மா ப. ம கா கா ரீ ஸ (பாஹி)

அசலபக்திகம்யே அகில மஹீஸுரஸேவ்யே
மஹித யோகிகண ஹ்ருதய விலாஸே
பாப சோஷிணி பரம கல்யாணி (பாஹி)

ஸகல மந்த்ரபலதே சாரதசந்த்ர நிபாநநே
ருசிர ஹேம மௌக்திக க்ருத பூஷணே
நீலகுந்தளே நிருபமரூபே (பாஹி)

நிர்ஜித கஜகமநே நீரஜ பவஜாயே
ஸூரிலோக காமித தாத்ரி
ஹரிஹரார்சிதே விபுகீர்த்தே ஜய (பாஹி)

# श्रीललिताकीर्तनम् ॥

श्रीजगद्गुरु शृङ्गगिरि श्रीसच्चिदानन्दभारतीप्रणीतम् ।

रागम् – बेगडा ] [ तालम् – त्रिपुट

(पल्लवि)

पालय परमेशपाणिगृहीति पार्वति
परिजनपावननिपुणे (पालय)

(अनुपल्लवि)

शंपासहोदरमकुटविभूषणे निर्जितपर्वेन्दुवदनाभिरामे
ग्रीवालसमानहारकलापे कार्मुकबाणपाशाङ्कुशहस्ते (पालय)

(चरणम् – १)

रशनाकिङ्किणीरवकलितावलग्ने रंभोपमानोरुनिहितोरुवीणे
वलमाननूपुरपरिशोभिचरणे परिपन्थिपर्वतप्रहितास्त्रविके
(पालय)

(चरणम् – २)

ललिते शिवाकारमञ्चविलासे पुरुहूतपङ्कजसंभवविनुते
कमलाक्षरूपिणि कमनीयकाये श्रीसच्चिदानन्दवाणीप्रसन्ने
(पालय)

## ஸ்ரீ லலிதா கீர்த்தனம்

ராகம் — பேகடா] [தாளம் — திரிபுட

### பல்லவி

பாலய பரமேச பாணிக்ருஹீதி பார்வதி
பரிஜந பாவந நிபுணே

### அநுபல்லவி

சம்பா ஸஹோதர மகுட விபூஷணே
நிர்ஜித பர்வேந்து வதநாபிராமே
க்ரீவா லஸமாந ஹாரகலாபே
கார்முக பாண பாசாங்குச ஹஸ்தே (பாலய)

### சரணம்

ரசநா கிங்கிணீ ரவ கலிதாவலக்நே
ரம்போபமாநோரு நிஹிதோரு வீணே
வலமாந நூபுர பரிசோபி சரணே
பரிபந்தி பர்வத பரிஹார பவிகே (பாலய)

லலிதே சிவாகார மஞ்ச விலாஸே
புருஹூத பங்கஜ ஸம்பவ விநுதே
கமலாக்ஷ ரூபிணி கமநீய காயே
ஸ்ரீ ஸச்சிதாநந்த வாணீ ப்ரஸந்நே (பாலய)

ஓம்

# ஸ்ரீ குருபரம்பரை

ஸதாசிவர்
நாராயணர்
ப்ரஹ்மா
வஸிஷ்டமஹரிஷி
சக்திமஹரிஷி
பராசரமஹரிஷி
வேதவ்யாஸர்
சுகாசார்யர்
கௌடபாதாசார்யர்
கோவிந்தபகவத்பாதாசார்யர்
ஸ்ரீசங்கரபகவத்பாதாசார்யர்

# ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீஜகத்குருபரம்பரை

1. ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாள்
2. ஸ்ரீ ஸுரேச்வராசார்யாள்
3. ஸ்ரீ நித்ய போதகனாசார்யாள்
4. ஸ்ரீ ஞானகனாசார்யாள்
5. ஸ்ரீ ஞானோத்தமாசார்யாள்
6. ஸ்ரீ ஞானகிரியாசர்ர்யாள்
7. ஸ்ரீ ஸிம்ஹகிரியாசார்யாள்
8. ஸ்ரீ ஈச்வரதீர்த்தர்
9. ஸ்ரீ நரஸிம்ஹதீர்த்தர்
10. ஸ்ரீ வித்யாசங்கரதீர்த்தர்

11. ஸ்ரீ பாரதீகிருஷ்ணதீர்த்தர்
12. ஸ்ரீ வித்யாரண்யர்
13. ஸ்ரீ சந்திரசேகரபாரதீ I
14. ஸ்ரீ நரஸிம்ஹபாரதீ I
15. ஸ்ரீ சந்திரசேகரபாரதீ II
16. ஸ்ரீ புருஷோத்தமபாரதீ I
17. ஸ்ரீ சங்கரானந்தபாரதீ
18. ஸ்ரீ சந்திரசேகர பாரதீ III
19. ஸ்ரீ நரஸிம்ஹபாரதீ II
20. ஸ்ரீ புருஷோத்தமபாரதீ II
21. ஸ்ரீ ராமசந்திரபாரதீ
22. ஸ்ரீ நரஸிம்ஹபாரதீ III
23. ஸ்ரீ நரஸிம்ஹபாரதீ IV
24. ஸ்ரீ அபிநவநரஸிம்ஹபாரதீ I
25. ஸ்ரீ ஸச்சிதாநந்தபாரதீ I
26. ஸ்ரீ நரஸிம்ஹபாரதீ V
27. ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ II
28. ஸ்ரீ அபிநவ ஸச்சிதானந்தபாரதீ I
29. ஸ்ரீ அபிநவநரஸிம்ஹபாரதீ II
30. ஸ்ரீ ஸச்சிதாநந்தபாரதீ III
31. ஸ்ரீ அபிநவஸச்சிதாநந்த பாரதீ II
32. ஸ்ரீ நரஸிம்ஹபாரதீ VI
33. ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவநரஸிம்ஹபாரதீ
34. ஸ்ரீ சந்திரசேகரபாரதீ IV
35. ஸ்ரீ அபிநவவித்யாதீர்த்தர்

